


சமைப்பதில் இன்பம்...
பரிமாறுவதில் பெருமை.
**ரூபி புளியாச்சே.**

இப்பெல்லாம் என் வீட்டில என் சமையலுக்கு ஏகப்பட்ட பாராட்டுக்கள். சாம்பார், ரசம், புளிக்குழம்பு, புளியோதரை எல்லாம் பிரமாதம். சூப்பர் டேஸ்ட். நான் உபயோகிப்பது **ரூபி புளியாச்சே.**

**ரூபி புளி** விதை, ஓடு, நார் நீக்கிச்சுத்தம் செய்யப்பட்டு முற்றிலும் சுகாதாரச் சூழலில் தயாரிக்கப்படுவது. ஜூஸ் நிறைந்தது. சிறிதளவு உபயோகித்தாலே போதும்.

எம்மனதையும் கொள்ளை கொள்ளும் அருமையான சமையலுக்கு **ரூபி புளி.**




A quality product by

**O.M.S. AGRO FOOD PRODUCTS CORPORATION**

3, Parangirinathapuram Compound, Pullalakottai Road
Virudhunagar - 626 001 Tamilnadu, India.

# ஜில்லோ ஜில்!

**வெ**யில் காலத்தில் மேற்கொண்டு எரிச்சலைக் கிளப்பாமல் குளிர்ச்சியாக ஏதாவது மேட்டர் பண்ணுங்கள் என்று ஆசிரியர் எவ்வளவோதான் சொல்லிப் பார்க்கிறார், சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வர?

ஏதோ எங்களால் ஆனது, இந்தப் படத்தை முதல் பக்கத்தில் போட்டு, மூன்று ‘மழை’ சம்பந்தப்பட்ட சிறுகதைகளைப் பிரசுரித்ததுதான்... ஹிஹி... பிளீஸ் அட்ஜஸ்ட்!

— *துணை ஆசிரியர் கூட்டணி*







கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

டெஸ்ட் தொடரைக் கோட்டை விட்டாலும் ஒன்-டே தொடரைக் கைப்பற்றிய மகிழ்ச்சியில் கையில் ஷாம்பெய்ன் பாட்டிலையும் முகத்தில் எக்கச்சக்க சிரிப்பையும் வைத்திருந்த ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணியின் கேப்டன் ஸ்டீவன் ராட்ஜர் வாஹைச் (அதாவது ஸ்டீவ் வாஹை) சந்தித்தோம்:

'நான்கு கேள்விகள் மட்டும் போதும்' என்ற கண்டிஷனுடன் 'கேளுங்கள்' என்றார்.

*டெஸ்ட் தொடரில் தோற்றது பற்றி...!*

எப்படியும் ஜெயித்துவிடலாம் என்ற அலட்சியம்தான் காரணம். கோல்கத்தா டெஸ்டில் மோசமாக பந்து வீசியதும், பேட்டிங் பண்ணியதும் தான் தோல்விக்குக் காரணம். எங்களின் மீது எதிர்பார்ப்பு இருந்தது. அதை நிறைவேற்ற முடியாதது தான் வருத்தமளிக்கும் விஷயம்.

லக்ஷ்மணும், டிராவிட்டும் அமர்க்களமாக ஆடியதும் ஒரு மைனஸ் பாயிண்ட். இப்போது குறித்துக் கொள்ளுங்கள், தலைக்கனம் மட்டும் ஏறாமல் இருந்தால் லக்ஷ்மண், சச்சினையும் பின்னுக்குத் தள்ளி விடுவார். I am just giving a caution to Sachin. அவ்வளவுதான்.

*தொடர்ந்து வெற்றிகளை குவிக்கும் உங்கள் அணியின் ரகசியம்?*

உழைப்பு, நம்பிக்கை, அரவணைப்பு, ஆஸி. தொப்பி மீது அபார காதல். இவை தான் வெற்றிக்குக் காரணம். எங்கள் அனைவரின் கூட்டு முயற்சியில் முடியாது என்பதே கிடையாது.

*இந்தத் தொடரில், உங்கள் அணி வீரர்கள் அம்பயர்களிடம் அநாகரிகமாக நடந்து கொண்டது உங்கள் மீதான நம்பிக்கையைக் குறைப்பதாக இருக்கிறதே!*

உதாரணமாக ஒன்று சொல்லுங்களேன்!

*கடைசி ஒன்-டே போட்டியில் கங்குலிக்கு எல்.பி.டபிள்யூ கொடுக்கவில்லை என்று முணுமுணுத்துக்கொண்டே அம்பயரின் தலையிலிருந்து தொப்பியை மெக்ராத் வேகமாகப் பிடுங்கினாரே?*

ஸாரி.... ரியலி ஸாரி...நான் கவனிக்கவில்லை. மெக்ராத்துக்காக நான் மன்னிப்புக் கோருகிறேன். அவரின் செயலுக்கு வருத்தப்படுகிறேன். மீண்டும் இம்மாதிரி நடக்காமல் பார்த்துக் கொள்கிறேன்.

*உங்கள் நாட்டுப் பத்திரிகை ஒன்று ஆஸி. வீரர்கள் பணம் வாங்கிக்கொண்டு தோற்றிருக்கலாம் என கருத்து கூறியிருப்பது பற்றி-*

(கோபமாக)... நான்சென்ஸ். நீங்கள் கூறியது பற்றி இப்போதுதான் நான் கேள்விப்படுகிறேன். அதைப் படித்துவிட்டு சட்டபூர்வ நடவடிக்கை எடுக்க உத்தரவிடுவேன். நாங்கள் நேர்மையானவர்கள். விளையாட்டில் வெற்றி, தோல்வி சகஜம். இம்மாதிரியான பழியை நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை!

**— நந்தினி**

படம்: **உமாமணி**

**'கோபம் வருகிறது!'**

*– ஸ்டீவ் வாஹ் மனைவி பேட்டி*

''டெஸ்ட் போட்டியில் தோற்று விட்டீர்கள். ஒன்-டே போட்டியிலும் தோற்றால் பிறகு ஆஸ்திரேலியா பக்கம் போக வேண்டாம். இங்கேயே இருந்து விடுங்கள்... உலக சாம்பியன் அணி என்று சொல்லிவிட்டு இப்படித் தோற்றால் எப்படி?''- ஸ்டீவ் வாஹிடம் இப்படி தைரியமாகச் சொன்னவர் அவர் மனைவி ஜெனிஃபர்!

''அப்புறம் வாஹ் என்ன சொன்னார் ஜெனி...''

''அவர் என்ன சொன்னார். கண்டிப்பாக ஜெயிப்போம் என்றார். ஜெயித்தார்'' என்று சிரிக்கும் ஜெனிஃபர் வாஹை காதலித்துத் திருமணம் செய்து கொண்டவர். ஆஸி.யில் பொழுது போவதற்காக ஒரு பூங்கொத்து விற்கும் கடையை நடத்தி வருகிறார் இவர்.

''வாஹ் எப்படி?''

''அவருக்குக் கோபம் என்றால் என்னவென்று தெரியாது. எனது பத்து வருட குடும்ப வாழ்க்கையில் அவர் கோபப்பட்டு நான் பார்த்ததேயில்லை. கோபப்படாமல் இருக்கக் கூடாது. அது தவறு. எப்போதும் சாந்தமாக இருப்பது நல்லதல்ல! சில நேரங்களிலாவது நம் கோபத்தைக் காட்ட வேண்டும். இந்தக் கோபம் அவரிடம் இல்லாதது எனக்குக் கோபத்தை ஏற்படுத்துகிறது.''

அமெரிக்காவில் ஒரு சின்ன நகரத்தில் ஒரு சின்ன சர்ச். அந்த சர்ச்சில் ஒரு பியானோ. அதை ரொம்ப பாதுகாப்பா வைச்சு ரொம்ப ரொம்ப ஸ்பெஷலான தினங்கள்ல மட்டுமே வாசிப்பாங்க. அதுகூட, ரொம்ப எக்ஸ்பர்ட் கலைஞர்கள்தான் வாசிக்கலாம். மத்தவங்க, கிட்டேயே போக முடியாது.

ஒரு ஞாயிற்றுக்கிழமை, சுமார் எண்பது வயசுக் கிழம் ஒண்ணு... பாதிரியார்கிட்டே வந்து "இன்னிக்கு நான் வாசிக்கறேனே பியானோவை"ன்னு அனுமதி கேட்டுதாம்.

அஃப்கோர்ஸ், பாதிரியார் ரொம்ப பொலைட்டா "ஸாரி, நோ!"ன்னு பதில் சொல் லிட்டார். "தப்பா நினைக்காதீங்க பெரியவரே... ஏதாச்சும் ஆனா அதை ரிப்பேர் பண்ணக்கூட ஆள் கிடைக்காது இன்னிக்கு..."ன்னுட்டார்.

பிரார்த்தனையெல்லாம் முடிஞ்சு, கூட்டம் கலையற நேரம், பாதிரியார் எல்லாரையும் வழியனுப்பிக்கிட்டிருந்தார். அப்போ திடீர்னு ஆரம்பிச்சது மியூசிக் - மனசுக்குள்ள ஊடுருவி அந்தராத்மாவைத் தொட்டு அசைச்ச அற்புத மான பியானோ மியூசிக்! வாசிச்சுக்கிட்டிருந் தவர்: முதல்ல பர்மிஷன் கேட்ட கிழவர்தான்! ஒரு மணி நேரத்துக்கு அத்தனை பேரும் அப்படியே உருகிப் போய் நின்னாங்க.

மியூசிக் முடிஞ்சதும் பாதிரியார் நேரே போய் தாத்தாவை வாழ்த்தி வணங்கினார். "நீங்க இப்பேர்ப்பட்ட இசை மேதைன்னு தெரியாது; ஸாரி!"ன்னார்.

தாத்தா சொன்னாராம்: "அதெல்லாம் ஒண்ணுமில்லே. நான் ஒரு பியானோ மேக்கர் - இந்தப் பியானோவைப் பண்ணினவன் நான் தான். அம்பது வருஷத்துக்கு முந்தி ஒரு ஸ்பெ ஷல் பரிசா இதைப் பண்ணி இந்த சர்ச்சுக்குக் கொடுத்தேன். இதுக்கு மரம் தேர்ந்தெடுக் கறதுலேருந்து வார்னிஷ் தடவற வரைக்கும் அத்தனையையும் அணு அணுவா நான்தான் பார்த்து செஞ்சேன்... இதை எங்க தொட்டா எப்படிப் பாடும்னு எனக்குத் தெரியாதா...?"

- இந்தக் கதை சுவாமி ராம தீர்த்தர்ன்றவர் சொன்னது. 'படைத்தவனிடத்திலே சரணடைந்தாயானால் தெய்வீகத் தன்மை உன்னிடமிருந்து வெளிப்படும்' என்பது மாரல் ஆஃப் தி ஸ்டோரி!

இந்தக் கதையை 'இன்ஸைட்'ங்கற குட்டி புக்ல படிச்சேன். டி.ஜி.என் ஃபவுன்டேஷனோட நியூஸ்லெட்டர்.

தெய்வீகத்தன்மையைக் காப்பாத்தணும்னா படைப்பாளி யாருன்னே தெரியக் கூடாதுன்றது தலிபான் பாலிஸி! அதனால தான் ஆஃப்கானிஸ்தான் டீ.வியில பக்தி மியூ ஸிக் போடறப்போ கூட பாடறவங்க முகத் துக்கு பதிலா ஒரு பூ ஜாடியைக் காட்டறாங்க! ஜஸ்ட் இமாஜின், பாம்பே ஜெய்ஸ்ரீயோ, சுதா ரகுநாதனோ, நித்யஸ்ரீயோ, காயத்ரியோ, ரஞ்சனியோ பாடறப்போ அவங்க முகத்துக் குப் பதிலா லான்ட்ஸ்கேப் பெயின்டிங்ஸை ஸ்டேஜ்ல வைச்சுட்டு வாய்ஸை மட்டும் கேட்டா எப்படி இருக்கும்...? யாருமே கச்சேரிக்கு வர மாட்டாங்க!

கலைக்கும் கலைஞருக்குமிடையிலே இருக்கற உயர்ந்த உறவைக் கண்கூடா பார்க் கறதே ஒரு டிவைன் எக்ஸ்பீரியன்ஸ்ன்றது தலிபானுக்குப் புரியாட்டி போகட்டும். நம்ம நாட்டுல இன்னும் யாரும் அதை நிராகரிக் கலை. அதனாலதான் எத்தனை ஸ்டுடியோ ரெகார்டிங்ஸ் காஸெட்டா வந்தாலும் நல்ல கச்சேரிகளுக்கு இன்னமும் ஒரு டெடிகேடட் ஆடியன்ஸ் இருக்கு.

சரி, எந்தக் கச்சேரியிலயும் கேட்க முடி யாத ஒரு கீர்த்தனை:

**அடாணா — ராகம்**

பந்தல்கால் நாட்டுவோமே
பாங்குடன் கூடி
(பந்தல்)

அந்தமுடனே அலர்மேல் மங்கை
நாதனின்
செந்தாமரைப் பாதம் சேர்ந்து
வணங்கி நாமும்
(பந்)

வாழையடி வாழையென வம்சம்
விளங்கிடவும்
வாழைகள் கட்டி பனங்காய்கள்
துலங்கிடவும்
ஆழிவண்ணன் கருணை அள்ளி
அளித்திடும்
பேழையாம் தென்னையுடன் பேரின்பம்
நிறைந்திட...
(பந்)

பழைய கால பவளக்கொடி டிராமா

# சற்றும் கோபிக்காத சம்பந்திகள்!







## சுமி சூப்பர் மார்க்கெட்





பாட்டு போல இருக்கேன்றீங்களா...? டிராமா சினிமாவெல்லாம் இல்லை! 'தென்னாட்டுக் கல்யாண முறைகள்'ன்ற புக்ல வருது இந்தப் பாட்டு (இதைப் போல இன்னும் மூணு டஜன் பாட்டு இருக்கும்). புக்கை எழுதினவர் நூறாண்டு கண்ட 'ஜகன்மோகினி' ஆசிரியை ஸ்ரீமதி வை.மு. கோதைநாயகி அம்மாள்! (ஆரூரான் பதிப்பகம், 76, மல்லன் பொன்னப்ப தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5)

வை.மு.கோ, தமிழ்நாட்டின் எட்டு நாள் கல்யாண பந்ததியை அப்படியே விவரிக்க ரேடியோ நிகழ்ச்சி நடத்தினாங்களாம். அஞ்சு வாரம் நீடிச்ச இந்த நிகழ்ச்சியில கூட, அந்தந்த சம்பிரதாயத்துக்கான பாட்டுக்களை முழுமையா தர முடியலையாம். இப்போ அத்தனையும் 'புக்'கா வந்திருக்கு. சம்பந்தி சண்டை உள்பட சகல சடங்குகளுக்கும் பாட்டு! ஸ்ரீராகத்துல சசவுக்கான பாட்டைச் சொல்லி இந்த வாரம் கருவைச் சுபமாக முடிக்கலாம்னு நினைக்கிறேன்.

*சம்மந்தியம்மாள் வந்தாளே!*
*சந்தோஷமாகவே*
*சம்மந்தி வந்தாள் சருக்கி விழுந்தாள்*
*சகல ஜனங்களும் சிரித்து மகிழ்ந்தார்*
*(சம்மந்தி)*
*பானைபோல் வயிறும் பட்டாணி*
*கண்ணும்*
*யானையின் ரூபமும் எலிவால்*
*பின்னலுடன்*
*(சம்மந்தி)*
*கர்தபக் குரலும் கங்காரு கழுத்தும்*
*நிர்த்தன மாடிட நேர்த்தியுள்ள எங்கள்*
*(சம்மந்தி...)*

பட்டுப் பாய் மேல் கேழ்வரகைத் தூவி வைச்சு சம்பந்தியை அழைப்பாங்களாம். அவங்க நடக்க முடியாம சறுக்கி, தடுமாறுற நேரத்துல இந்தப் பாட்டை அவிழ்த்து விடுவாங்களாம்! (ஒருவேளை அதனால்தான் சம்பந்தியை 'மந்தி' 'மந்தி' என்று புத்தகத்தில் அச்சிட்டிருக்கிறார்களோ?)

இந்த 'ஹாஸ்யப் பாட்டு முடிவதற்குள் உத்ஸாகத்தின் மிகுதியாலான கோஷத்தின் ஆதிக்கமே அதிகமாக ரீங்காரம் செய்யும். இந்த சம்பவத்திற்கு ஆனால் சம்மந்திகள் சற்றும் கோபிக்கவே மாட்டார்கள்'.

– வை.மு.கோ சத்தியம் செய்யாத குறையாச் சொல்கிறார்!

இந்த தேர்தல் சீசன்ல நம்ம அரசியல்வாதிங்க இதைப் படிச்சு கொஞ்சம் டாலரன்ஸ் வளர்த்துக்கலாம்!

**— சுமி**

**நில், கவனி, வெற்றிகொள்!**

# கல்கி - ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®

இணைந்து வழங்கும்

# இளைஞர் திருவிழா!



அன்பிற்கும் பண்பிற்கும் வணக்கத் திற்கும் உரிய வாசக தெய்வங்களே...

(தேர்தல் நெருங்கிட்டிருக்கிற பாதிப்புதான். வேறொன்றுமில்லை.. ஹி... ஹி!)

சென்ற மாதம் நடந்த '7வது சுவை' நிகழ்ச்சிக்குத் தாங்கள் அளித்த ஏகோபித்த வரவேற்பில் திரளான பங்கேற்பில் நாரதகான சபா அரங்கமே தளும்பித் தள்ளாடியது. அரங்கம் நிறைந்த கரகோஷம் அளித்த உற்சாகத்தில் இதோ அடுத்த அறிவிப்பு...

ஏப்ரல் மாத திருவிழா தலைப்பு என்ன தெரியுமா?

## 'பணம்'

துட்டு அய்யா துட்டு...! டப்பு சாமி டப்பு!

தனி நபரோ, வீடோ, நாடோ... சகலமும் நாசிக் கரன்ஸி மேலதானே நிக்குது...?

நாள் : 22.4.2001 (ஞாயிறு)

இடம் : **பாரதியார் இல்லம், திருவல்லிக்கேணி, சென்னை - 5**

நேரம் : மாலை 6 மணி

தலைமையுரை : **ஏவி.எம். சரவணன்**

சிறப்புரை : **சாலமன் பாப்பையா**

கலகலக்கும் 'மணி'யான நிகழ்ச்சி!

பின்குறிப்பு : சிரிக்கத் தெரிந்தவர்களுக்கு முன்னுரிமை தரப்படும்

**சிரிக்க... சிந்திக்க... சிறக்க...**

**வருங்கால ப்ருனே சுல்தான்களே, வருக, வருக!**

கல்யாணமானவுடன் ஒரு கணவன், தான்தான் பாஸ் என்று நினைத்துக் கொள்கிறான். சாஸ்திர சம்பிரதாயப்படி, சமூக கோட்பாடுபடி, அவன்தான் பாஸ், அதில் சந்தேகமில்லை. ஆனால், மூன்றே மாதங்களில் அந்தப் பதவி மனைவிக்குப் போய் விடுகிறது. கல்யாணமான ஆண்களிடம் போய்க் கேட்டுப் பாருங்கள். மனைவியைக் கலந்தாலோசிக்காமல் எத்தனை பேர் ஆயிரம் ரூபாய் செலவழித்திருப்பார்கள் என்று. ஒருவர்கூட கைத்தூக்கமாட்டார். இதே கேள்வியை மனைவிகளிடம் கேட்டுப் பாருங்கள். காட்ரெஜ் பீரோவைத் திறந்து காட்டி, 'இந்த நகைகளையும் வெள்ளிப் பாத்திரங்களையும் கேட்டுக் கேட்டுச் செய்து கொண்டிருந்தால் பெண் கல்யாணத்துக்குச் சீர் சேர்ந்த மாதிரிதான்!' என்பார்கள்.

மனைவி, 'பாஸ்' என்ற பதவியை டக்கென்று பிடித்துக் கொள்வதற்கு என்ன காரணம்?

அடுத்து, அவனுடைய ஈகோவை அவள் பூர்த்தி செய்யும் விதம்.

மும்பையில் வயதான தென்னிந்திய ஜோடி என் வீட்டுக்கருகே வசிக்கிறார்கள்.

ஃபில்டர் காப்பிக்கு ஆசைப்பட்டுக் கொண்டு, ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் அவர்கள் வீட்டுக்குப் போய்விடுவேன். மனைவி, காப்பிப் பொடி டப்பாவை கணவனிடம் கொண்டு வந்து கொடுத்து, 'மூடி டைட்டாக இருக்கிறது, திறந்து தாருங்கள்' என்பார். இவரும் திறந்து கொடுப்பார். இரண்டு மூன்று தடவை இதைக் கவனித்த நான், நான்காம் தடவை, 'கொடுங்கள், நான் திறக்கிறேன்' என்றேன். அதற்கு அவருடைய மனைவி எனக்கு மட்டும் கேட்கிற மாதிரி கிசுகிசுத்தார். 'அறுபது வயதிலும், தான் இன்னும் பலத்தை இழக்கவில்லை என்ற உணர்வு வயதான காலத்தில் ரொம்பவும் முக்கியம். விடுங்கள், அவர் திறக்கட்டும்!'

# மனையிடம் பயிலுங்கள்!

தன்னுடைய பாஸை, கணவனைக் கையாளும் யுக்தி. அந்த யுக்தியில் மூன்று முக்கியமான விஷயங்கள்.

ஒன்று, உணர்ச்சிபூர்வமான பாதுகாப்பை அவள் ஏற்படுத்தும் விதம்.

ஒரு அமெரிக்கனிடம் கேட்டேன். வேலை பிடிக்கவில்லை என்றால் விட்டு விடுவதுதானே என்று. அதற்கு அவன், 'வேலை போய்விட்டால், மனைவி என்னைவிட்டுப் போய்விடுவாள்!' என்றான். ஆனால் இந்திய மனைவியைப் பாருங்கள். நோன்பு இருக்கிறாள். காரணம் கேட்டால், ஏழேழு ஜென்மத்துக்கும் இதே கணவன் வேண்டும் என்று நோன்பிருந்தேன் என்கிறாள். நோன்புக்கு பலன் கிடைக்கலாம், கிடைக்காமல் போகலாம்.

ஆனால், இது கணவனுக்கு எவ்வளவு பெரிய பாதுகாப்பு உணர்ச்சியைக் கொடுக்கிறது தெரியுமா?

கணவனின் ஈகோவை எப்படி பூர்த்தி பண்ணுகிறார் பாருங்கள்.

மூன்றாவது, 'மானேஜ்மெண்ட் பை அட்ரிஷன்' என்று சொல்வோம். அதாவது, பெரிய அளவில் எதிர்ப்பு, சண்டை, சச்சரவு என்று போகாமல் நச்சரித்தே காரியத்தைச் சாதித்துக் கொள்வது. டீவி. வேண்டும் என்று கேட்கிறாள் என்று வைத்துக் கொள்ளுங்கள். வேண்டாம் என்று ஒரு தடவை சொல்லலாம், இரண்டு தடவை சொல்லலாம். மிஞ்சி மிஞ்சிப் போனால் நாலு தடவை சொல்லலாம். அதற்கப்புறம் வாங்கிக் கொடுத்துவிட தோன்றும் அல்லவா? அதுதான் விஷயமே.

ஆபீஸில் நிறைய மானேஜர்கள் அங்கலாய்ப்பதைக் கேட்டிருக்கிறேன். 'பாஸைக்கூட சமாளித்துவிடலாம் போல் இருக்கிறது, நமக்குக் கீழே வேலை பார்ப்பவர்களைச் சமாளிப்பதற்குள் உன் பாடு

என் பாடு என்றாகிவிடுகின்றது!' என்று.

வாழ்க்கையிலேயே சமாளிப்பதற்கு கடினமான பேர்வழி யார் தெரியுமா? புதிதாகப் பிறந்த தம்பியையோ தங்கையையோ பார்த்துப் பொறாமைப்படும் தலைச்சன் குழந்தைதான்! 3 வருஷங்கள் தன்மீது இருந்த எல்லோருடைய கவனமும், திடீரென காணாமல் போனவுடன் அது எப்படியெல்லாம் தன்னுடைய ஆதங்கத்தை வெளிப்படுத்துகிறது? காரணமே இல்லாமல் கலாட்டா செய்வதும், சாமான்களை உடைப்பதும், தம்பிப் பாப்பாவைக் கிள்ளி வைப்பதும், என்ன பாடுபடுத்துகிறது? உடனே அம்மா என்ன செய்கிறாள்? 3 வயது பெண்ணை அழைத்து, 'இது உன்னோட தம்பி பாப்பா இல்லையா, நீ தான் அவனை கவனிச்சுக்கணும். நீயும், நானுமா சேர்ந்துதான் அவனை வளர்க்கணும். இனிமே நான் குளிப்பாட்டும்போது நீ தான் வந்து சோப்புப் போடணும். நான் துவட்டிவிட்டப்புறம் நீ தான் பவுடர் போடணும்!' என்கிறாள்.

15 நாட்களில் அந்த மூன்று வயதுக் குழந்தை இன்னொரு தாயாக மாறிவிடுகிறது. தாய்க்கு இருக்கும் அன்பு, பரிவு, பொறுப்புணர்ச்சி எல்லாம் வந்துவிடுகிறது.

அம்மா கையாளும் இந்த உத்தியைத் தான் மானேஜ்மென்ட்டில் 'டெலிகேஷன்' என்று சொல்கிறோம். அதாவது ஒப்படைத்தல்.

சிக்கலான அஸிஸ்டெண்டுகளைச் சமாளிக்க ஒரே வழி டெலிகேஷன்.

ஆனால் பல மானேஜர்கள் வேலையைச் சாமானியமாக ஒப்படைக்க மாட்டார்கள். காரணம் கேட்டால், 'அவனா? கெடுத்துக் குட்டிச்சுவராக்கிவிடுவான்' என்பார்கள். உங்கள் மனைவியைப் பாருங்கள்.

உங்கள் டீன்-ஏஜ் மகளுக்கு மனைவி சமையல் கற்றுக் கொடுக்கும் விதத்தைப் பாருங்கள்.

'அம்மா, நான் இன்னைக்கு சாம்பார் பண்ணிப் பார்க்கட்டுமா?' என்பாள் மகள். மனைவி உடனே 'ஆ அதுக்கென்ன, தாராளமாய்ப் பண்ணு. ஆனா, பருப்பு, மிளகாய், புளி, உப்பு இதெல்லாம் எவ்வளவு போடப்போறே அப்படீங்கறதைச் சொல்லிட்டுப் போடு!' பெண்ணும் ஓடி வந்து ஓடி வந்து அளவைக் காண்பித்துவிட்டுப் போடுவாள். சாம்பார் ரெடியாகிவிடும். நீங்கள் சாப்பிடுவதற்கு முன் மனைவி உங்கள் காதில் கிசுகிசுப்பாள்... "பொண்ணு தான் சாம்பார் பண்ணியிருக்காளாக்கும், சாப்பிட்டுவிட்டு ரெண்டு வார்த்தை பாராட்டிச் சொல்லுங்க." என்று. இது முதல் படி.

இரண்டு மூன்று தடவை இது நடக்கும். பிறகு அம்மா சொல்வாள். 'அளவெல்லாம் சரியாகத்தான் போடறே... அதனாலே ஏதாவது சந்தேகம் இருந்தாலோ, சாம்பாரின் நிறம் வித்தியாசமாகத் தோணினாலோ, பருப்பு வேகலைன்னாலோ மட்டும் கூப்பிடு!' இது இரண்டாம் படி.

பெண்ணுக்குத் தன்னம்பிக்கை வந்துவிடுகிறது. அவளாகவே களத்தில் இறங்கி விடுகிறாள். ஆனால், அம்மா, அவள் எதையோ செய்யட்டும் என்று அப்படியே விட்டுவிடுவதில்லை. பால் எடுக்கப் போகிற சாக்கில் ஓரக்கண்ணால் பெண் என்ன செய்கிறாள் என்று ஒரு ரவுண்டு பார்த்துவிட்டு வருவாள். இது மூன்றாம் படி.

அம்மாவுக்குத் திருப்தி வந்துவிட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள். "அடுத்த ஞாயிற்றுக் கிழமை விருந்திலே நீ தான் சாம்பார் பண்ணப் போறே!" என்று ஒரே போடாகப் போட்டுவிடுவாள். இதுதான் நான்காம் படி.

'டெலிகேஷன்' என்பதில் 4 படிகள் இருக்கின்றன. பிளான் அண்டு செக் - அதாவது, கலந்தாலோசித்துச் செய்யச் சொல்வது. செக்-இன் டிரபிள் - பிரச்னை வரும்போது கலந்தாலோசிக்கச் சொல்வது. ஃபீட்-பாக் ஸிஸ்டம் - ஊழியர் சரியாக வேலை செய்கிறாரா என்று நோட்டம் விடுவது. அப்டிகேஷன் - அதாவது பொறுப்பை ஊழியரிடம் முழுமையாகத் துறந்து விடுவது.

மனைவி இதைத்தானே செய்தாள்?

இப்பொழுது என்ன புரிகிறது? யாரிடம் வேண்டுமானாலும் வேலையை ஒப்படைக்கலாம் என்றுதானே?

ஆனால் சில மானேஜர்கள் ஊழியர்களிடம் வேலையை ஒப்படைக்காததற்கு என்ன காரணம் தெரியுமா? அவர்கள் வேலையை ஒழுங்காகச் செய்ய மாட்டார்கள் என்பதற்காக அல்ல. எங்கே, அவர்கள் தன்னைவிட நன்றாகச் செய்து விடுவார்களோ என்ற பயத்தில்தான்.

உங்கள் மனைவியைப் பாருங்கள். வெளியூரில் புதுக்குடித்தனம் ஆரம்பித்துவிட்ட உங்களின் மகளைப் பார்த்துவிட்டு வந்திருப்பாள் அவள் ஸ்நேகிதி. 'உன்னைவிட உன் மகள் பிரமாதமாய்ச் சமைத்திருக்கிறாள்!' என்று சொல்லுவாள். அப்போது உங்கள் மனைவியின் முகத்தைப் பாருங்களேன். சந்தோஷமும் பெருமையும் பொங்கும். அதுதான் ப்ரொஃபெஷனலிஸம். அதாவது, எவன் ஒருவன் தன்னுடைய சிஷ்யன் தன்னை மிஞ்சிவிட்டான் என்று தெரிந்ததும் சந்தோஷப்படுகிறானோ, அவன்தான் ப்ரொஃபெஷனல்.

பல மானேஜர்கள் புகார் சொல்வதைக் கேட்டிருக்கிறேன் - 'அனுபவம் இருப்பவனுக்குத் தகுதி இல்லை, தகுதி இருப்பவனுக்கு அனுபவம் இல்லை. இரண்டும் இருப்பவனுக்கு முன்னேற வேண்டும் என்ற வேகம் இல்லை' என்று. 'அவர்கள் முன்னேறும்வரை காத்திருக்காதீர்கள், நீங்கள் அவர்களை முன்னேறச் செய்யுங்கள்' என்று நான் சொல்வதுண்டு.

உங்களுடைய 11 மாத குழந்தைக்கு மனைவி எப்படி நடை பயிலக் கற்றுக் கொடுக்கிறாள்?

அம்மாவின் புடவையைக் கையில் கசக்கிக் கொண்டு நடக்கும் குழந்தையிடம் என்ன சொல்கிறாள்?

'இங்கே பாரு, நீ பெரீய்...ய பையனா ஆயிட்டே இல்லையா, அம்மாவைப் பிடிச்சுக்காம நடக்கணும்!''

''நான் டும்மான்னு விழுந்திடுவேன்!''

''விழவேமாட்டே, எங்கே, வா, பார்க்கலாம். ஓடிவா, ஓடி வா..!''

குழந்தை ஒரு அடி எடுத்து வைக்கிறது. அம்மா கைதட்டுகிறாள். அடுத்த அடி எடுத்து வைக்கிறது. இன்னும் பலமாகக் கை தட்டுகிறாள். மூன்றாவது அடி எடுத்து வைக்கும்போது குழந்தை விழுந்துவிடுகிறது. உடனே அம்மா என்ன செய்கிறாள்? ஓடிப் போய் குழந்தையை வாரிக்கொண்டு தரையை ஒரு மிதி மிதிக்கிறாள்... 'பாழாய்ப் போன தரை, குழந்தை அழகா நடந்து வரும்போது குறுக்கே வந்து தடுக்கி விட்டிடுச்சு...'

மூன்று முக்கியமான மானேஜ்மெண்ட் யுக்திகள் கையாளப்படுவதைப் பாருங்கள்.

1. நம்பிக்கை ஊட்டுகிறாள். (நீ பெரிய பையனாயிட்டே...)

2. முயற்சியைப் பாராட்டுகிறாள். (கை தட்டி...)

3. தோல்வியில் தோள் கொடுக்கிறாள்.

மானேஜ்மெண்ட் ஸ்பெஷலிஸ்டுகள் அடுத்த முக்கியமான பிரச்னையாகக் கருதுவது, மோடிவேஷன், அதாவது உந்துதல்.

பால் வாங்குவதற்காக முதலில் எழுந்து கொள்வதும் மனைவிதான். இரவில் சமையல் திண்ணையைக் கழுவிவிட்டு கடைசியாக வந்து படுப்பதும் அவள் தான். ஞாயிற்றுக்கிழமை, பண்டிகை என்றால் நமக்கு லீவு உண்டு. ஆனால், அவளுக்கோ அதிக வேலை. இருப்பினும் முகம் சுளிக்காமல் வளைய வரும் அவளுக்கு உந்துதலாக இருப்பது எது?

இந்த மோடிவேஷனுக்கு மேனேஜ்மாண்டில் இரண்டு விஷயங்கள் அத்தியாவசியமாகக் கருதப்படுவதுண்டு. இரண்டுமே மனைவியிடம் அளவுக்கதிகமாகவே இருப்பதைக் கவனியுங்கள்.

1. சென்ஸ் ஆஃப் ஐடெண்டிடி. இது என்னுடைய நிறுவனம் என்கிற நினைப்புடன் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாக ஒரு ஊழியன் சொந்தம் கொண்டாடுகிறானோ அவ்வளவுக்கு அவ்வளவு உந்துதல் அதிகமாக இருக்கும்.

கல்யாணமான சில நாட்களிலேயே ஒரு பெண், என் வீடு, என் குடும்பம் என்று எவ்வளவு சொந்தம் கொண்டாடுகிறாள்? 'என் வீடு' என்று அவள் சொல்வது இருபது வருஷமாக வாழ்ந்த தாய் வீட்டை அல்ல. இருபது நாட்களாக அவள் வசிக்கும் புகுந்த வீட்டை!

சமஸ்கிருதத்தில் குடும்பத் தலைவியை 'க்ரஹிணி' என்று சொல்வதுண்டு. அதாவது வீட்டின் சொந்தக்காரி. கணவனை க்ரஹஸ்தன் என்று சொல்கிறோம். அதாவது, வீட்டில் வசிப்பவன், அவ்வளவுதான்.

2. சென்ஸ் ஆஃப் இம்பார்டென்ஸ்: தான் இல்லையென்றால் அலுவலகம் தலைகீழ் ஆகிவிடும் என்று ஓர் ஊழியன் நம்பும்போது உந்துதல் அதிகமாகிறது.

உங்கள் மாமியார், மனைவியிடம் 'இன்னும் இரண்டு நாள் இருந்துவிட்டுத்

தான் போயேன்!' என்று சொல்லும் போது மனைவி என்ன சொல்கிறாள்? 'என்னம்மா புரியாமே பேசறே? குழந்தைகள் தடுமாறிப் போய்டுவாங்க. பரீட்சை வேற. போதாததுக்கு இவருக்கும் ஆடிட் நேரம். வேலைக்காரிக்கு நான் இல்லாமல் சரிப்படாது! நான் கிளம்பறேன்!''

அவள் தன்னை எவ்வளவு முக்கியமானவளாகக் கருதுகிறாள் பாருங்கள்.

'எனக்கு வண்டி வண்டியாகப் பொறுப்புகள் இருக்கு. ஆனா இந்த ஆபீஸில் எனக்குக் கொடுத்திருக்கிற அதிகாரம் சைஃபர்!' என்பார்கள் சில மானேஜர்கள். உங்கள் மனைவியைப் பாருங்கள். அவளுக்கு அதிகாரம் எங்கிருந்து வருகிறது என்று யோசியுங்கள்.

பொதுவாக அதிகாரம் என்பது மூன்று வழிகளில் வரலாம். ஒன்று. பதவி தரும் அதிகாரம். இரண்டு. உங்களுடைய சாமர்த்தியம் தரும் அதிகாரம். மூன்று நீங்கள் காட்டும் அக்கறையின் பால் வரும் அதிகாரம்.

முதல் இரண்டும் பிரயோஜனப்படாது. காரணம், மானேஜர் என்ற பதவி தரும் அதிகாரத்தை வைத்துக் கொண்டு நீங்கள் எல்லோரையும் மிரட்டிக் கொண்டிருந்தால் எதிர்ப்பும் வெறுப்பும் தான் கிளம்புமே தவிர வேலை ஆகாது. அடுத்து. உங்களுடைய திறமை தரும் அதிகாரம். உங்களைவிட திறமையான ஒருவன் வந்து சேர்ந்தால், உங்களின் கதி? ஆனால் அக்கறையின்பால் வரும் அதிகாரம் இருக்கிறதே அது நிரந்தரம். அதுதான் உங்கள் மனைவி உண்டு பண்ணிக் கொள்ளும் அதிகாரம்.

ஒரு நாள் எந்த முன்னறிவிப்பும் இல்லாமல் ஒரு பார்ட்டி ஏற்பாடாகி இருந்தது அலுவலகத்தில். எட்டு மணி ஆனவுடன் என் நண்பர் 'சடக்' என்று எழுந்து விட்டார்.

'நான் கிளம்பறேன்'

'ஏன், சாப்பிட்டுவிட்டுப் போகலாமே?'

'இல்லை மனைவி சாப்பிடாமல் காத்திருப்பாள், நான் கிளம்பறேன்.'

'7.30 மணி வரை நீங்கள் வரவில்லை என்றதும் ஊகித்திருக்கமாட்டாரா? ஏதாவது சாப்பிட்டிருப்பார்.'

'இல்லை உங்களுக்கு என் மனைவியைப் பற்றித் தெரியாது. நான் போகும் வரை நிச்சயம் சாப்பிடமாட்டாள்.'

என் பதிலைக்கூட எதிர்பார்க்காமல் போயே போய்விட்டார் நண்பர்.

மனைவி காட்டும் அக்கறை அவரை எவ்வளவு தூரம் கட்டிப் போட்டிருக்கிறது பார்த்தீர்களா?

அக்கறை தரும் அதிகாரம் இருக்கிறதே, அதற்கு ஈடு இணையே இல்லை.

இப்போது சொல்லுங்கள், உங்கள் மனைவியிடம் இல்லாத விஷயங்களையா ஒரு மானேஜ்மெண்ட் புத்தகம் சொல்லிவிடப் போகிறது?


பேராசிரியர் **ஷாரு ரங்னேகர்**

*மானேஜ்மெண்ட் கன்சல்டண்ட், மும்பை.*


*மானேஜ்மெண்ட் டிரெய்னிங்கை குறிக்கோளாகக் கொண்டு இயங்கும் ISTD (இந்தியன் சொஸைட்டி ஃபார் டிரெய்னிங் அண்டு டெவலப்மெண்ட்) என்ற அமைப்பின் சென்னை கிளை ஏற்பாடு செய்திருந்த மீட்டிங்கில் பேராசிரியர் சொன்ன கருத்துகள் இவை.*


தொகுப்பு : **ISTD துணைத் தலைவர் எஸ். வெங்கட்ராமன்**

உதவி : **கிருஷ்ணா சிதம்பரம்**

படங்கள் : **செல்வம்**

# நடக்கும் என்பார்; நடக்கும்!

## மேஷம்



இந்த வாரம் சந்தோஷத்துல திக்குமுக்காடப் போறீங்க. நீங்க நினைக்கிற விஷயங்கள் எல்லாம் நடக்கும். மதிப்பும் அந்தஸ்தும் ஜில்லுனு உயரப் போகுது. எதிர்ப்புகள் தலை தெறிக்க ஓடும். அரசியல்வாதிகள் எதிலும் அவசரப்பட வேண்டாம். சின்ன சின்னப் பிரச்னைகள் வந்து இம்சைப் பண்ணும். பெரிசா கவலைப்படாதீங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழும் பாராட்டும் கூடப்போகுது. அலைச்சலைத் தவிர்த்திடுங்க.

## ரிஷபம்



சுக்ரனும், புதனும் உங்களுக்குச் சாதகமா இருக்கறதால முக்கியமான சில திட்டங்கள் எண்ணங்களை நிறைவேத்துவீங்க. தோஸ்துங்க, சொந்தக்காரங்க எல்லாம் உதவி பண்ண ஓடி வரப்போறாங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பாராட்டு மழை பொழியப் போகுது. பெண்கள் புதுசா ட்ரெஸ், நகைகள் வாங்க சான்ஸ் இருக்கு. கணவன் மனைவிக்குள்ள இது வரை இருந்த தம்மாத்தூண்டு பிரச்னைகள் எல்லாம் இப்ப மாயமாயிடும். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கையா இருங்க. ஏமாத்திப்புடுவாங்க. உஷார்!

## மிதுனம்



வேலை தேடி காத்திருந்தவங்களுக்கு வேலை வாய்ப்பு கதவைத் தட்டும். சிலருக்குப் பதவி உயர்வு, சம்பள உயர்வு கிடைக்கும். உங்க புத்திசாலித்தனம் வெளிப்படற மாதிரி ஏதாவது காரியம் பண்ணி கலக்கப் போறீங்க. இதுவரை எரிச்சல்படுத்தியப் பிரச்னைகள் இப்ப காணாம போயிடும். அரசியல்வாதிகளுக்கு மேடை மேடையா வாழ்த்து குவியப் போகுது. வீண் வாக்குவாதம் சண்டை சச்சரவுகளைத் தவிர்க்கறது நல்லது. எதிலயும் அவசரப்படாம இருந்தா பலன் இருக்கு. வெளியூர் பயணத்தை ஒத்தி வைக்கறது பெஸ்ட்.

## கடகம்



இதுவரை மனசுக்குள்ள போட்டு அமுக்கி வச்சிருக்கிற எண்ணங்கள் இப்ப நிறைவேறும். எதிர்ப்புகள் மறையும். குடும்பத்துல மகிழ்ச்சி மழை தூவும். கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதற்கான சந்தர்ப்பம் வரும். பண நடமாட்டத்துக்குப் பஞ்சம் இருக்காது. வழக்கு விவகாரங்கள்ல உங்களுக்குச் சாதகமான தீர்ப்பு வர வாய்ப்பிருக்கு. கலைத் துறையைச் சேர்ந்தவங்க வெற்றி மேல வெற்றியைக் குவிக்கப் போறீங்க. ஜாலி, டூர், விருந்துனு பொழுதைக் கழிக்க வாய்ப்பிருக்கு.

## சிம்மம்



உங்க முக வசீகரம் அதிகரிக்கும். பேச்சுத் திறமையால மத்தவங்களை மயக்கற கலை உங்களுக்கு இப்ப வரும். உங்க திறமை, புத்திசாலித்தனம் வெளிப்படற மாதிரி ஏதாவது பண்ணுவீங்க. பண விஷயத்துல பஞ்சம் இல்லை. சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகள் தேடி வரப் போகுது. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வந்து கதவைத் தட்டும். அலைச்சலைத் தவிர்க்கறது நல்லது. உஷ்ண சம்பந்தமான பாதிப்பு வரலாம். எந்தத் தொழில் செஞ்சாலும் முழுகவனத்தோடு செஞ்சா மேலதிகாரிங்க திட்டுகள்ல இருந்து தப்பிக்கலாம்.

## கன்னி



அதிர்ஷ்டம் உங்களைத் தேடி வந்திட்டிருக்கு. நீங்களே வியக்கற மாதிரி ஏதாவது சம்பவம் நடக்கும். பணம் பல வழிகள்ல வந்து பர்ஸை நிரப்பும். குடும்பத்துல சுபகாரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு. வீட்ல மகிழ்ச்சி துள்ளிக் குதிக்கும். குதூகலத்துக்குப் பஞ்சமிருக்காது. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும். எதிரிகள் விலகிப் போவாங்க. எதிர்ப்புகள் இருக்காது. அம்மா, அப்பா உடல் நலன்ல கவனம் வையுங்க. அலைச்சலைத் தவிர்த்தா வயிறு சம்பந்தமான நோயிலிருந்து தப்பலாம்.

ஏப்ரல் 18 முதல் 24 வரை

## துலாம்



அரசியல்வாதிகள் கொஞ்சம் வாயை அடக்கினால் பிரச்னைகளிலிருந்து தப்பலாம். எதிலயும் கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்கறது நல்லது. திடீர்னு பக்தி மார்க்கத்துக்கு மனசு திரும்பும். இதனால மனசுல தெளிவு பிறக்கும். கம்ப்யூட்டர் விஞ்ஞானத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கெல்லாம் பாராட்டுக் குவியப் போகுது. சில கரடுமுரடான காரியங்களில் இறங்கி வெற்றிபெறப் போறீங்க. இதனால பாராட்டும் புகழும் கூடும். இது வரை டென்ஷன் ஏற்படுத்திய எதிரிகள் இப்ப காணாம போயிடுவாங்க.

## தனுசு



இந்த வாரம் கொஞ்சம் அடக்கி வாசிக்கறது நல்லது. எந்தக் காரியத்தையும் போராடிதான் ஜெயிக்க வேண்டி வரும். பிரச்னைகள் குறுக்கீடுகள் வந்து டென்ஷன் பண்ணும். பெரியவங்க ஆலோசனையைக் கேட்டா இதிலிருந்து தப்பிக்கலாம். பணவிஷயத்துல கொஞ்சம் கறாரா இருந்துக்குங்க. வீண் அலைச்சலைத் தவிர்த்திடுங்க. பயணம் போகறதைத் தள்ளிப் போடுங்க. புதியவங்ககிட்ட எச்சரிகையோட பழகுங்க. வாயை விடாம இருக்கறது நல்லது. அவசரம், பதற்றத்தைத் தவிர்க்கறது நல்லது.

## கும்பம்



உங்களோட முக அழகு திடீர்னு கூடும். செயல்ல வேகம் அதிகரிக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு அவங்களே ஆச்சரியப்படும்படி புகழும் பாராட்டும் கிடைக்கும். குடும்பத்துல மகிழ்ச்சிக்குப் பஞ்சம் இருக்காது. மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் அதிகரிக்கும். நினைச்ச காரியத்தை ஒத்த கால்ல நின்னாவது முடிப்பீங்க. இராணுவம், சட்டம், காவல் துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் பெயர் புகழ் பாராட்டு குவியப் போகுது. சிலருக்கு விருதுகள் கிடைக்க வாய்ப்பிருக்கு.

## விருச்சிகம்



உங்க திறமை வெளிப்படற நேரம் இது. 'தொட்டதெல்லாம் பொன்னாகும்'ங்கற மாதிரி எந்தக் காரியத்தைத் தொட்டாலும் வெற்றிதான் உங்களுக்கு. பொருளாதார நிலையில பிரச்னை இல்லை. வீட்ல நல்ல காரியம் நடக்க சான்ஸ் இருக்கு. இதுவரை 'டும்டும்' ஆகாதவங்களுக்கு அதுக்கான சூழல் ஏற்படும். சிலருக்குப் 'பாப்பா' பாக்யம் கிடைக்கப் போகுது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வரவேற்பு கூடும். வருமானம் பல வழிகளிலிருந்து வந்து பையை நிரப்பும்.

## மகரம்



அரசியல்வாதிகளுக்குப் புதிய திருப்பம் காத்திருக்கு. உங்க உழைப்பும் திறமையும் வீண் போகாது. எதிர்ப்புகள் அகலும். சிலருக்கு இடமாற்றம், சம்பள உயர்வெல்லாம் கிடைக்கும். வேலை இல்லாதவங்களுக்கு வேலை தேடி வரும். குடும்பத்துல நல்ல காரியம் நடக்க சந்தர்ப்பம் ஏற்படும். வெளிநாட்டுல இருந்து நல்ல தகவல் வரப்போகுது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி மேல் வெற்றி வந்து குவியும். உடல் நலன்ல கவனம் வையுங்க. எந்தக் காரியத்தையும் அவசரப்படாம செய்யுங்க.

## மீனம்



இந்த வாரம். உடல் நலன்ல கவனம் வையுங்க. உஷ்ணம் சம்பந்தமான பாதிப்பு வர வாய்ப்பிருக்கு. மருத்துவச் செலவும் எகிறும், உஷார். பொருளாதாரம் சம்பந்தப்பட்ட விஷயங்கள்ல வேலை பார்க்கறவங்க கவனமா இருந்தால் தப்பிக்கலாம். பிரச்னைகள் வர வாய்ப்பிருக்கு. கொடுக்கல், வாங்கல் விவகாரத்தை இந்த வாரம் மட்டும் ஒதுக்கிட்டா நஷ்டத்துல இருந்து தப்பிக்கலாம். யார்கிட்டயும் வெளிப்படையா பேச வேண்டாம். வெளிநாட்டுல இருந்து நல்ல தகவல் வரப்போகுது. புனிதப் பணிகள்ல ஈடுபாடு கூடும்.

**அக்னி சர்மா பக்கம்**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2001

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | – | ரூ. 5000 |
| இரண்டாம் பரிசு | – | ரூ. 3000 |
| மூன்றாம் பரிசு | – | ரூ. 2000 |

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2001'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 5 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

— ஆசிரியர்

கோதாவில இறங்க
நான் அனுமதி தர முடியாது.
தேர்தல் கமிஷன் அனுமதிச்சா
தாராளமா
இறங்கலாம்

தார்மீக எதிர்ப்பு

தேர்தல் களம்




2001 ஏப்ரல் 22
விஷு சித்திரை 9
மலர் : 59
இதழ் : 38


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## த.மா.கா தலையில் அதிர்ச்சி அணுகுண்டு!

ஜெயலலிதா குற்றவாளி என்று தீர்ப்பு வழங்கப்பட்டு, தண்டனையும் விதிக்கப்பட்டுள்ளது டான்ஸி வழக்கில். மேல் முறையீடு செய்ய வாய்ப்பு தர வேண்டும் என்பதற்காக தண்டனை ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது. இந்நிலையில், தீர்ப்பே ஒத்தி வைக்கப்பட வேண்டும் என்று கோரி ஜெயலலிதா சென்னை உயர்நீதிமன்றத்தில் மனு செய்ய, அந்த மனுவைத் தீர விசாரித்தபின் தள்ளுபடி செய்துவிட்டார் நீதிபதி! இது விஷயத்தில் முடிவெடுக்க வேண்டியது தேர்தல் கமிஷன்தான் என்று சொன்னவர், ஜெ தேர்தலில் நிற்கத் தடையெதுவும் இருப்பதாகத் தமக்குத் தோன்றவில்லை என்று கருத்தும் கூறியிருக்கிறார்!

இதுநாள் வரை தாம் தேர்தலில் போட்டியிடத் தடையேதும் இல்லை என்றே கூறி வந்தார் ஜெயலலிதா. இப்போது அதற்குச் சட்ட ரீதியான தடை எழக்கூடும் என்பதால்தான் இப்படியொரு மனுவையே உயர்நீதிமன்றத்தில் அவர் கொடுக்க நேர்ந்தது. முன் ஜாமீன் கோருவதைப் போன்ற தற்காப்பு நடவடிக்கை இது!

உயர்நீதி மன்ற தீர்ப்பு குறித்து தேர்தல் கமிஷன் இன்னும் கருத்து வெளிப்படுத்தாத நிலையில், ஜெ இதே மனுவை உச்ச நீதிமன்றத்துக்குச் சமர்ப்பிக்கக்கூடும். தேர்தலில் நிற்கும் வாய்ப்பை ஒருவேளை பெறவும்கூடும். அவ்வாறு நடந்தால், பகிரங்கமாக தவறுகளிலும் அதிகார துஷ்பிரயோகத்திலும் ஈடுபடும் அரசியல்வாதிகளுக்கு நமது சட்டம் பாதுகாப்பு அளிப்பதாகவே




முடிவுக்கு வர வேண்டியிருக்கும். அப்படிப்பட்ட சட்டம் உபயோகமற்றது என்பதும் உறுதியாகும்.

நீதிமன்றங்களின் தீர்ப்பு எவ்வாறு அமைந்தாலும் மக்களின் தீர்ப்புதான் - தேர்தலில் அவர்கள் அளிக்கப் போகும் தீர்ப்புதான் - தமிழ்நாட்டின் தலைவிதியை மட்டுமின்றி தார்மிக நெறிகளின் பாதுகாப்பையும் நிர்ணயிக்கப் போகிறது.

கடந்த முறை ஆட்சியில் இருந்தபோது அ.தி.மு.க தலைவி நிகழ்த்திய அதர்மங்கள் பரவலாக அனைவரும் அறிந்தவையே. அப்படியிருந்தும் அவரோடு கூட்டணி விழைந்தவர்கள் இன்று அவருடைய கூட்டணி (அ)தர்மத்தையும் ருசித்துக்கொண்டிருக்கிறார்கள்.

த.மா.கா.வுக்கு நாற்பது தொகுதிகள் ஒதுக்கித் தரத் தயாராயிருந்தார் கலைஞர். வேறு எந்தக் கட்சிக்கும் அவர் இத்தனை தொகுதிகள் அளிக்க முன்வரவில்லை. '96 சட்டமன்றத் தேர்தலில் த.மா.கா பெற்ற வெற்றியையும் சட்டமன்றத்தில் அக்கட்சி ஆற்றிய ஆரோக்கியமான பணியையும் மதித்து வழங்கப்பட்ட தொகுதிகள் இவை. தோழமை நிலையிலிருந்து த.மா.கா எதிர்ப்பு நிலைக்கு மாறிவிட்ட போதிலும் நேசக்கரம் நீட்டினார் கருணாநிதி. அதைப் புறக்கணித்துவிட்டு, அ.தி.மு.க தலைமையிடம் போய், ஒவ்வொரு சீட்டுக்காகவும் பேரம் பேசி ஒருவாறு கூட்டணியைப் படியச் செய்துகொண்டது த.மா.கா.

இந்த முயற்சியில் த.மா.கா வியர்த்து களைத்திருந்த நேரத்தில் அதிர்ச்சி அணுகுண்டாக அ.தி.மு.க போட்டியிடும் தொகுதிப் பட்டியல் வெளியிடப்பட்டு விட்டது. கூட்டணி கட்சிகளின் தலைவர்களைக் கருத்து கேட்கவோ கலந்தாலோசிக்கவோ முயற்சிகூட மேற்கொள்ளவில்லை ஜெ. தன்னிச்சையாகப் பட்டியல் தயாரித்து, வெற்றி வாய்ப்புகள் கணிசமாயிருக்கிற தொகுதிகளையெல்லாம் அ.தி.மு.கவினருக்கென்று சுருட்டிக்கொண்டு விட்டார்.

கூட்டணி கட்சிகளுக்கு ஆட்சியில் பங்கு இல்லை என்று பகிரங்கமாகச் சொல்லி வந்தவர்தான் ஜெ. 'அதனாலென்ன?' என்று சமரசம் செய்துகொண்டு அவருடன் சேர்ந்தவர்களுக்கு இப்போது சட்டசபையில் இடம் கிடைப்பதே துர்லபமாகியிருக்கிறது! தொகுதிப் பட்டியல் குறித்து சமரச முயற்சிகள் ஆரம்பமாகியிருக்கின்றன. ஆனால் அ.தி.மு.க அணியில் நீடிக்கும்வரை கூட்டணி கட்சிகளுக்கு அவமானங்கள்தான் தொடரும்!




ஜெயலலிதா தேர்வு செய்துள்ள தொகுதிகளைக் கூர்ந்து கவனித்தால் அவரது செயல்திட்டம் என்னவென்று தெளிவாகிவிடும்.

ஓரளவு படித்த, சிந்திக்கும் திறனுள்ள மக்கள் வாழும் நகர, புறநகர்ப் பகுதிகள் அடங்கிய தொகுதிகளை அறவே ஒதுக்கியிருக்கிறது அ.தி.மு.க அறிவிக்கப்பட்டிருக்கும் 141 தொகுதிகளும் பெரும்பாலும் எளிய மக்கள் வாழும் பகுதிகளேயாகும்.

ஜெயலலிதாவின் பிரசார பாணி எத்தகையது என்பதை முந்தைய தேர்தல்களில் பார்த்திருக்கிறோம்.

தமது பேரில் வீண்பழி சுமத்தப்பட்டுள்ளது என்றும் பெண் என்பதால் தாம் வஞ்சிக்கப்படுவதாகவும் இன்னும் பல வகைகளிலும் நாடகத்தனமான முறையீடுகளை மக்கள் முன் வைப்பதில் வல்லவர் அவர். அ.தி.மு.கவின் பணபலமும் கூட ஊரறிந்த ரகசியம்.

இந்த 141 தொகுதிகளிலும் அ.தி.மு.கவை எதிர்க்கும் தி.மு.க அணி வேட்பாளரின் பணிதான் மிகக் கடினமானது. த.மா.காவும் ம.தி.மு.கவும் வெளியேறியதால் வாக்குகள் பிரிந்து போகக் கூடிய நிலைமை. அது போதாதென்று ஜெயலலிதாவின் கோயபெல்ஸ் பிரசாரத்தை வேறு முறியடித்து மக்களைச் சிந்திக்கச் செய்து வாக்குகளைப் பெற்றாக வேண்டும்!

இதனைத் தி.மு.க அணியினர் எவ்வாறு சாதிக்கப் போகிறார்கள்...? சராசரியைக் காட்டிலும் பலமடங்கு உழைப்பும் திட்டமிடலும் ஆயுதங்களானாலொழிய இந்தத் தேர்தலில் அவ்வணி ஜெயிப்பது மிகவும் கடினம்.

குறிப்பாக, ஜெ இத் தேர்தலில் வேட்பாளராக நிற்கும் பட்சத்தில், அவரைத் தோல்வியுறச் செய்ய, எதிரணியிலுள்ள மற்ற கட்சிகள் இணைந்து உழைப்பது மிகவும் அவசியம். பலமுனைப் போட்டிகளைத் தவிர்த்து, ஒரு பொதுவேட்பாளரை ஜெவுக்கு எதிராக நிறுத்தினால், அதுவே மக்களைச் சிந்திக்கச் செய்யும்; அவர்களுடைய பொன்னான வாக்குகளைப் பொறுப்போடு வழங்கத் தூண்டும். ○

**ந**ம்ம ஊர் ஸன்னும் ஜெயாவும் விஜய்யும் ராஜ‾ம்தான் இருக்கவே இருக்கிறதே என்று வேறு சேனல்களுக்குத் தாவியபோது -

'ராய் இன்ட்டர்நேஷனல்' என்று ஒன்று. எழுத்து, பேச்சு, இரண்டுமே இத்தாலிய மொழியா, ஸ்பானிஷா என்று தெரியவில்லை. கையில் மைக் வைத்துக்கொண்டு ஒருவர் தெருவோடு போகிற பெண்களை வழி மறித்து அபிப்பிராயம் கேட்டுக் கொண்டிருந்தார். 'நா நா' (நோ?) என்றும், சிலர் ஸி ஸி (எஸ்?) என்றும் பதில் கூறிவிட்டுப் போனார்கள். பலர் கோபமாக முறைத்துவிட்டுப் போனார்கள்.

Wonder what made them bad-tempered?

'டிவிஎஸ் ஆசியா' என்ற சேனலில், ஆப்பிரிக்கப் பழங்குடிப் பெண்களுக்கு ஒரு வெள்ளைக்கார டாக்டர் மாத்திரைகளும் காப்ஸ்யூல்களும் வழங்கிக் கொண்டிருந்தார்.

ஒரு தாய், தன் இரண்டு வயதுக் குழந்தையைக் கெட்டியாக அணைத்துக்கொண்டிருந்தாள். குழந்தைக்கு ஜுரம். அதன் அனல் திரையையே தகித்தது. அதன் முகத்தின் மீது ஒரு ஈ ஓடிக் கொண்டிருந்தது. A sight that brought a lump to your throat .

'ஏஎக்ஸ்என்' சேனிலில், நாலு அமெரிக்கர்களைக் கொண்ட ஒரு கோஷ்டி, காடு மலை வனாந்தரங்களில் முதுகில் மூட்டையுடன் சஞ்சரித்துக்கொண்டிருந்தது. அவர்களில் ஒரு பெண். ஒரு மலையிலிருந்து இன்னொரு மலைக்குக் கயிறு கட்டி, ஒரு கொக்கி மாட்டி, அதைப் பிடித்துக் கொண்டு சர்ரென்று இங்கிருந்து அங்கே ஒவ்வொருவராய்

# பெயரில் என்னதான் இல்லை?

வழுக்கிக் கொண்டு போனார்கள். நடுவே கிடுகிடு பாதாளம். அந்தப் பெண் தயங்கினார். 'இறங்கு! கீழே மட்டும் பார்க்காதே!' என்று கோஷ்டியில் ஒருவர் கூவிக் கொண்டிருந்தார். அவள் கொக்கியை (உயிரையும்) கையில் பிடித்துக்கொண்டு மறுபுறம் வந்து சேர்ந்தாள்.

டிஸ்கவரி சேனலில், ஸிலி நாட்டின் வனப்புக்களைக் காட்டிக் கொண்டிருந்தார்கள். பழங்கால சாரட்டு மாதிரி ஒரு குதிரை வண்டி. கல்யாணப் பெண்கூட அத்தனை பட்டாடைகளும் ஆபரணங்களும் அணிந்திருக்கமாட்டாள் - அப்படியொரு அலங்காரம் அந்தக் குதிரைக்கு. வண்டியை ஒரு தொட்டில் போல அமைத்து, அதன் நாலு பக்கமும் வண்ணமணிகளை இழைத்துக் கோலம் போட்டிருந்தார்கள். வண்டியோட்டி பாடிக் கொண்டே ஓட்டினார். கர்ண கடூரமான குரல்.

The world is a comedy to those who think, a tragedy to those who feel என்றார் வால்போல். நாம் உலகத்தை அறிவால் பார்க்கிறோமா, இதயத்தால் பார்க்கிறோமா என்று புரியவில்லை.

ரிமோட்

**வினோத்**

“**ம**கா கொண்டாட்டம்தான் 'உள்ளம் கொள்ளை போகுதே'யில் பிரபு தேவா ஆடும் 'கிங்குடா' பாட்டில். (விஜய் - 'சிக்கு புக்கு'.) ஏகப்பட்ட ஆட்டம். ஏராளமான கூட்டம். அதன் நடுவே ஒரு மடிசார் மாமி விசில் அடிக்கிறார்.



• விசாலி கண்ணதாசன்



பாட்டின் மத்தியில், ஒரு குடிகாரன் தன் பெண் ஜாதியின் முடியைப் பிடித்துத் தர தரவென்று தரையில் இழுத்து, உதைத்துத் தள்ளிக் கீழே போட்டு மிதிக்கிறான். ரொம்ப ஓவர். வீரம் (?) பெற்ற அந்தப் பெண்ஜாதி, புருஷனை வீழ்த்தி அவன் மார்பின் மீது ஏறி உட்கார்ந்து குத்தோ குத்தென்று குத்துவது இன்னும் கோரம். An offence against decency.

பெயரில் என்ன இருக்கிறது என்று இனிமேல் யாரும் மூச்சு விடக்கூடாது. விசாலி கண்ணதாசன், விசாலி கண்ணதாசனாக இருந்த வரையில் பேச்சிலே தடுமாற்றமும் உச்சரிப்பில் கோளாறும் இருந்தன. விசாலி மனோகரனாக மாறிய பின் வெள்ளம்தான். (சொல்லும் முறையில் இன்னும் சற்றுத் தொடர்ச்சியும் கோர்வையும் தேவை.)

Practice makes (will make) perfect. ○

அமெரிக்கா போக
நான் ரெடி,
நீங்க?...

இந்த வார கேள்விகள் உடல் உறுப்புகளைப் பற்றியவை. விடைகளை கவனமாக கூப்பனில் பூர்த்தி செய்து, முந்தைய வாரங்களில் செய்ததைப் போலவே மற்ற கூப்பன்களோடு பூட்டி வையுங்கள். இருபத்தி ஆறு வார இறுதியில் எல்லா கூப்பன்களையும் எங்களுக்கு

# அழைக்கிறது அமெரிக்கா!

## கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்

### குவிஸ் போட்டி—24

### குவிஸ் கூப்பன்—24

1) விபத்தில் தமது ஒரு காலை இழந்த பிறகும் ஒரு செயற்கைக் காலைப் பொருத்திக் கொண்டு நடன மணியாகவும், பிறகு நடிகையாகவும் திகழ்பவர் யார்?

2) துரோணர் குருதட்சணையாக கட்டை விரலைக் கேட்டது யாரிடம்?

3) மைக் டைசன் ஒரு குத்துச் சண்டைப் போட்டியின்போது யாருடைய காதைக் கடித்துத் துப்பினார்?

4) சிவலிங்கத்தின் கண்களிலிருந்து ரத்தம் பெருகுவதைக் கண்டதும் தனது இரு கண்களையும் அடுத்தடுத்து அவருக்குப் பொருத்த முற்பட்ட பக்தனின் பெயர் என்ன?

5) எந்தத் திரைப்படத்திற்காக நடிகை ஷபானா ஆஸ்மி தனது தலையை மொட்டை அடித்துக் கொண்டார்?

6) ஒன்றரை வயதிலேயே தனது பார்க்கும் மற்றும் கேட்கும் சக்தியை இழந்த இந்த அமெரிக்க சமூக சேவகி தனது விடா முயற்சியால் பேசவும், எழுதவும் கற்றுக் கொண்டு கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் பட்டப் படிப்பை வெற்றிகரமாக முடித்தார். யார் இவர்?

அனுப்புங்கள். இதில் மிக அதிகமான கேள்வி களுக்குச் சரியான பதில் எழுதும் ஒரு நபருக்கு

## அமெரிக்கப் பயணம் பரிசு!

## ஐரோப்பா பயணம்
## இரண்டாவது பரிசு!

## மலேஷியா—சிங்கப்பூர் பயணம்
## மூன்றாவது பரிசு!

**இந்த மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் சரியான பதிலை எழுதியிருந்தால் இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை! பயணப் பரிசு பெறாதவர்களுக்கு அமரர் கல்கியின் நூல்கள் உண்டு.**

**ஆசிரியர் தீர்ப்புதான் இறுதி!**

இன்னும் இரண்டு வாரங்களில் இந்தப் போட்டி முடிந்து விடும்.

பரிசு பெறும் நபர்களுக்கு முன்கூட்டியே வாழ்த்துகள்.

அதோடு சில நிபந்தனைகளும் கூட:

இப்போட்டியில் பங்கேற்போர் சர்வதேச பாஸ்போர்ட் வைத்துள்ள, பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட ஓர் இந்தியராக இருக்க வேண்டும்.

பாஸ்போர்ட் இல்லையெனில் விண்ணப்பித்து வாங்கி வைத்துக் கொள்ளுங்கள்.

பயணத்துக்கான தேதியும் டிக்கெட்டுகளும் போட்டியை ஸ்பான்ஸர் செய்யும் நிறுவனங்களின் முடிவுக்கு ஏற்ப அமையும். வெற்றி பெற்றவரின் சௌகரியமும் கருத்தில் கொள்ளப்படும். எனினும் எங்கள் முடிவே இறுதியானது.

எக்காரணம் கொண்டும் டிக்கெட்டை வேறு விமானப் பயண நிறுவனத்துக்கு மாற்றவோ, காசாக்கவோ அனுமதி இல்லை.

வெற்றி பெற்றவரிடத்தில் வேறு நபர் பயணம் செய்ய அனுமதி இல்லை. வெற்றி பெற்றவர், நாங்கள் குறிப்பிடும் கால்க் கெடுவுக்குள் பயணத்தை மேற்கொள்ள இயலாது போனால் பரிசை இழந்தவராகிறார்.

பயணத்துக்குரிய வரிகளை (விமான நிலைய வரி, அவ்வப்போது எழக் கூடிய சர்விஸ் டாக்ஸ் போன்றவை) பரிசு பெறுபவர்தான் செலுத்த வேண்டும்.

விசா பெறுவதற்கான கட்டணமும் பரிசு பெறும் நபர்களே செலுத்த வேண்டும்.

எக்காரணம் கொண்டாவது பாஸ்போர்ட் அல்லது விசா பெற இயலாது போனாலோ, இமிக்ரேஷன், கஸ்டம்ஸ் முதலான சோதனைகளின் விளைவாகப் பயணம் தடைப்பட்டாலோ கல்கியோ அல்லது ஸ்பான்ஸர் நிறுவனங்களோ பொறுப்பல்ல.

பரிசுக்குரியவர், எகானமி பிரிவில்தான் பயணம் செய்யலாம். டிக்கெட்டை மாற்றிக் கொள்ள முடியாது.

பரிசுத் திட்டத்தில் நிகழக்கூடிய மாற்றங்களை எதிர்த்து சட்டரீதியான நடவடிக்கைகள் எடுப்பது செல்லுபடியாகாது.

அயல்நாட்டில் சுற்றுலா ஏற்பாடுகளும் தங்கும் வசதியும் கல்கி—ஸ்பான்ஸர் நிறுவனங்களின் பொறுப்பு. எனினும் நாங்கள் செய்கிற ஏற்பாடுகளுக்கு உட்பட்டு ஒத்துழைக்க வேண்டியது பரிசுபெறுபவரின் பொறுப்பு. எந்த ஒரு வசதியையோ பயண ஏற்பாட்டையோ ரத்து செய்து காசாக்கிக் கொள்ள உரிமை தரப்பட மாட்டாது.

*நிபந்தனைகளைக் கண்டு மிரண்டு கூப்பன்களை அனுப்பாம இருந்துடாதீங்க.*

*வெற்றி பெற்ற மூன்று நபர்களின் முத்தான பயண அனுபவங்கள் கல்கியில் வெளியாகும்!*

## விடைகள்:



1) ..................................................

2) ..................................................

3) ..................................................

4) ..................................................

5) ..................................................

6) ..................................................

# "பிரதமர் என்னை ராஜினாமா செய்யச் சொல்லவில்லை!"

ம.தி.மு.க.வின் மூத்த தலைவரும், மத்திய நிதித் துறை இணையமைச்சருமான செஞ்சி ராமச்சந்திரனின் தனிச் செயலாளர் வருமானவரித்துறை ஆணையாளருக்கு எழுதிய ஒரு கடிதத்தை தெஹெல்கா இணைய தளம் வெளியிட, அது பெரிய பிரச்னையாகி இருக்கிறது. இந்த நிலையில் செஞ்சியாரைச் சந்தித்தோம்.

**தெஹெல்கா வெளியிட்ட கடிதத்தின் பின்னணி என்ன?**

மீடியாக்கள் கடுகை மலையாக்க முயல்கின்றன. பொதுவாக, பாராளுமன்ற உறுப்பினர்கள், தங்கள் தொகுதிகளில் நலத்திட்ட விழாக்கள் நடத்தி, உடல் ஊனமுற்றவர்கள், வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ள நலிந்த மக்கள் ஆகியோருக்கு, சக்கரவண்டி, தையல் மெஷின் போன்றவைகளைக் கொடுத்து உதவுவது வழக்கம். இதற்காக, தன்னார்வத்தொண்டு நிறுவனங்களின் உதவியை நாடுவதில் தவறில்லை. ஆனால் என்னுடைய தனிச்செயலாளரான சந்திரகாந்த் காம்லே, நேரடியாக சென்னையில் உள்ள தலைமை வருமானவரித்துறை ஆணையாளருக்குக் கடிதம் எழுதி தன்னார்வத்தொண்டு நிறுவனங்களின் உதவியைப் பெற்றுத் தரும்படி கேட்டுக் கொண்டார். வருமான வரித்துறையிடம் தன்னார்வத்தொண்டு நிறுவனங்களின் பட்டியல் இருக்குமாதலால், சுலபமாகக் காரியம் நடந்துவிடும் என்ற முனைப்பில் அவ்வாறு செய்தார். தொண்டு நிறுவனங்கள் மக்களுக்காகத்தானே இருக்கின்றன. அதிலும் பெரும்பாலான நிறுவனங்கள் அரசு நிதி உதவியைப் பெற்றுத்தான் நடக்கின்றன. நாங்களும் மக்களுக்கு உதவுவதற்காகத்தான் அவர்களை அணுக விரும்பினோம். இதில் என்ன தவறு இருக்கிறது? கையூட்டு, கமிஷன் என்று ஏதாவது இதில் இருக்கிறதா? இப்போது மத்திய அரசின் சமூக நலத்துறையின் மூலம் உதவிகள் பெற்று நிகழ்ச்சி நடத்திவிட்டோம்.

**இந்தக் கடிதத்தை அதிகாரிகள் தரப்பில் இருந்து வெளியிட்டதால்தான் நீங்கள் ஆத்திரம் அடைந்து சில அதிகாரிகளை மாற்றிவிட்டதாகச் சொல்கிறார்களே!**

இயல்பான முறையில் சில மாறுதல் உத்தரவுகள் போடப்பட்டால் அதை இந்த விவகாரத்துடன் இணைத்துப் பேசுகிறார்கள். இரண்டாவதாக, அதிகாரிகளின் மாற்றல், பதவி உயர்வு விவகாரங்களில் அமைச்சகம் நேரடியாகத் தலையிடுவது கிடையாது. கொள்கை அடிப்படையிலான முடிவுகள், வழி காட்டுதல்களோடு சரி. 57000 கோடி

## — செஞ்சி ராமச்சந்திரன் சொல்கிறார்

ரூபாய் வரி வசூல் செய்ய வேண்டும். இதற்காக வருமானவரி இலாகாவில் துரித வசூல் செய்திட சில சீர்திருத்தங்கள் செய்வதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த புனரமைப்பு காரணமாக அதிகாரிகளின் பதவி உயர்வுகள் கால தாமதமாகலாம். இதற்காக நிதி அமைச்சகத்தின்மீது அதிகாரிகள் கோபம் கொள்ளக்கூடாது. அவர்களின் முழு ஒத்துழைப்பையும் அரசு எதிர்பார்க்கிறது. நிதி அமைச்சகம் முழு சுதந்தரத்துடன் இயங்குகிறது. என்னுடைய செயல்பாடுகளில் என் கட்சிக்காரர்கள் உட்பட யாரும் தலையிடுவது கிடையாது.

**இந்த விவகாரம் காரணமாக பிரதமர் உங்களிடம் ராஜினாமா கடிதம் கேட்டதாகவும் செய்திகள் வருகின்றனவே!**

இந்தச் செய்திகளுக்கு ஆதாரம் கிடையாது. எந்தவிதமான முறைகேடுகளும் நடக்காமல் இருக்கும் பட்சத்தில் சிலர் வேண்டுமென்றே எனக்குச் சங்கடம் தரவேண்டும் என்ற நோக்கத்தில் பல விஷயங்களைக் கொளுத்திப் போடுகிறார்கள்.

**பாராளுமன்றம் ஸ்தம்பித்து போயிருப்பதைப் பார்க்கும்போது, மத்திய பட்ஜெட் அதன் அங்கீகாரத்தைப் பெறுமா என்பது சந்தேகமாக இருக்கிறதே!**

மக்களவையில் அரசுக்குப் பெரும்பான்மை இருக்கிறது. எனவே பட்ஜெட் பாராளுமன்றத்தின் அங்கீகாரம் பெறும். வெளியிலிருந்து ஆதரித்து வரும் தெலுங்கு தேசம் உதவியுடன் பட்ஜெட் மக்களவையின் அங்கீகாரத்தைப் பெற்றுவிடும். அதில் சந்தேகம் வேண்டாம்.

**ம.தி.மு.க. - தி.மு.க. பேச்சுவார்த்தைகளில் நீங்கள் கலந்து கொண்டீர்கள். பேச்சு வார்த்தை முறிவுக்குத் தொகுதி ஒதுக்கீடு மட்டும்தான் காரணமா?**

கடந்த மூன்று நான்கு மாதங்களாக தமிழகம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்து, கலைஞரை மீண்டும் முதல்வராக்குவோம் என்று மேடைகளில் பேசி வந்திருக்கிறோம். ஆனால் அதே சமயம், மறுமலர்ச்சி தி.மு.க.வின் செல்வாக்குக்கு ஏற்ப, உரிய மரியாதையுடன் சீட்டுகளையும், தொகுதிகளையும் ஒதுக்க வேண்டும் என்று எதிர்பார்த்தோம். இதில் சிக்கல் வந்த காரணத்தால் முறிவு ஏற்பட்டுவிட்டது. பத்து பேர் ஜெயித்து எம்.எல்.ஏ.க்கள் ஆவதைவிட தன்மானம், சுய கௌரவம் முக்கியம்.



— ப்ரியன்

படம் : சௌரா



# வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.


அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.
Website : www-Kumbakonamonline.com/vedapadasala

☎ : (0435)
Off : 425948
Fax : 423777
Patasala : 422866


"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 457 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 171 மாணவர்களுக்கு 14 வேத, சாஸ்திர அத்யாபகர்கள், புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். *புதிய பாடசாலை கட்டிட நிர்மாணப்பணி துவங்கப்பட்டு நடைபெற்று வருகிறது. நன்கொடை வரவேற்கப்படுகிறது.*

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>திட்ட விபரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை தொகை (One Time) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 5000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs.15,000 |
| பௌர்ணமி ஆயுஷ்ய ஹோமம் | Rs. 1,000 | Rs.10,000 |
| ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakh |

Cross செய்யப்பட்ட D.D.-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

---



# லண்டன் ஐரோப்பா அமெரிக்கா டூர்

லண்டன் - பாரீஸ் சுவிட்ஜர்லாந்து 9 நாள் டூர் ரூ.55,000/-
ஐரோப்பா - லண்டன் - சுவிஸ் - ரோம் 15 நாள் டூர் ரூ.75,000/-
லண்டன்-ஐரோப்பா-சுவிஸ்-அமெரிக்கா 17 நாள் டூர் ரூ.1,15,000/-,
சென்னையிலிருந்து விமானக்கட்டணம் - ஸ்டார் ஓட்டல்களில் தங்கும் வசதி எல்லா ஊர்களையும் சுற்றிப் பார்க்கும் வசதி. தென்னிந்திய உணவுகள் உட்பட இந்த டூர் உலகத்தரம் வாய்ந்த சுற்றுலா நிறுவனம் Cox & Kings மூலம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.



## சிங்கப்பூர் - டூர்

சிங்கப்பூர் - மலேஷியா - ஜென்டிங் ஹைலேண்ட்ஸ் 3 ஸ்டார் ஓட்டல்களில் தங்கும் செலவு - சுற்றிப் பார்க்கும் வசதி விமானக் கட்டணம் உட்பட 5 நாள் டூர் ரூ.27,000/- அதிகப்படியாக தாய்லாந்து பாங்காக் பட்டாய்யா 8 நாள் டூரும் ரூ.36,000/- அடுத்த பயண தேதி மே 13 & 26.

### அலைகள் கொஞ்சும் அந்தமான் தீவுகள்

2-ம் வகுப்பில் கப்பல் / விமானம் ஸ்டார் ஓட்டல்களில் தங்கும் வசதி சுற்றிப்பார்க்கும் வசதியுடன் ரூ.14,000/- Bunk Class-ல் போகவர கப்பல் 9 நாட்கள் ரூ.5,000/- பயணதேதி ஏப்ரல் 25, மே 9 & 22.

### மறக்க முடியாத மாலத் தீவுகள்

இலங்கை வழியாக மாலத் தீவுகள் 3 இரவு 4 பகல் ஸ்டார் ஓட்டலில் தங்கும் வசதி சுற்றிப் பார்க்கும் வசதியுடன் ரூ.19,500 இலங்கையில் கண்டி, கொழும்பு உட்பட 4 இரவு 5 பகல் கட்டணம் ரூ.23,500/-

கைலாஷ், மானசரோவர் & காசியாத்திரை ஜூலை, ஆகஸ்ட் மாதங்களில் புறப்படுகிறது. கட்டணம் ரூ.70,000/-

டிக்கட்டுகள் மற்றும் விபரங்களுக்கு

**சூரியா டிராவல்ஸ்** 71, உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-17, போன்: 434 3218

# அஞ்சல் பெட்டி 100!



அஞ்சல் பெட்டி எண் 100.

இந்தப் பெட்டிக்கு வரும் தபால்கள்?

கிரிமினல் பின்னணி கொண்ட மந்திரிகள், எம்.பி.கள், எம்.எல்.ஏ.கள் பற்றிய தகவல்கள். அனுப்புபவர்கள், பொது மக்கள்.

இந்தத் தகவல்கள், ஓய்வுபெற்ற நீதிபதிகள் மற்றும் காவல்துறை அதிகாரிகள் கொண்ட ஒரு குழுவால் கவனமுடன் பரிசிலிக்கப்படுகின்றன. பிறகு, கிரிமினல் பின்னணி ஊர்ஜிதப்படுத்தப்பட்ட நபர்களின் பட்டியல் பொது மக்களின் பார்வைக்காக வெளியிடப்படுகிறது.

சம்பந்தப்பட்ட அரசியல்வாதிகளின் ரியாக்ஷன்? தொழில் நேர்த்தியுடன் அலசி ஆராயப்பட்டு ஊர்ஜிதப்படுத்தப்பட்டிருக்கும் தங்களின் மீதான புகார்களை மறுக்க முடியாமல், 'அவரை விட்டுவிட்டீர்களே, இவரை விட்டுவிட்டீர்களே' என்று சக அரசியல்வாதிகளைப் போட்டுக் கொடுக்க, 'உங்களுக்குத் தெரிந்த தகவல்களைத் தாருங்கள், விவரங்களைச் சரிபார்த்து, அவர்களின் பெயர்களையும் சேர்த்துக் கொள்கிறோம்!' என்று அவர்கள் தரும் புது தகவல்களைச் சுறுசுறுப்பாக வாங்கிக் கொண்டு பரிசிலிக்கிறது குழு.

இவை அத்தனையும் நடப்பது, சட்டசபை, பாராளுமன்றத் தேர்தல் நேரத்தில், ஆந்திராவில்.

பலன், தேர்தலில் நிற்கப்போகும் அரசியல்வாதிகளைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொண்ட பின்னரே, பொதுமக்கள் வோட்டுக்களைப் போடும் சூழ்நிலை.

மக்கள் மத்தியில் விழிப்புணர்வைப் புதுவிதமாக, வெற்றிகரமாக ஏற்படுத்திக் கொண்டிருப்பது யார்?

'லோக் சத்தா' என்ற இயக்கம். மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு துவக்கப்பட்ட இயக்கம். இரண்டரை லட்சம் உறுப்பினர்களையும் இருபது லட்சம் அனுதாபிகளையும் கொண்ட இயக்கம்.

இதன் தலைவர்?

டாக்டர் ஜெயபிரகாஷ் நாராயணன்.

மருத்துவராகி, பிறகு, ஐ.ஏ.எஸ். படித்துத் தேறி, 17 வருடங்கள் அரசுப் பணியாற்றி, இப்படி ஓர் இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டும் என்ற ஒரே எண்ணத்தோடு கலெக்டர் பதவியை ராஜினாமா செய்திருப்பவர்.

விழிப்புணர்வை ஏற்படுத்த தேர்தல் சமயம் தான் உகந்த நேரம் என்று சொல்லும் இவரிடம், 'மக்கள் மத்தியில் இவ்வளவு செல்வாக்கு உள்ள நீங்களே தேர்தலில் நின்றால் என்ன?' என்று கேட்டால், "இன்று, மகாத்மா காந்தியே தேர்தலில் நின்றால்கூட ஜெயிக்க முடியாது என்ற அவலச் சூழ்நிலை. இந்தச் சூழ்நிலையை மாற்ற வேண்டும் என்பதுதான் என் லட்சியம்!" என்கிறார் உறுதியாக.

— எஸ். சந்திரமௌலி

உற்சாக நுரைப்பூவாய் ப்ரீத்தியும், வாடி வதங்கிய கருவேப்பிலைக் கன்றாய் சுஜாவும், சேர்ந்தாற்போல வந்து நின்றபோது கல்லுளிமங்கனான கேசவராமுக்கே வயிற்றை என்னவோ செய்தது.

அவினாசிலிங்கத்தின் வார்த்தையை நம்பி, அவர் ஏகத்தாறாய் கற்பனைக் கோட்டைகளைக் கட்டியிருந்தார். இப்பொழுது அத்தனையும் சரிந்தோடு. இனிமேல் இவள் கதி என்ன என்கிற கவலைக் குறியும் அவருள் கிளம்பாமல் இல்லை.

ஈஸ்வரனுக்கு சாஷ்டாங்கமாக ஒரு நமஸ்காரம் செய்து, 'அடியேனை மன்னித்து என் குமாரத்தியையும் தங்கள் மருமகனாக ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்று ஒரு வார்த்தை கூறிவிட்டால் போதும்தான்.

ஆனால் வழக்கமாய் முருங்கை மரத்தில் ஏறிக் கொள்ளும் அவரது மன வேதாளம் இப்பொழுதும் உச்சாணிக்கிளையில் ஏறி உட்கார்ந்து, இறங்க மறுக்கிறது.

தன்னுடைய நிதி நிலைமையைப் பற்றி அவரிடம் மனசுவிட்டுப் பேசினால்கூட அவர் ஏதாவது ஒரு வழியைக் காண்பிப்பார்.

இப்படி 'அந்தராத்மா முணுமுணுத்தாலும், 'அட, சட்! சும்மா இரு...' என்று ஒரே போடாகப் போட்டு அதனை அடக்கி வைத்தார். கேதாரிதான் உற்சாகமாக ப்ரீத்தியைப் பார்த்துக் கேட்டார்.

"போன காரியம் என்ன ஆச்சு?"

ப்ரீத்தி இதற்கு அத்தனை சுவாரசியம் காட்டாது உதட்டைச் சுழித்தாள். கைப்பையைத் தூக்கி அப்பாவின் மடிமீது போட்டுவிட்டு, பக்கத்து சோபாவில் தொப்பென அமர்ந்தாள்.

"ஏன்மா... வேலை கிடைக்கலையா?"

"வேலை எல்லாம் கிடைச்சுடும்தான்... நல்ல சம்பளம்.. அதுவும் டாலர்ஸ்ல.. எல்லா சலுகைகளும் உண்டு. ஆனா ஒரே ஒரு கொக்கி போடறாங்க. இந்தியாவைக் கொஞ்ச காலத்துக்கு மறந்துட வேண்டியது தான்னு."

கேதாரி குரலில் பரபரப்பு காட்டி உற்சாகத்துடன் பேசினார்.

"அதனால் என்னம்மா? இப்ப எல்லாரும்தானே போறாங்க.. சம்பளம் எவ்வளவு?"

"ஐயாயிரம் டாலர். அதுவும் என்னை மாதிரி பட்டவங்களுக்கு. சுஜாவுக்கு இந்தத் துறையில் இன்னமுமே அனுபவம் நிறைய. அவளோட தகுதிக்கு அவள் கேட்பதைக் கொடுப்பாங்க. அந்த டைரக்டர்கூட ஆனமட்டும் சுஜாவைக் கேட்டுப் பார்த்துட்டார். அவ தான் இஞ்சி தின்ன ஏதோ மாதிரி முகத்தை வெச்சுட்டு, எதுக்குமே ஒத்துவர மாட்டேனுட்டா."

"வாஸ்தவம் தானேம்மா. அவளுக்குக் கல்யாணத்துக்குப் பார்த்துக்கிட்டிருக்கார் மிஸ்டர் கேசவ். இப்போ போய் அமெரிக்காவோ, ஆஸ்திரேலியாவோ போக முடியுமா? புருஷன் கூட போனாப் பரவாயில்லை. அவளை விடு. உன்னைப் பத்தி சொல்லு. நீ ஏன் ஒத்துக்க மாட்டேன்கற..."

ப்ரீத்தி அலட்சியமாய் 'ச்சு' கொட்டினாள். மெலிதாய்ச் சோம்பல் முறித்தாள்.

"நீங்க சொல்ற மாதிரி ஏதோ கல்யாணம்னு ஆகி, அமெரிக்காவோ, ஆப்ரிக்காவோ போனால் பரவாயில்லேப்பா... அதுக்கு முன்னால, உங்களையும் இங்கே விட்டுட்டு, அங்கே போய் நான் உட்கார்ந்துக்கிட்டு நீங்க எந்த ஐஸ்க்ரீம் கடையிலே வெட்டிட்டிருக்கேளோன்னு கவலைப்பட்டுக்கிட்டுருப்பேன். கொடுக்கற வேலையை இந்தியாவிலே கொடுக்கட்டும்... செய்யறேன். வேற எங்கேயும் அடி எடுத்து வைக்க மாட்டேன்."

அவள் உறுதியாகச் சொல்ல, கேசவ்ராம் சட்டென தன் மகளைப் பார்த்தார்.

# இனிமேல் ஆரம்பம்

அனுராதா ரமணன்

ஏன்மா, ப்ரீத்தி சொல்ற மாதிரி நீ அந்த வேலையை ஒத்துக்கிட்டா என்ன? எனக்கென்னவோ அவினாசியோட பையனை உன் கழுத்துல கட்டறதைவிட, அமெரிக்காவுக்கு உன்னை அனுப்பி வெச்சு, ரெண்டு வருஷம் போல காத்திருந்து நல்ல வரனா பார்க்கலாமோன்னு தோணுது."

கல்பகம் கணவரின் இந்த வார்த்தையைக் கேட்டு முகமெல்லாம் மலர சுஜாவைப் பார்க்க - அவளோ டல்லடித்துப் போய் உட்கார்ந்திருந்தாள். இதற்குள் ப்ரீத்தி இன்னும் சமத்காரமாய் அளக்கத் தொடங்கினாள்.

"அங்கிள், அப்படி அமெரிக்க மாப்பிள்ளை வேணும்னா சொல்லுங்கோ... இந்தக் கம்பெனி சாஃப்ட்வேர் சீஃப் டிசைனர் பொழுது விடிஞ்சு பொழுது போனா - அமெரிக்காவுக்கும், இந்தியாவுக்குமாய்ப் பறந்துட்டிருக்கான். ஆள் பார்க்க அம்சமாய் இருப்பான். நல்ல பொண்ணு கிடைச்சா - தாலியைக் கையில் எடுக்கத் தயாரா இருக்கான். அதுமட்டுமல்ல. அவன் தன் பெண்டாட்டி சம்பாத்தியத்திலே தனக்கு ஒரு டாலர்கூட வேணாம்னு சொல்லிட்டிருக்கான்னா பாருங்களேன். இந்தக் காலத்தில் இப்படியொரு பிள்ளை."

கேசவராம் திறந்த வாய் திறந்தபடி நிற்க, சுஜாவோ ஏற்கனவே ப்ரீத்தி சொல்லித் தந்தது போல் 'ஓ'வென அழுதாள்.

"முடியாதுப்பா. உங்களை இந்த நிலையில் விட்டுட்டு நான் போகமாட்டேன்."

"அட, என்னம்மா நீ புரியாத பொண்ணா இருக்கே."

- இப்படி அலுத்துக் கொண்ட கேதாரி, கேசவ்ராமின் தோளில் உரிமையுடன் கை போடுகிறார்.

"மிஸ்டர் கேசவ், எனக்கென்னவோ அந்த ஜோசியர் அனுமந்துவை இன்னொரு தரம் பார்த்தா என்னன்னு தோணுது. அப்படிப் போறப்போ உங்க ஜாதகத்தையும், உங்க பெண் ஜாதகத்தையும் எடுத்துண்டு போனா - மேற்கொண்டு எந்தப் பக்கம் காயை நகர்த்தலாம்னு ஓர் ஐடியா கிடைக்குமில்லே?"

கேசவ்ராம், அனுமந்துவைப் பார்க்க, ஒரேயடியாக மறுத்தார். எப்பொழுது அவினாசிலிங்கத்தின் பையனுக்கும், தன் மகளுக்கும் திருமணம் இல்லை என்றாகிவிட்டதோ - அதற்குப் பிறகு ஜாதகம், ஜோசியம் இது எதையுமே பார்க்க தாம் தயாராக இல்லை என்று குதித்தார்.

## ஏட்டையா செஞ்சதைச் சொல்லையா!



**"துப்புத் துலக்குறதுல நம்ம ஏட்டையா ஏகாம்பரத்துக்கு ஈடு அவரேதாண்ணே!"**

கேதாரிதான் அவரைச் சமாதானப்படுத்தி தன்னுடன் அழைத்துச் சென்றார். கேதாரியைப் பார்த்ததும், அனுமந்துவின் உடம்பில் ஒருவித பணிவும் குழைவும் ஒட்டிக் கொண்டது. கேதாரியின் பார்வை அவரை எச்சரித்தது.

'அடேய் அனுமந்து, என்னைத் தெரிஞ்சு கண்டதா காண்பிச்சே, அவ்வளவுதான்... உன்னை இப்பவே, இங்கேயே கிழிச்சு தோரணம் கட்டிடுவேன்.'

அனுமந்து அவர்களைத் தனது ஸ்பெஷல் அந்தரங்க அறைக்கு அழைத்துப் போய் அமர்த்தி, ஒன்றுமே தெரியாதவன் போல் கேதாரியைக் காட்டி, கேசவ்விடம் கேட்கிறார்.

"சார் யாரு? பி.ஜே.பி. மினிஸ்ட்ரிலே இருக்காரா... இல்லே டெஹெல்காம் இன்டர்நெட்லே இருந்து வந்திருக்காரா..?"

கேசவ் எரிச்சலுடன் பதிலளிக்கிறார்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லேங்க. இவர் பொண்ணும், என் பொண்ணும் ஃபிரண்ட்ஸ். எப்ப அவினாசியோட சம்பந்தம் எனக்கு இல்லேன்னு நீங்க சொல்லிட்டீங்களோ - அதுக்கப்புறம் உங்க முகத்தைக்கூட பார்க்கிறதில்லேன்னு வைராக்கியமா இருந்தேன். ஸார் தான் கேட்கலே. பிடிவாதமா அழைச்சுட்டு வந்திருக்கார்."

"அது இல்லே மிஸ்டர் அனுமந்து..."

கேதாரி இப்படி இழுக்க, அனுமந்து விரைப்பாக முகத்தை வைத்துக் கொண்டு -

"மன்னிக்கணும். என்னை யாரும் பெயர் சொல்லிக் கூப்பிடறது இல்லே. சுவாமின்னு தான் கூப்பிடுவாங்க. அதுதான் பழக்கம்."

இப்படிச் சொல்லிவிட்டு, 'என்ன, என் நடிப்பு சரியாக இருக்கிறதா?' என்பதுபோல கேதாரியைப் பார்த்தார். கேதாரியோ - மிகுந்த மரியாதையுடன் மேல் துண்டை

"எப்படிச் சொல்றே?"

"......................................

......................................"



**29.4.2001க்குள் ஏட்டையா**
**செஞ்சதைச் சொல்லைய்யா, பரிசைத்**
**தட்டய்யா, வாசகர் ஐய்யா,**
**உங்களைத்தானய்யா!**

*(சீர்காழி ரேவதி அம்மா! ஜோக்குக்கு நன்றி, பாதியை முழுங்கிட்டதுக்கு ஸாரி!)*

எடுத்து இடுப்பில் கட்டிக் கொண்டு, பவ்ய மாய்ச் சொன்னார்.

"அப்படியே சுவாமி. இவர் பொண்ணுக்கும், அவினாசி பையனுக்கும் நடக்க இருந்த திருமணத்தை ஏன் நிறுத்தச் சொல்லிட்டீர்?"

அனுமந்து சுற்று முற்றும் ஒரு முறை பார்த்தார். எழுந்து போய் வாசல் கதவு தாழ்ப்பாளைச் சரிபார்த்துவிட்டு வந்தார். கேதாரி, கேசவ் இவர்களின் கையில் இருந்த தோள்பையைப் பிடுங்கி, அதற்குள் கேமராவோ, டேப்ரிக்கார்டரோ இருக்கிறதா என்று ஒருமுறை பரிசோதித்தார். அதெல் லாம் எதுவும் இல்லை என்பது தெரிந்த வுடன், புன்னகை ததும்ப விளக்கினார்.

"அரசியல்ல இதெல்லாம் சகஜம்தான். ஏதோ கல்யாணம் நிச்சயம் ஆகறதுக்கு முன் னால நின்னு போச்சேன்னு சந்தோஷப் படுங்கோ. எத்தனை அரசியல் புள்ளிகள் நான் சொல்ற ஜோசியத்தை நம்பி, வருஷம் ஒரு பொண்ணைக் கல்யாணம் பண்ணிக் கறான் தெரியுமில்லே? இன்னிக்கு ஓஹோன்னு இருக்காரே... சென்ட்ரல் மினிஸ்ட்ரியிலே, அவருக்கு நான்தான் ஜாத கம் பார்த்துச் சொல்லியிருக்கிறேன். விடி காலம்பற பிரும்ம முகூர்த்தத்துலே அதாவது நாலு மணி சுமாருக்கு குளிச்சு, புது வஸ்திரம் உடுத்தி, மாலை போட்டுண்டு, பதினாறு வயசுப் பொண்ணு கழுத்துல தாலி கட் டணும்னு.. டெய்லி இது மாதிரி நடக்கணும். பத்து வருஷமா நடந்துண்டிருக்குது வோய்.. சுத்துவட்டாரத்துலே பதினாறு வயசு பொண்ணே கிடைக்கலையாம்... அதர் ஸ்டேட்ஸ்லே இருந்து மாசாமாசம் ஒரு லோடு லாரியிலே, பதினாறு வயசுல பொண்ணுகளையா பார்த்து அனுப்பி வைக்கறோம். மனுஷருக்கு வயசு எழுபத்து மூணு ஆகறது. இன்னும் எத்தனை நாளைக் குடா அனுமந்து... இப்படி விடிகாலம்பற எழுந்தரிக்கறது, சாயந்தரத்துலே தாலி கட்டினா சரிப்பட்டு வராதானு செல்லுலயே அழறார்... என்ன பண்றது... லீடிங் பொலிட் டீஷியன். தன்னோட பதவியைத் தக்க வெச் சுக்கணும்னா எல்லாம்தான் செய்ய வேண்டி யிருக்கு."

கேதாரியும், கேசவ்வும் பிரமிப்புடன் அவரைப் பார்க்க, அவர் சர்வசாதாரண மாய்ச் சொல்கிறார்.

"உங்களுக்குத் தெரிஞ்சு ஏதாவது பதி னாறு வயசுப் பொண்ணு இருந்தாலும் சொல்லுங்கோ... ஏதும் பிரச்னையே இல்லை. ஒரு தாலியைக் கட்டிட்டு தேமேன்னு தூங் கப் போயிடுவார். பொண்ணுக்குப் பத்து பவுன் நகையும், ஐம்பதாயிரம் பணமும் கையிலே கொடுத்தனுப்பிடுவார்..."

மேற்கொண்டு ஏதோ சொல்லப்போன வரை கேதாரிதான் திசை திருப்பி விட்டார்.

"அது கிடக்கட்டும் சுவாமி. இப்போ இவருக்கும் இவர் பொண்ணுக்கும் ஒரு வழியைச் சொல்லுங்கோ. இது ஏற்கனவே நீங்க பார்த்திருக்கற ஜாதகம்தான். ஒண்ணு இவர் பொண்ணு சுஜாவோடது. இன் னொன்று இவரோடது. இவர் ஒய்ஃப்போட ஜாதகம் கேட்டேன். அதெல்லாம் ஒழுங்கா இருந்திருந்தா - நான் ஏன் இவரைக் கல்யா ணம் செஞ்சுக்கப் போறேன்னு சொல் லிட்டா."

அனுமந்து, தடித்த மூக்குக் கண் ணாடியை எடுத்து மாட்டிக் கொண்டு, ஜாதகங்களைத் துருவித் துருவிப் பார்க்கிறார். வெற்றிலைச் சாறு பளபளக்கும் உதடுகளில் புன்னகை நெளிகிறது.

"உங்க பொண்ணால தான் உங்க கஷ் டமே விடியப் போகிறது. ஆனா அதுக்கு முன்னாடி நீங்க செய்ய வேண்டியது ஒண்ணு இருக்கே."

"என்னது?"

கேசவ்வின் குரல் பலவீனமாக ஒலிக் கிறது. அனுமந்து சடாரென ஒரு 'டைம் பாமை' எடுத்துப் போடுகிறார்.

"இப்போ உங்களுக்கு நேரம் சரியில்லை. பணத்தைக் கொடுத்தவங்க நாலா பக்கத் துலே இருந்தும் நெருக்குவாங்க. அநேகமாக காராகிரஹ வாசம் 'அதாவது' ஜெயில் வாசம் கூட கிடைக்கலாம்."

கேசவ் திகைக்க, அனுமந்து சிரித்தபடி சொல்கிறார்.

**— அடுத்த இதழில் நிறைவுறும்**

# வாய் பிளக்க வைக்கும் சொத்துப் பட்டியல்!



இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னால், அகில இந்திய காங்கிரஸ் கட்சியின் தலைமை அலுவலகத்தில் அறுநூறு ரூபாய்க்கு ஸ்டெனோகிராஃபராகப் பணியாற்றியவர் அவர். சொந்த ஊர் கேரளா. இவரது அப்பா, அங்கே ஒரு போலீஸ் அதிகாரி. மனைவியில்லி, நர்ஸாக வேலை பார்த்தவர். ஒரு லாம்பிரட்டா ஸ்கூட்டர் காங்கிரஸ் கட்சி ஆபீஸை விட்டால் எளிய ஜாகை என்ற டிபிகல் மத்தியதரவர்க்க வாழ்க்கை.

ஆனால், இன்று அவரது பதவி, தேசிய அளவில் முக்கியத்துவம் வாய்ந்தது. இன்று அவர், வருமானத்துக்கு அதிகமாக, சொத்து குவித்து விட்டார் என்று சி.பி.ஐ. வழக்கு போட்டிருக்கிறது.

அவர்தான் சோனியா காந்தியின் செயலாளர்களுள் ஒருவரான வின்சென்ட் ஜார்ஜ்.

எமர்ஜென்ஸியைத் தொடர்ந்து பதவி இழந்தவுடன், இந்திராகாந்தி, காங்கிரஸ் கட்சி ஆபீஸில் வேலை பார்த்த வின்சென்ட் ஜார்ஜை, தமது உதவியாளர்களுள் ஒருவராக ஆக்கிக் கொண்டார். ஒரு கட்டத்தில், இந்திராகாந்தியின் மொரிவின் பேரில் ராஜீவ் காந்தியின் உதவியாளர்களுள் ஒருவர் ஆனார். ராஜீவ் காந்தி மரணத்துக்குப் பின், ராஜீவ் இல்லத்தை விட்டு வெளியே சென்று விட்டால் செல்லாக்காசு ஆகிவிடுவோம் என்று புரிந்து கொண்டு விட்டார் ஜார்ஜ். ராஜீவுடனான நெருக்கத்தை முன்னிலைப்படுத்தி, சோனியா இல்லத்திலேயே, அவருடைய உதவியாளராகிவிட்டார். காங்கிரஸ் கட்சிக்குள் சோனியாவுக்கு முக்கியத்துவம் அதிகரிக்க, அதிகரிக்க, வின்சென்ட்டின் அதிகார வட்டம் விரிவடைந்தது. மாதவன், பிள்ளை என்ற கேரளாவைச் சேர்ந்த இரண்டு பேரைத் தமக்கு உதவியாளர்களாக வைத்துக் கொண்டு, சோனியா காந்தியின் செகரட்டரி என்ற அந்தஸ்த்துக்குத் தம்மை உயர்த்திக் கொண்டார்.

சோனியாதான், காங்கிரஸின் அதிகார மையம் என்பதால், அனைத்து தலைவர்களும், வின்சென்ட் ஜார்ஜுக்குப் பரிச்சயமானார்கள். சோனியாவை, வின்சென்ட் மூலமே அணுக முடியும் என்கிற நிலையை இவர் தந்திரமாக ஏற்படுத்திக் கொண்டார். சோனியா காந்திக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் வேண்டியவர்கள் தலைநகரில் அளிக்கிற பார்ட்டிகள் அனைத்திலும் இவர் கலந்து கொண்டாலும், மீடியா வெளிச்சத்தில் விழுந்து விடாமல், சற்று அடக்கியே வாசிப்பது இவரது வழக்கம்.

புல்கோ கிளப், பார் உட்பட பல வசதிகளுடன் கூடிய ரிஸார்ட் ஒன்றுக்குச் சொந்தக்காரரான வின்சென்ட் ஜார்ஜ், அங்கேதான் ரகசியமான முறையில் பலரையும் சந்தித்து டீல்களை முடிப்பாராம். சி.பி.ஐ. வட்டாரம் வெளியிடுகிற வின்சென்ட் ஜார்ஜின் சொத்துப் பட்டியல், பல காங்கிரஸ் பெருந்தலைகளையே வாய் பிளக்க வைத்திருக்கிறதாம்.

சில வருடங்களுக்கு முன், கர்நாடகாவிலிருந்து, ராஜ்ய சபை எம்.பி. ஆகத் தேர்ந்தெடுக்கப்பட பெரும் முயற்சி செய்தாராம். ஆனால் நரசிம்மராவ் தலையிட்டு அதைக் கெடுத்து விட்டார் என்கிறது ஒரு காங்கிரஸ் தலைமையகத்துப் பட்சி!

— கௌதம்ராம்

உயிரெழுத்து

# குயிலுக்கு விருந்து!

அப்பாவைப் பற்றி புதுசா சொல்லனும்னா என்ன இருக்கு? 'இளையராஜா அலைஸ் இசை'ன்னு எல்லாருமே சொல்றதுதான் என்னோட கருத்தும். இசைத் துறையில அவர் ஒரு ஜீனியஸ்னாலும் ஸ்டூடண்ட் மாதிரி ஏதாவது கத்துக்கிட்டேயிருப்பார். இப்ப கூட புதுசா இசைக்கருவி ஏதாவது பார்த்தா உடனே வாங்கி, ஆர்வத்தோட கத்துக்குவார்.



ஆல்பம் பண்றது லேட்டஸ்ட் ஃபாஷனாயிருக்கு. இரண்டு வருஷத்துக்கு முன்னால 'சுதந்தரம்'னு ஆல்பம் செஞ்சேன். லேட்டஸ்டா 'ஐம் இன் லவ்'னு ஆல்பம் பண்ணியிருக்கிறேன். கார்த்திக் ராஜா,

யுவன், ஜேசுதாஸ் மகன் விஜய், சுருதி கமல்ஹாசன், ஸ்ரீநிவாசன்னு பிரபலமான வங்க ஆளுக்கொரு பாட்டு சோலோவா பாடி அசத்தியிருக்காங்க. இதுல ராஜலட்சுமிங்கறவங்களை மும்பையில ஒரு ரெக்கார்டிங்ல சந்திச்சேன். உடனே பிரெண்ட்ஸ் ஆயிட்டோம். இந்த ஆல்பத்துல அவங்களுக்கும் பாட வாய்ப்பு கொடுத்திருக்கேன். தோழிக்கு சின்னப் பரிசுன்னு வெச்சுக்குங் கோங்களேன்!

**இ**சை

அப்பாவோட இசையமைப்புலதான் நிறைய பாடியிருக்கேன். கிட்டத்தட்ட ஐம்பது சதம். சிற்பி, தேவா சார் மியூசிக் லேயும் பாடியிருக்கேன். நான் பாடி நிறைய பக்திப் பாடல்கள் காசெட்டா வெளி வந்திருக்கு. ரமண மாலை, கந்தர் சஷ்டி கவசம், தாய் மூகாம்பிகை இப்படி எல்லாமே தெய்வீகம்.

**ஈ**கை

சமீபத்துல என்னை உலுக்கிய விஷயம்னா குஜராத் பூகம்பப் பேரழிவுதான்! டீ.வில சில காட்சிகள் என்னை ரொம்பவே உலுக்கி எடுத்துடுச்சு... பணம், பழைய துணி மணி என்று சேகரித்து உதவி செஞ்சேன்.

**உ**ள்மனசு சொன்னா சில சமயம் அப்படியே நடந்துடும். நான் ரொம்ப சினிமா பார்க்க மாட்டேன். எப்பவாவது அத்திப் பூக்கற மாதிரி, படம் பார்ப்பேன். சமீபத்துல, 'கிளாடியேட்டர்' பார்த்தேன். ரொம்ப பிடிச்சிருந்தது. ரஸ்ஸல் குரோவ்வுக்குச் சிறந்த நடிப்புக்கு விருது கிடைக்கும்னு நினைச்சேன். அதேபோல ஆஸ்கர் விருது கிடைச்சுருச்சு. விருது வாங்கினபோது, அவரைவிட எனக்குதான் சந்தோஷமா இருந்தது.

**ஊ**ர்பட்ட பாராட்டு.... வாழ்த்து... 'பாரதி' படத்துல பாடினதுக்காக தேசிய விருது வாங்கின அன்னிக்கு எங்க வீட்டு ஹாலே பூங்கொத்து மயமா ஆயிடுச்சு. அப்பா முத்தங்கள் கொடுத்து ஆசீர்வதித்தார். அம்மா குலோப்ஜாமூன் செய்து கொடுத்தார்... ரொம்ப சந்தோஷமா இருந்தது. 'மயில் போல பொண்ணு' ரிகார்டிங் போது பாட்டை அப்பா முதல்ல பாடிக் காண்பிச்சார். நான் பாடினேன். அன்னிக்கு டேக் 'ஓகே' ஆறதுக்கு மூணு மணி நேரம் ஆச்சு. பாடும்போது பாட்டு 'ஹிட்' ஆகும்னு தோணிச்சே தவிர, தேசிய விருது கிடைக்கும்னு நினைக்கவேயில்லை. இனிய ஆச்சரியம்...!

**எ**ங்க அண்ணி ராஜீவிதான் என்னோட பெஸ்ட் ஃபிரெண்ட். அவங்களைக் கூட்டிக்கிட்டு ஸ்பீடா காரை ஓட்டற துன்னா எனக்கு ரொம்பப் பிடிக்கும். அவங்க எங்க வீட்டுக்கு வர்றதுக்கு முன்னால பூஜை அறையை அலங்காரம் பண்றது, பூஜைக்குத் தயார் பண்றது எல்லாம் என்னோட வேலையா இருந்தது. இப்ப அவங்க பண்றதால, நான் ஃப்ரீயாயிட்டேன். தாங்க்ஸ் அண்ணி.

**ஏ**கப்பட்ட காசெட் கலெக்ஷன் எங்க வீட்ல இருக்கு... லதா மங்கேஷ்கர், பி. சுசீலா பாடிய பழைய பாடல்களின் காசெட் நிறைய இருக்கு... அதைத்தான் நான் அடிக்கடி கேட்டு ரசிப்பேன்.

**ஐ**டியல் கணவன்.... என்னோட அப்பா பார்க்கிறவரைதான் நான் திருமணம் செஞ்சுக்குவேன். நல்ல மனசுள்ள, இசை ஆர்வம் இருக்கறவர் வாழ்க்கைத் துணையா வரணும்னு ஆசைப்படறேன். அமையுதான்னு பார்ப்போம்.

**ஒ**ரே சந்தோஷம்... படபடப்பு... இரண்டுமே ரேவதி மேடம் 'மித்ர...' (மை பிரண்ட்) படத்துக்கு என்னை இசையமைக்கக் கூப்பிட்டப்போ நேர்ந்தது! என்னோட முதல் படமே ஆங்கிலப் படமாக, பெண்கள் மட்டுமே 'வொர்க்' பண்ற படமாக அமையும்னு நான் எதிர்பார்க்கவேயில்லை. இரண்டு பாடல்கள் கம்போஸ் பண்ணி அப்பாகிட்டே போட்டுக் காட்டினேன். அவருக்கு ரொம்ப பிடிச்சிருந்தது. வசிஷ்டர் வாயாலே...

**ஓ**ம்: இசைக்கு ஆதார சுருதியே ஓம்தான். மூகாம்பிகை என்னோட இஷ்ட தெய்வம். வருஷா வருஷம் ஜனவரி பிறக்கும் போது, குடும்பத்தோட கொல்லூருக்குப் போயிடுவோம். அந்தக் கோயிலோட அழகும், அம்மன் முகத்துல தெரியற கருணையும் அபூர்வமான அனுபவமா இருக்கும்.

— அனு

படம்: ஸ்ரீஹரி

# தெய்வத்திற்கு உணவை





## நைவேத்தியமாகப் படைப்பது . ஏன் ?

மிக அண்மையில் தோன்றியவரும் ஆலய வழிபாடு செய்துவந்தவருமான ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்சர் இதற்குச் சாட்சி ஆகிறார்.

தூய அன்புடனும் பூரண விசுவாசத்துடனும் தெய்வத்துக படைக்கப்படும் நைவேத்தியத்தை மூர்த்தியினிடமிருந்து அருட்ஜோதி ஒன்று கிளம்பி வந்து ஸ்பரிசிக்கிறது.

அத்தகைய அருள் ஸ்பர்சம் ஆன பின்பே. அது பிரசாதமாகின்றது. ஈசுவரப்பிரசாதமாக அன்பன் அதை ஏற்றுக் கொள்கின்ற பொழுது அவனுடைய அந்தக்கரண சுத்திக்கு அது பேர் உதவிபுரிகின்றது.

ஆதாரம் : தர்மசக்கரம்



இரவெல்லாம் விடாமல் பெய்து, விடிகிற நேரத்தில் நின்று போயிருந்த மழை மறுபடியும் காலை எட்டு மணிக்கே ஆரம்பித்து விட்டது.

நொய்யரிசிக் கஞ்சியைக் குடித்தபடியே பழனிச்சாமி முற்றத்தை எட்டிப் பார்த்தார்.

மழை பெய்து கொண்டிருக்கவில்லை; கொட்டிக் கொண்டிருந்தது.

கடைசி வாய்க் கஞ்சியை அவசரமாகக் குடித்துவிட்டு எழுந்தார்.

சுவரோரம் பிளாஸ்டிக் சாக்குகளால் மூடப்பட்டிருந்த அட்டைப் பெட்டிகளைக் கவலையுடன் பார்த்தார்.

உள்ளே இருந்தவை விற்பனைக்கான சரக்குகள். கைலி, பனியன், துண்டு, கைக்குட்டை, கவுன் என்று ரெடிமேடு வகையறாக்கள்.

பழனிச்சாமிக்கு ரயிலடிக்குப் பக்கத்தில் நடைபாதையில் கடை போடுகிற தொழில். நாடாக் கட்டிலை விரித்துப் போட்டு, சரக்குகளைப் பரப்பி வைத்து நாள் முழுக்க நின்றால் பத்தும் இருபதும் வரும். சில சமயம் நூறும் இருநூறும்கூட கிடைக்கும்.

ஆனால் மூன்று நாட்களாக மழை காரணமாக கடை போட முடியவில்லை.

'மழை எப்ப விடுமோ' என்று சலித்தபடியே பிளாஸ்டிக் சாக்குகளை இன்னும் நன்றாக இழுத்து விட்டார்.

அப்போது அவரது இரண்டு பையன்களும் அங்கங்கே சட்டிகளையும் மண் பானைகளையும் கொண்டு வந்து வைத்தார்கள்.

ஒழுகும் இடங்களை இப்படியாகச் சமாளித்தாலும், மழை நீர் ஒரு மூலையிலிருந்து சுவர் வழியே வழிவதைத் தடுக்க முடியவில்லை.

இந்த ஒண்டுக் குடித்தனப் போர்ஷனுக்கு மாதம் நானூறு ரூபாய் வாடகை. அதை நினைக்கும் போதெல்லாம் அவருக்கு வயிற்றெரிச்சலாக இருக்கும்.

ஆனால் அந்த வாடகையையும் கூட உரிய தேதிக்குள் தந்துவிட முடிவதில்லை.

இந்த மாதம் தேதி எட்டாகி விட்டது. இன்னும் வாடகைக்கு வழியில்லை.

மூன்றாம் தேதி வந்த வீட்டுக்காரரிடம் இரண்டு நாட்கள் தவணை வாங்கிக் கொண்டார் பழனிச்சாமி.

அப்போதே முணுமுணுத்துக் கொண்டு போனார் வீட்டுக்காரர். இரண்டு நாள் கழித்து, பழனிச்சாமி கடை போடுகிற இடத்துக்கே வந்து விட்டார் அவர்.

உடனே பழனிச்சாமி கையில் இருந்த

சி.என். ராஜராஜன்

நூறு ரூபாயை எடுத்து பவ்யமாக நீட்டினார். மீதிக்கு இன்னும் சில நாட்கள் தவணை கேட்டார்.

வீட்டுக்காரருக்கு ரொம்பவும் கோபம் வந்து விட்டது. "நூறு நூறாவெல்லாம்






வாடகை வாங்கறதில்லை'' என்றார் வெடுக்கென்று.

இப்போது அந்த நூறு ரூபாயும்கூட கைவசமில்லை.

அதுதான் பழனிச்சாமிக்கு கலக்கத்தைக் கொடுத்தது.

இந்த மழையெல்லாம் வீட்டுக்காரருக்கு ஒரு பொருட்டே இல்லை. எந்த நிமிடமும் வாடகைக்கு வந்து விடுவார் அவர்.

வாடகைப் பணம் கைக்கு வரவில்லை என்றால் அப்புறம் அவர் பேசுகிற பேச்செல்லாம் ரொம்பக் கடுமையாக இருக்கும். நடு முற்றத்தில் நின்றபடி மூன்று போர்ஷன்காரர்களுக்கும் காதில் விழும்படியாக ஏசவும் பேசவும் ஆரம்பித்து விடுவார்.

அவர் வருகிற நேரம் வீட்டில் இல்லாமல் எங்காவது வெளியே போய்விட வேண்டும் என்று அவருக்குள் ஒரு தவிப்பு ஏற்பட்டது.

அவ்விதம் கிளம்பிவிட முடியாதபடி மழை அவரை முடக்கிப் போட்டிருந்தது. ஒரு குடை இருந்திருந்தால் எப்போதோ கிளம்பியிருப்பார்.

இத்தனைக்கும், இருமலும் சளியும் அவரை நோக அடித்திருந்தன. எப்போது வேண்டுமானாலும் ஜுரம் வந்து விடும்.

இருந்தாலும் வீட்டுக்காரர் வருவதற்குள் கிளம்பிவிட முடியாதா என்றிருந்தது அவருக்கு. கொஞ்சம் மழை விட்டால்கூட போதுமே என்ற ஏக்கத்தோடே முற்றத்து மழையைப் பார்த்தார் பழனிச்சாமி.

மனத்தை ஒரு வெறுமை நிறைத்தது. அந்தத் துயரத்துடனேயே அடுக்களை பக்கம் பார்வையைத் திருப்பினார் அவர்.

ஒழுகாத இடமாகப் பார்த்து சாக்கு விரித்துப் போட்டு ஒண்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள் அவரது இரண்டு பையன்களும்.

அடுப்பில் கஞ்சியை வைத்து சூடேற்றிக் கொண்டிருந்தாள் அவர் மனைவி. அதற்காகவே ஆவலோடு காத்துக் கொண்டிருந்தார்கள் பையன்கள்.

அவர்களைப் பார்த்ததும் பழனிச்சாமிக்கு மழையோடு இணைந்த தனது பால்ய காலம் ஞாபகத்திற்கு வந்து விட்டது.

அந்தச் சிறுவனுக்கு மழை என்றால் மனம் கொள்ளாத மகிழ்ச்சி. துளிகளாகத் தூறுகிற சிறுசிறு மழையெல்லாம் அவனுக்குப் பிடிக்காது. பெருமழை, பேய்மழை, அடைமழை போன்ற வலுவான மழைகளைத்தான் பிடிக்கும்.

எந்த மாதிரியான மழையானாலும், அந்தப் பையனுக்கோ அல்லது அவனது வீட்டாருக்கோ ஒரு சிரமமும் நேராது.

அவர்கள் குடியிருந்த வீடு ஒரு கோட்டை மாதிரி. பருவ காலம் ஏதுவாக இருந்தாலும் ஒரு பாதிப்பும் நேராது.

செட்டிநாட்டு வீடுகள் மாதிரி மிக மிக விஸ்தீரணமான வீடு அது. அந்தக் காலத்திலேயே பர்மா தேக்கு வைத்து அப்பாவும், தாத்தாவும் கட்டிப் பார்த்த வீடு. ஆனந்த பவனம் என்று தாத்தாதான் அதற்குப் பெயர் வைத்தாராம்.

மழைக்காலத்தில் வீடு ஒழுகுமோ, கூடத்தில் சாரல் அடிக்குமோ, சுவர் இடிந்து விடுமோ என்பவை போன்ற கவலைகளுக்கெல்லாம் அங்கே இடமில்லை.

என்னதான் அடைமழை பிடித்துக் கொண்டு விட்டாலும், ஆனந்த பவனத்தில் வாழ்ந்தவர்களுக்கு நடைமுறை வாழ்க்கை ஒருபோதும் பாதிக்கப்பட்டதில்லை.

காலையில் குளிப்பதற்கு வெந்நீர் சுடச் சுடத் தயாராகி விடும். அதற்காக அடுப்பு பற்ற வைப்பது ஒரு சிரமமான வேலையே இல்லை.

சமையலறையை அடுத்து கொல்லை நடையில் சற்றே இருட்டான அறை ஒன்று உண்டு. அங்கே காய்ந்த விறகும், சுள்ளிகளும், வரட்டிகளும் மூட்டை மூட்டையாகத் தவிடும், டின்களில் கெரஸினும் மழை நாளிலும் நிறைந்திருக்கும்.

துணி துவைத்துப் போட்டால் காயாதே என்று யாரும் கவலை கொள்ள மாட்டார்கள். அதற்காக அணிந்த ஆடைகளையே திரும்பத் திரும்ப அவர்கள் அணிவதில்லை. தினம்தோறும் பீரோவிலிருந்து புதிது புதிதாக எடுத்து உடுத்துவார்கள்.

மழையால் அரிசி விலை ஏறுமோ, பஞ்ச காலத்தில் அரிசி கிடைக்காமல் போய் விடுமோ என்றெல்லாம் அவர்களுக்குக் கவலையில்லை. வீட்டின் இரண்டாம் கட்டில் மிகப் பெரிய மரப் பத்தாயம் இருந்தது. ஒரு வருஷத்திற்குத் தேவையான அரிசி அதில் நிறைந்திருக்கும்.

வெளியில் கிளம்புகிறவர்களுக்கு மழை ஒரு தடையாக இருக்காது. வீட்டில் எப்போதும் அழகான குடைகள்-எல்லாம் அந்தக்கால மலேயா குடைகள்-ஏழெட்டு இருந்தன.

மழைக்கால இரவுகளில் மின்சாரம் இல்லாத பொழுதுகளிலும் கூட வீடெல்லாம் வெளிச்சமாகவே இருக்கும். முன்கூடம், உள்கூடம், சமையலறை, கொல்லைக் கிணற்றடி, மாட்டுக் கொட்டகை போன்ற இடங்களிலெல்லாம் பெட்ரோமாக்ஸ் லைட்டுகளைப் பற்ற வைத்துத் தொங்க விட்டிருப்பார்கள்.

மழைக்கால குளிருக்கு இதமாக, போர்த்திக் கொள்ள போர்வைகளும், போட்டுக் கொள்ள ஸ்வெட்டர்களும், தலையில் கட்டிக் கொள்ள மப்ளர்களும் எத்தனை இருந்தன என்ற எண்ணிக்கை அந்த வீட்டுவாசிகளுக்குத் தெரியவே தெரியாது.

இப்படியாக மழையை எதிர்கொள்ள எல்லாவிதமான வசதிகளும் ஆனந்த பவனத்தில் இருந்தன.

மழை அதுபாட்டுக்கு வரும். தூறும்.

**''கழுத்துல பெல்ட் போட்ருக்கியே... எலும்பு தேய்மானமா?''**

**''நீ வேற... கழுத்துல கிடந்த நகையை எல்லாம் என் புருஷன் அடகு வச்சுட்டார்! வெளில தெரிய வேணாம்னு கழுத்தை மறைச்சிருக்கேன்!**

**– அம்பை தேவா**



அப்படியே கொட்டும். சில சமயம் சிதறும். சீறும். இடைவிடாமல் இறங்கிக் கொண்டேயிருக்கும். அத்தனைக்கும் ஈடு கொடுத்து கம்பீரமாக நின்றிருக்கும் ஆனந்த பவனம்.

ஆனந்த பவனத்தில் அன்று வந்த மழையின் பெய்யப்படாத ஒருபகுதி இப்போது அந்த ஒண்டுக் குடித்தன வீட்டில் பெய்து கொண்டிருக்கிறது.

முற்றத்தில் முழுமையாகவும், போர்ஷனுக்குள் அங்கும் இங்குமாகவும் மழை பெய்தபடி இருக்கிறது.

ஆனால் இப்போது மழையின் வேகம் சற்று குறைந்திருந்தது.

"இப்படியே முழங்காலைக் கட்டிகிட்டு உட்கார்ந்திருந்தா சரியாப் போச்சா?"

பழனிச்சாமி திடுக்கிட்டு தன் நினைவுகளிலிருந்து தன்னை மீட்டு, தன் மனைவியை நிமிர்ந்து பார்த்தார்.

"வீட்டுக்காரர் இங்க வாடகைக்கு வந்து நின்னு நாம இல்லேன்னு கை விரிக்கிறதை விட, நீங்களே அவர் வீட்டுக்குப் போய் கைய காலைப் பிடிச்சு அடுத்த மாதம் சேர்த்துத் தர்றோம்னு சொல்லிப் பார்க்கலாம்ல... அவரு இங்க வந்து சத்தம் போட்டு, மானம் மருவாதி போகணுமா?"

அவள் சொல்வதும் நியாயமாகப் பட்டது அவருக்கு. ஆனால் எந்த முகத்தோடு அவர் வீட்டுக்குப் போய் அவர் முகத்தை ஏறிட்டுப் பார்ப்பது என்றுதான் தயக்கமாக இருந்தது.

"ம்ம்" என்று ஒப்புக்குத் தலையாட்டியவர், மழை இன்னும் கொஞ்சம் விட்டால் வெளியே கிளம்பி விடலாமே என்று நினைத்துக் கொண்டார்.

அப்போது வீட்டு வாசலில் யாரோ வந்து நின்று குடையை மடக்குகிற சப்தம் கேட்டது.

வீட்டுக்காரர்தான் வந்து விட்டாரோ?

பழனிச்சாமிக்கு திக்கென்றது. வயிற்றிலும் நெஞ்சிலும் ஒரு பதற்றம் ஏற்பட்டது.

அவர் இருந்தது வீட்டின் கொல்லைப்புற போர்ஷனில். அவருக்கு முன்பாக மூன்று போர்ஷன்கள் இருந்தன.

அவர்களில் யாராவது ஒருவர் கூட வந்திருக்கக் கூடும் என்று அவரால் ஆறுதல் கொள்ள முடியவில்லை.

வருகிறவர் வாசல் நடையில் செருப்பைக் கழற்றாமலேயே வீட்டுக்குள் நுழைந்து நடந்து வந்து கொண்டிருந்தது 'சரக் சரக்' என்று சப்தத்திலேயே தெரிந்தது.

ஒவ்வோர் அடியின் சப்தமும், நெஞ்சில் மிதித்த மாதிரி அவருக்கு வலித்தது.

வருகிறவர் முற்றத்தில் இறங்கி விட்டதையும் உணர முடிந்தது.

வருகிற அவர், வீட்டுக்காரர்தானோ?

பழனிச்சாமியால் தீர்மானிக்க முடியவில்லை. ஒன்று மட்டும் புரிந்தது. வருகிறவர் வீட்டில் நிறைய குடைகள் இருக்கும். ஆனந்த பவனத்தில் இருந்ததைப் போல. ○

## 'மோர், மோர்' இணக்கம்!

பெங்களூரில் ஸ்ரீராமநவமி பூஜையிலும் விழாவிலும் இஸ்லாமிய வாலிபர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.



பக்தர்களுக்கு, பானகம், நீர்மோர் வழங்கும் இந்த முஸ்லிம் வாலிபரைப் பார்க்கும்போது, மத வேறுபாடுகள் சுயநலத் தலைவர்களிடமும், மத நல்லிணக்கம் மக்களிடமும் உள்ளது உறுதிப்படுகிறது அல்லவா!

— பெங்களூர் அ. சங்கரன்

படம்: டைம்ஸ் ஆஃப் இந்தியா

• • • • • • • • •

உன் கையிலுள்ள வோட்டு ஒரு யோக்கியனுக்கு விழுந்தால், உன் எதிர்காலம் காப்பாற்றப்படுகிறது. ஒரு அயோக்கியனுக்கு விழுந்தால் அவனது எதிர்காலம் காப்பாற்றப் படுகிறது.

— கண்ணதாசன்

தகவல்: பா. அச்சுதன்

# பொன்னியின் செல்வன்



## எழுபத்து நான்காம் அத்தியாயம்

## "நானே முடிசூடுவேன்!"

வந்தியத்தேவன் கடைசியாகக் கூறினான்: "இளவரசே! ஒரே ஒரு மனிதர் மனது வைத்தால் உண்மையில் என்ன நடந்தது என்பதைச் சொல்லி என்னைக் குற்றமற்றவன் ஆக்கலாம். அந்த ஒருவர் பெரிய பழுவேட்டரையர்தான். கடம்பூர் மாளிகையில் யாழ்க் களஞ்சியத்தில் ஒளிந்திருந்த என்னைத் திடீரென்று கழுத்தைப் பிடித்து இறுக்கிக் கீழே தள்ளி மூர்ச்சை அடைந்து விழச் செய்தவர் அந்த வீரப் பெருமகனாராகவே இருக்க வேண்டும் என்று ஊகிக்கிறேன். வேறு யாரும் அங்கு அச்சமயம் வந்திருக்க முடியாது. நந்தினிதேவி பேரில் சந்தேகங் கொண்ட அந்தக் கிழவர்தான் அவ்வாறு காளாமுகச் சைவராக உருக்கொண்டு மறைவிடத்திலிருந்து அங்கு என்ன நடக்கிறது என்று பார்ப்பதற்காக வந்திருக்க வேண்டும். காளாமுகச் சைவக் கூட்டத்தைச் சேர்ந்த இடும்பன்காரி அவருக்கு இரகசிய வழியில் வருவதற்கு உதவி செய்திருப்பான். ஆனால் அந்த மாபெரும் வீரருக்கு என்னை முதல் முதல் பார்த்தபோதே என் மீது வெறுப்பு உண்டாகிவிட்டது. அந்த வெறுப்பு பிறகு நாளுக்கு நாள் அதிகமாகியே வந்தது. அவர் என் உயிரைக்

அமரர் கல்கி

காப்பாற்றுவதற்காக முன் வந்து அங்கு உண்மையில் நடந்ததைச் சொல்லப் போவதில்லை. நான் இந்தப் பயங்கர மான பழி பூண்டு இறந் தால் அவருக்கு ஒரு வேளை சந்தோஷ மாகவே இருக்கும். ஆகையால், இள வரசே! எனக்குத் தப் பிச் செல்வதற்கு அனுமதி கொடுங் கள்! முடிந்தால், நான் ஈழநாடு சென்று அங்கே பாண்டிய குலத்து மணிமுடி யையும் இரத்தின ஹாரத்தையும் தேடிக் கண்டுபிடிப்பேன். அல்லது இங்கேயே உங்கள் கைவாளால் என்னைக் கொன்று விடுங்கள்! என்னிடம் அள விலாத அன்பு வைத்திருந்த தங் கள் தமையனாரைக் கொன்ற



பழியைச் சுமந்து நாற்சந்தியில் கழுவில் ஏற்றப்படும் கதிக்கு என்னை ஆளாக் காதீர்கள்! அதைக் காட்டிலும் தங்கள் கை வாளினால் இறப்பது எனக்கு எவ்வளவோ ஆறுதலை அளிக்கும்! அல்லது இந்தக் கொடும்பாளூர்க் கோமகளின் கையினால் நஞ்சுண்டு இறந்தாலும் பாதகமில்லை. இவரும் தங்கள் திருத் தமக்கையுமே இந்த அநாதையின் பேரில் கருணை கொண்டு யமலோகத்தின் வாசற்படி வரைக்கும் சென்றிருந்தவனைத் திரும்பவும் இவ்வுலகத்துக்குக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறார்கள். இதற்காக இவர்களுக்கு நான் நன்றி செலுத்தப் போவதில்லை!''

இவ்வாறு வந்தியத்தேவன் கூறிய போது வானதி இளவரசரை நோக்கி, ''கேளுங்கள், ஐயா! நீங்களே கேளுங்கள்! இந்தச் சுத்த வீரருக்குப் போர்க்களத்தில் எதிரிகளுக்கு முன்னால் நின்று போரிட்டு வீர சொர்க்கம் அடையும் விருப்பம் இல்லையாம்! பெண்களின் கையினால் விஷம் அருந்திச் சாவதற்குத் தவங்கிடக்கிறாராம்!'' என்றாள்.

''இளவரசே! இவரும் தங்கள் திருத் தமக்கையும் என் மீது சொல்லும் நிந்தை மொழியினாலேயே என்னைக் கொன்று விடுவார்கள் போலிருக்கிறது. அதைவிட இவர்கள் கையினால் நஞ்சு அருந்தி இறப்பது விசேஷம் அல்லவா?'' என்றான் வாணர்குல வீரன் வந்தியத் தேவன்.

அருள்மொழிவர்மர் இந்தப் பேச்சுக்கலையெல்லாம் பாதி கவனத்துடனேதான் கேட்டுக் கொண்டிருந்தார். அவருடைய மனத்திற்குள் வேறு எதைப் பற்றியோ தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது.

சட்டென்று ஒரு குதி குதித்து எழுந்து நின்று, ''ஆகா! நான் முடிவு செய்துவிட்டேன். நானே சோழ நாட்டின் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொள்வேன். நாடு நகரமெல்லாம் மக்கள் 'அருள்மொழிவர்மனே திருமுடி சூட வேண்டும்!' என்று கோஷம் செய்கிறார்கள். போர் வீரர்களின் விருப்பமும் அதுவே! அவர்கள் எல்லாருடைய விருப்பத்தையும் நிறைவேற்றுவேன். எதற்காகத் தெரியுமா? உன்னைக் குற்றம் அற்றவன் என்று விடுதலை செய்வதற்காகத்தான். அதனால் எனக்கு ஏதேனும் அபகீர்த்தி வருவதாக இருந்தால் வரட்டும்! அது என்னைப் பாதியாது! என் பேரில் விரோதப் பான்மை கொண்ட சிற்றரசர்கள் சிலர் ஒருவேளை அந்த அபகீர்த்தியைப் பரப்புவதற்கு முயலலாம். ஆனால் மக்கள் அதை நம்ப மாட்டார்கள். சிற்றரசர்கள் என் பேரில் குற்றம் சுமத்தத் துணிந்தால், அது அவர்கள் பேரிலேயே திரும்பிப் போய்ச் சேரும்! கடம்பூர் மாளிகைக்குச் சிற்றரசர்கள் விருந்துக்கு அழைத்து அவரைக் கொன்று விட்டார்கள் என்று என்னால் திருப்பிச் சொல்ல முடியும். அத்தகைய நம்பிக்கைத் துரோகத்துக்காகவும் இராஜ குலத் துரோகத்துக்காகவும் அவர்கள் எல்லாரையும் தண்டிக்கவும் என்னால் முடியும். எது எப்படியானாலும் நானே முடிசூட்டிக் கொள்ளப் போகிறேன். என் தந்தை தமக்கை இவர்களின் விருப்பத்துக்கு விரோதமாக நடந்தாலும் நடப்பேன். ஆனால் உனக்கு எந்தவிதத் தீங்கும் நேருவதை என்னால் பார்த்துக் கொண்டு பொறுத்திருக்க முடியாது!'' என்றார்.

வானதி ஒரே குதூகலத்துடன், ''தங்களுடைய இந்த வார்த்தைகளைக் கேட்பதற்கு இளையபிராட்டி இங்கே இல்லாமற்போனாரே! அவர் முன்னிலையிலும் ஒருதடவை இந்த வார்த்தைகளைச் சொல்லுங்கள்!'' என்றாள்.

''ஒரு தடவை என்ன? பல தடவை சொல்லுகிறேன்! காரியத்திலும் இதைச் செய்து காட்டுகிறேன்!'' என்றார் பொன்னியின் செல்வர்.

வந்தியத்தேவன் தன் கண்களில் துளித்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "ஐயா! ஏழையும் அநாதையுமான என் காரணமாகத் தாங்கள் தங்களுடைய மன உறுதியை மாற்றிக் கொண்டு முடிசூடுவதற்கு முன் வந்தால், அது சோழ நாடு செய்த பாக்கியமாகும். உண்மையைச் சொல்வதாக இருந்தால், மதுராந்தகத் தேவரை நான் அறிந்த வரையில் அவர் முடிசூடச் சிறிதும் தகுதியில்லாதவர். பெண்களைப் போல் மூடு பல்லக்கிலே பிரயாணம் செய்து இராஜ்யத்துக்காகச் சதி முயற்சிகளில் ஈடுபடுகிறவர் ஒரு சாம்ராஜ்யத்தை ஆளத் தகுதியுடையவரா? விஜயாலய சோழரும், பராந்தக சோழரும் அலங்கரித்த சோழ சிங்காதனத்தில் இத்தகைய கோழைத்தனமே உருக்கொண்டவர் ஏறுவது நியாயமா? இதை இந்நாட்டு மக்கள் விரும்பாததில் வியப்பு ஒன்றுமில்லை!" என்று குரல் தழதழக்கக் கூறினான்.

"இதை உணர்ந்துதான் மதுராந்தகத் தேவரே மாயமாய் மறைந்து விட்டார் போலிருக்கிறது!" என்றாள் வானதி.

"ஆம், ஆம்! அவரைத் தேடிக் கண்டு பிடிக்கும் பிரயத்தனத்தை இனி விட்டு விடப் போகிறேன். நானே முடிசூட்டிக் கொள்ளப் போகிறேன்!" என்றார் அருள்மொழிவர்மர்.



தைக் கேட்டுக் கொண்டே அச்சமயம் அவ்வறையினுள் பிரவேசித்த குந்தவை "தம்பி! அந்த ஆசையை அடியோடு விட்டு விடு! உனக்குச் சிங்காதனமும் இல்லை; மணிமகுடமும் இல்லை. என் அருமைத் தோழி வானதி தஞ்சைச் சிங்காதனத்தில் ஏறுவதில்லை என்று சபதம் செய்திருப்பதை மறந்து விட்டாயா? அவள் இல்லாமல் வேறொரு பெண்ணை உன் அருகில் வைத்துக் கொண்டு நீ முடிசூட்டிக் கொள்வதை நான் ஒருநாளும் என் கண்களால் பார்த்துக் கொண்டிருக்க முடியாது!" என்றாள்.

"அக்கா! அந்தச் சமயத்திலே மட்டும் தாங்கள் தங்களுடைய கண்களை மூடிக் கொண்டால் போகிறது. நான் வேணுமானாலும் தங்கள் கண்களை அச்சமயம் பொத்தி உதவுகிறேன்!" என்றாள் வானதி.

பொன்னியின் செல்வர் குந்தவையைப் பார்த்து, "சகோதரி! தங்கள் தோழியின் சபதத்துக்காகச் சோழ ராஜ்யம் அரசன் இல்லாமலே நடக்க முடியுமா? நம் தந்தையோ இராஜ்ய பாரத்தை இறக்கி வைத்துவிட்டுக் காஞ்சிக்குப் போக வேண்டுமென்று பிடிவாதம் பிடிக்கிறார். மதுராந்தகத் தேவரோ மாயமாக மறைந்துவிட்டார். வேறு வழிதான் என்ன? எப்படியும் நான் முடி சூட்டி கொள்ளாமல் தீராது போலிருக்கிறதே? இராஜ்ய உரிமை பற்றி நாடெங்கும் ஒரே கொந்தளிப்பாக இருப்பது தங்களுக்குத் தெரியாததல்லவே? இந்தக் கொந்தளிப்பை எத்தனை காலம் விட்டு வைக்க முடியும்?" என்றார்.

"தம்பி! ஒரு சந்தோஷ சமாசாரம். அதைத் தெரிவிப்பதற்காகத்தான் நான் விரைந்து ஓடி வந்தேன். மறைந்திருந்த மதுராந்தகத் தேவர் வெளிப்பட்டு விட்டார். சோழ குலத்து முன்னோர்கள் செய்த தவம் வீண் போகவில்லை! இராஜ்யம் என்ன ஆகுமோ என்று நீ கவலைப்பட வேண்டியதில்லை. அவர் வேண்டாம் என்று சொன்னாலும் நாம் பிடிவாதம் பிடித்து அவருக்கு மகுடாபிஷேகம் செய்து வைக்க வேண்டும்!" என்றார் இளையபிராட்டி.



வருடைய உற்சாகம் மற்ற மூவருக்கும் சிறிது வியப்பை அளித்தது. சில நாட்களாகவே குந்தவைப் பிராட்டி மதுராந்தகருக்கு முடிசூட்டுவதற்குச் சாதகமாயிருந்தது உண்மைதான். ஆனால் அதில் அவர் இவ்வளவு உற்சாகம் உடையவர் என்று இதுவரையில் காட்டிக்கொள்ளவில்லை.



பொன்னியின் செல்வர் அது சம்பந்தமான தம் வியப்பை அடக்கிக்கொண்டு, "தேவி! அவர் எங்கே மறைந்திருந்தார்? எதற்காக? எப்படி வெளிப்பட்டார்?" என்று கேட்டார்.

"நமக்கு அருகிலேயே அவர் இருந்து வந்தும் நம் மாலேதான் கண்டு கொள்ள முடியாமற் போயிற்று. தம்பி! செம்பியன் மாதேவியின் திருவயிற்றில் உதித்தவர்தான் சோழ சிங் காதனத்தில் ஏறத் தகுந்தவர். உன் சித் தப்பாவுக்குத்தான் இந்த ராஜ்யம் நியாய மாக உரியது. நீ மகுடம் புனையலாம் என்ற எண்ணத்தை அடியோடு விட்டு விடு! ஓர் அதிசயத்தைக் கேள், தம்பி! நாலு நாளைக்கு முன் னால் நம் சித்தப் பாவுக்கு ஒரு பெரிய கண்டம் வந்தது. கொலைகாரன் ஒருவன்

அவர் மீது குத்தீட்டியை வீசி எறியக் குறி பார்த்தான். அதை அவன் எறிந்திருந்தால் மதுராந்தகத் தேவரின் உயிர் போயிருக்கும். சோழ குலத்தில் இன்னொரு அகால மரணம் ஏற்பட்டிருக்கும். அப்படி நேராமல் தடுத்த வீராதி வீரர் யார் தெரியுமா? தம் உயிரைக் கொடுக்கத் துணிந்து நம் சித்தப்பாவைக் காப்பாற்றியவர் யார் தெரியுமா?'' என்று கூறிக்கொண்டே இளைய பிராட்டி தமது விசாலாமான கண்களை வந்தியத்தேவன் பேரில் திருப்பினார். அந்தக் கண்களில் ததும்பிய அன்பும் ஆர்வமும் நன்றியும் நன்மதிப்பும் ஆதரவும் அனுதாபமும் வந்தியத்தேவனது நெஞ்சின் அடிவாரம் வரையில் சென்று அவனைத் திக்குமுக்காடச் செய்தன.

பொன்னியின் செல்வரோ வியப்புக் கடலில் ஆழ்ந்தவராக ''இது என்ன அக்கா! எனக்குப் புரியவில்லையே? என் தோழனும் இது பற்றி எனக்குச் சொல்லவில்லையே?'' என்றார்.

''அவர் சொல்லியிருக்க மாட்டார். ஏனெனில் அவர் செய்த காரியத்தின் பெருமையை அவரே உணர்ந்திருக்க மாட்டார். சோழ குலம் அவருக்கு எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறது என்று அவருக்கே தெரியாது!''

''அக்கா! புதிர் போடுவது போல் பேசுகிறீர்களே! எல்லாம் ஒரே மர்மமாயிருக்கிறதே? எங்களை வீண் திகைப்புக்கு உள்ளாக்காமல் விளக்கமாகச் சொன்னால் நல்லது! இந்த வாணர்குல வீரன் மதுராந்தகரை எப்படி, எங்கே, எந்தவித அபாயத்திலிருந்து காப்பாற்றினார்? மதுராந்தகத் தேவர் இப்போது எங்கே?'' என்று இளவரசர் கேட்டார்.

''பொன்னியின் செல்வ! இதோ இன்னும் சில வினாடிப் பொழுதில் அவரே இங்கு வந்து விடுவார்! நீ இங்கே வந்திருக்கிறாய் என்று தெரிந்து இவ்விடம் அழைத்து வரச் சொல்லியிருக்கிறேன். அவர் வாய்மொழியாகவே கேட்டுத் தெரிந்துகொள்! அல்லது எல்லாவற்றையும் கண்ணால் பார்த்த பூங்குழலியிடம் கேட்டுத் தெரிந்துகொள்...! இதோ அவர்கள் வருகிறார்கள் போலிருக்கிறது!''

ஆம்; அச்சமயம் அறைக்கு வெளியில் காலடிச் சப்தம் கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் நாலு பேர் உள்ளே வந்தார்கள். முதன்மந்திரி அநிருத்தர், ஆழ்வார்க்கடியான், பூங்குழலி, சேந்தன் அமுதன் ஆகியவர்கள் வந்தார்கள்.

சேந்தன் அமுதன் மட்டும் வழக்கத்துக்கு மாறாக விசித்திரமாக உடை அணிந்திருந்தான். தலையில் இளவரசுக் கிரீடம் அணிந்து பட்டுப் பீதாம்பரமும் அரச குலத்துக்குரிய ஆபரணங்களும் புனைந்திருந்தான்.

அறைக்குள் வந்த கோஷ்டியினரை உள்ளே இருந்தவர்கள் சிறிது வியப்புடன் பார்த்தார்கள்.

''சகோதரி! மதுராந்தகர் வருவார் என்றல்லவோ சொன்னீர்கள்? அவரைக் காணோமே?'' என்றார் அருள்மொழி.

''தம்பி! இதோ உன் முன்னால் இளவரசுக் கிரீடம் அணிந்து நிற்கிறாரே, இவர்தான் செம்பியன் மாதேவியின் திருவயிற்றில் உதித்த, சிவஞான கண்டராதித்தரின் புதல்வர். இவர்தான் நமக்கெல்லாம் சித்தப்பன் முறை பூண்ட சிவபக்திச் செல்வர். இத்தனை காலமும் சேந்தன் அமுதன் என்ற பெயருடன் அக்ஞாதவாசம் செய்து வந்தார். சோழர் குலம் செய்த பாக்கியத்தினால் இன்றைக்கு வெளிப்பட்டு வந்தார். இவரைத்தான் நாலு நாளைக்கு முன்னால் கொடியோன் ஒருவன் ஈட்டியினால் குத்திக் கொல்ல முயன்றான். அதைத் தடுத்து இந்த வாணர் குல வீரர் சோழ குலத்துக்கு இணையில்லாத

உதவி புரிந்தார். நமது முதன்மந்திரியின் சீடரான இந்த வீர வைஷ்ணவர் இவர் சைவர் என்பதையும் பொருட்படுத்தாமல் இவரைக் கோட்டைக்குள் கொண்டு வந்து சேர்த்தார்...''

இச் சமயத்தில் திருமலை குறுக்கிட்டு, "தேவி! இச் சைவருக்கு நான் எந்தவித உதவியும் செய்யவும் இல்லை; செய்ய விரும்பவும் இல்லை. வல்லத்து இளவரசரைப் பல்லக்கில் கொண்டு வருவது சாத்தியமாகும் பொருட்டு இவருக்கு மாறுவேடம் புனைந்து யானையில் ஏற்றி வந்தேன்'' என்றான்.

குந்தவை "ஆம், ஆம்! திருமலை நம்பி இரு வகையில் பேருதவி புரிந்திருக்கிறார். மதுராந்தகத் தேவருக்கு இளவரசுக் கிரீடம் அணிந்து யானை மீது ஏற்றிக் கொண்டு வந்தபோது உண்மையிலேயே இந்த நாட்டின் சிங்காதனத்துக்குரியவரை அழைத்து வருகிறோம் என்று தெரிந்திராது. அல்லது தெரிந்துதான் செய்தாரோ, அதை நான் அறியேன்! எப்படியேனும் இருக்கட்டும்! தம்பி! இத்தனை காலமும் மதுராந்தகத் தேவர் என்று நாம் எல்லாரும் எண்ணியிருந்தவர் உண்மையில் மதுராந்தகத் தேவர் அல்ல. இவர்தான் சோழ குலத்தின் தவப் பயனாக மூத்த எம்பிராட்டியின் வயிற்றில் உதித்தவர். நாம் அறிய முடியாத இறைவன் திருவிளையாடல் இவரை இத்தனை காலமும் குடிசையில் வாழ்ந்திருக்கச் செய்தது. ஆயினும் சோழர் தொல்குடியில் பிறந்ததனால் வந்த குணாதிசயங்கள் இவரிடம் குடி கொண்டிருந்ததை நாம் எல்லோரும் ஒவ்வொரு சமயம் பார்த்து வியந்திருக்கிறோம். முன்னொரு சமயம் இவர் இந்த வாணர் குலத்து வீரரைத் தப்ப வைப்பதற்காகச் செய்த முயற்சியை நாம் அறியோமா? தம்பி! உன்னை இவரும் பூங்குழலியும் கோடிக்கரையிலிருந்து நாகைப்பட்டினம் வரையில் கொண்டு போய்ச் சேர்த்ததைத்தான் மறக்க முடியுமா? இவர்தான் உண்மையில் நம் சித்தப்பா என்பதை இன்று செம்பியன் மாதேவியின் வாய்மொழியாகவும் அறிந்தோம்; இவரும் ஒப்புக் கொண்டார். தம்பி! இந்தப் புண்ணிய தினத்தில் இவரை நம் அரண்மனைக்கு வரவேற்கிறேன். இல்லை, இல்லை; இவருடைய சொந்த அரண்மனைக்கு வரவேற்கிறேன். இத்தனை காலமும் நம்மை விட்டுப் பிரிந்து வாழ்ந்தவரை இன்று நம் குடும்பத்தோடு ஒன்று சேர்ந்து விடும்படி அழைக்கிறேன். இத்தனை நாளும் பிரிந்திருந்தவர் நம்மோடு வந்து சேர்ந்த வைபவத்தை எவ்வளவோ விமரிசையாகக் கொண்டாட வேண்டும். அதற்குத் தகுதியான காலம் இதுவன்று. இந்தச் செய்தியை எவ்வளவு தூரம் வெளியில் தெரியாமல் நமக்குள் வைத்துக் கொள்கிறோமோ, அவ்வளவுக்கு நல்லது. ஆகையால் நமக்குள்ளேயே இந்த வைபவத்தை நடத்திக் கொள்ளலாம். சித்தப்பா! இப்படி வாருங்கள்! நெடுநாளையப் பிரிவுக்குப் பின்னர் இன்று சோழர் குலத்தில் வந்து சேர்ந்ததற்காக எங்கள் மகிழ்ச்சியை வேறு விதத்தில் தெரிவித்துக் கொள்ள முடியவில்லை. என் அருமைச் சகோதரர்கள் வெளியூர்களுக்குப் போகும் போதும் சரி, திரும்பி வரும்போதும் சரி, அவர்கள் நெற்றியில் நான் இருநீறு பூசிக் குங்குமத் திலகம் இடுவது வழக்கம். அதுபோலவே இன்று திரும்பி வந்து சேர்ந்த தங்கள் நெற்றியில் திருநீறும் குங்குமமும் இடுகிறேன்!''



வ்விதம் கூறி விட்டு இளைய பிராட்டி குந்தவைதேவி சேந்தன் அமுதன் என்று இத்தனை காலமும் பெயர் வழங்கிய மதுராந்தகன் நெற்றியில் திருநீறும் குங்குமமும் இட்டார். அப்போது முதன் மந்திரி அநிருத்தர் ''சோழர் குலத் தோன்றல் இளங்கோ மதுராந்தகத் தேவர் நீடூழி வாழ்க!'' என்று ஆசி கூறினார். "வாழ்க! வாழ்க!'' என்று ஆழ்வார்க்கடியான் நம்பி எதிரொலி செய்தான்.

குந்தவை முதலில் பேச ஆரம்பித்தபோது அருள்மொழிவர்மர் உள்ளத்தில் வியப்புத்தான் அதிகமாக இருந்தது. அதில் சிறிது சந்தேகமும் கலந்திருந்தது. இதெல்லாம் தம் திருத்தமக்கையாரின் விளையாட்டோ, ஏதேனும் ஒரு முக்கிய காரணம் பற்றி இவ்விதம் பேசுகிறாரோ என்றுகூட எண்ணினார். போகப் போக, அவருடைய ஐயம் தீர்ந்துவிட்டது. குந்தவை தேவியின் வார்த்தைகள் இதய அந்தரங்கத்திலிருந்து வந்த அன்புணர்ச்சி ததும்பிய வார்த்தைகள் என்பதை அறிந்தார். அவர் பெரிதும் போற்றிய தமக்கையின் உள்ளத்தில் பொங்கிய உணர்ச்சி வெள்ளம் அவரையும் ஆட்கொண்டு விட்டது. குந்தவை தேவி திலகமிட்டதும் அருள்மொழித் தேவர் சேந்தன் அமுதன் அருகில் சென்று, "சித்தப்பா! முன்னமே தங்களிடம் நான் அன்பு கொண்டிருந்தேன். தாங்கள் என் சகோதரராயிருக்கக் கூடாதா என்று எண்ணியதுமுண்டு. நமக்குள் இருக்கும் இரத்தத் தொடர்புதான் அத்தகைய உணர்ச்சியை எனக்கு அளித்தது போலும்!" என்று கூறிச் சேந்தன் அமுதனை ஆலிங்கனம் செய்துகொண்டு கண்ணீர் பெருக்கினார்.

வந்தியத்தேவன், "ஆகா! நான் முன்னமே கொஞ்சம் சந்தேகித்தேன். சேந்தன் அமுதன் என்கிற சிவபக்தருக்குள்ளே பரம்பரையான வீர இராஜகுலம் எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்கத்தான் வேண்டும் என்று எண்ணினேன். இல்லாவிட்டால், ஊரும் பேரும் இல்லாதவனாக வந்த எனக்கு அடைக்கலம் தந்து ஆதரித்து ஊரைவிட்டு ஓடவும் உதவி செய்திருப்பாரா? பேரரசர் மகனே! முன்னொரு தடவை எனக்குச் செய்த உதவியை எனக்கு மறுபடியும் செய்து அருள்புரியுங்கள்! தங்களுடைய மகுடாபிஷேக வைபவத்தைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று வருத்தமாய்த்தானிருக்கிறது. என்ன செய்யலாம்! ஒரு விஷயத்தில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. சேந்தன் அமுதனாருக்குச் சோழ சாம்ராஜ்யம் சொந்தமாவதிலேகூட எனக்கு அவ்வளவு திருப்தி இல்லை. எனக்குக் கடல் கடக்க உதவி செய்த பூங்குழலி அம்மை மகாராணி ஆகப் போவதிலேதான் எனக்குப் பூரிப்பு. சமுத்திர குமாரியின் ஆசைக்கனவு இவ்வளவு விரைவில் நிறைவேறப் போகிறது என்று அவரே எதிர்பார்த்திருக்க மாட்டார்!" என்றான்.

குந்தவை குறுக்கிட்டு, "ஐயா! தாங்கள் இன்னும் சில நாள் இவ்வளவு அதிகமாகப் பேசாமலிருந்தால் நல்லது. அப்போது உடம்பு குணப்பட்டுத் தப்பி ஓடுவதாயிருந்தாலும் விரைவாக ஓட முடியும்!" என்றாள்.

பின்னர், "தம்பி! அருள்மொழி! இத்தனை காலமும் நமது அருமைப் பாட்டியார் தமது திருமகனுக்கு மகுடம் சூட்டுவதை ஏன் ஆட்சேபித்தார் என்பதை இப்போது நாம் அறிந்துகொண்டோம். நமக்குக் கூடப் பழைய மதுராந்தகர் முடிசூடுவதில் அவ்வளவு திருப்தியில்லாமலிருந்தது. வீர சோழ குலத்தில் பிறந்தவர்களிடம் இருக்க வேண்டிய குணாதிசயங்கள் அவரிடம் இல்லை. நமது பாட்டியார் எவ்வளவோ முயன்று பார்த்தும் சிவபக்தி



அவருடைய உள்ளத்தில் ஒட்டவில்லை. வீரம் என்பது அவரிடம் மருந்துக்குக் கூட இல்லை. அப்படியிருந்தும் ஒருவாறு நாம் அவருக்கே முடிசூட்டுவதற்கு மனத்தைச் சரிப்படுத்திக் கொண்டோம். இந்தப் புதிய மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதில் நமக்கெல்லாம் திருப்தி என்பது மட்டுமில்லை; குதூகலமும் பூரிப்பும் அடைகிறோம். உன்னையும் வல்லத்து இளவரசரையும் நடுக்கடலில் முழுகாமல் கரையேற்றிக் காப்பாற்றிய பூங்குழலி சிங்காதனம் ஏறுவதைப் பார்க்கவும் எனக்கு ஆசையாக இருக்கிறது. அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை நம் முதன் மந்திரி உடனே செய்ய வேண்டும்!'' என்றாள்.

''தேவி! பெரிய பழுவேட்டரையர் மனசு வைத்துக் கடம்பூர் மாளிகையில் என்ன நடந்தது என்பதைச் சொல்ல வேண்டும். பழைய மதுராந்தகத் தேவர் என்ன ஆனார் என்பது தெரிய வேண்டும். இந்த இரண்டு காரியமும் ஆவதற்கு முன்னால் மகுடாபிஷேகத்துக்கு நாள் வைப்பது எப்படி?'' என்றார் அநிருத்தர்.

''பெரிய பழுவேட்டரையரிடம் நான் கேட்டுக் கொள்கிறேன். பழைய மதுராந்தகரைக் கண்டுபிடிப்பது உங்கள் பொறுப்பு!'' என்றாள் குந்தவை.

அப்போது சேந்தன் அமுதன் என்று நாம் இதுவரையில் அழைத்து வந்த இளவரசர் மதராந்தகத் தேவர் பொன்னியின் செல்வரைப் பார்த்துக் கூறினார்:- ''இளவரசே! தாங்கள் என்னைச் சித்தப்பா முறை வைத்து மரியாதையாக அழைத்தீர்கள். இவர்களும் என்னை 'இளவரசர்' என்று அழைக்கிறார்கள். ஆனால் தங்களை நான் 'மகனே' என்று அழைப்பது சாத்தியமில்லை. இருபத்திரண்டு ஆண்டு எளிய குடிசையில் காலங்கழித்தவன் திடீரென்று இன்றைக்கு என்னைப் பேராசர் குலத்தில் பிறந்த இளங்கோவாகக் கருதிக் கொள்ளவும் முடியவில்லை. உங்கள் எல்லாருக்கும் ஒரு விண்ணப்பம் செய்து கொள்கிறேன். வந்தியத்தேவர் தப்பியோடக் காரணமாக இருந்ததற்காக என்னைச் சிலநாள் பாதாளச் சிறையில் அடைத்திருந்தார்கள். அப்போது பக்கத்து அறையிலிருந்தவன் மூலம் இன்று வெளியான செய்தியை நான் அறிந்தேன். ஊமைத் தாயின் பிள்ளை அரண்மனையில் அரச குமாரனாக வளர்கிறான் என்றும், இராஜ குலத்துக் குழந்தை ஊமைத் தாயின் வீட்டில் வளர்ந்து வருகிறான் என்றும் அவன் கூறினான். அப்போதே எனக்கு உண்மை தெரிந்துவிட்டது. உலகம் போற்றும் செம்பியன்மாதேவி என்னிடம் காட்டிய அன்பின் காரணத்தை ஊகித்து அறிந்து கொண்டேன். அவர் என்றாவது ஒருநாள் என்னை 'மகனே' என்று அழைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அந்த ஆசை இன்று நிறைவேறி விட்டது. இதற்கு மேல் நான் ஒன்றும் விரும்பவில்லை...!''

முதன்மந்திரி குறுக்கிட்டு, ''இளங்கோவே! தாங்கள் விரும்புகிறீர்களா, இல்லையா என்பது கேள்வி அல்லவே? எது நியாயம், எது முறைமை என்றுதானே யோசிக்க வேண்டும்?'' என்றார்.

''ஆகா! நன்றாக யோசியுங்கள். என்னைப் பற்றிய வரையில், யோசனை அவசியமே இல்லை. ஏற்கெனவே தீர்க்கமாக யோசித்து முடிவு செய்துவிட்டேன். பூங்குழலி பலமுறை என்னிடம் 'அரசகுமாரனை மணந்து அரியாசனம் ஏறப் போகிறேன்' என்று கூறினாள். அதனாலேயே என் அந்தரங்கக் காதலை நிராகரிப்பதாகவும் சொன்னாள். அப்போதெல்லாம் 'பெண்ணே! உண்மையில் நான் அரசகுமாரன்தான்! நான் விரும்பினால் இந்தச் சோழ ராஜ்யம் என்னுடையதாகும்!' என்று கூற என் உள்ளமும் நாவும் துடிதுடித்தன. அந்த ஆர்வத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டேன். நாடாளும் ஆசை என் உள்ளத்தில் என்றும் புகலாகாதென்று

இறைவனை வேண்டிக் கொண்டேன். அந்த வைராக்கியத்தை நிறைவேற்றும் பொருட்டுப் பூங்குழலியைத் தியாகம் செய்யவும் உறுதிகொண்டிருந்தேன். நல்லவேளையாக, இந்தச் சமுத்திர குமாரி தனக்குத் தகுதியில்லாத ஆசையை விட்டுவிட்டு, இந்த ஏழைச் சிவாலயத் தொண்டனை மணந்து கொள்ள மனமுவந்தாள்.''

பூங்குழலி இங்கே குறுக்கிட்டு, "ஐயா எனக்குத் 'தகுதியில்லாத ஆசை' என்று எப்படிக் கூறினீர்கள்? மூன்று உலகும் ஆளும் சக்கரவர்த்தினி யாவதற்கும் நான் தகுதி உடையவளே. அப்படியிருந்தும், தங்களை மணந்து பூமாலை கட்டிப் பிழைப்பதற்கும் ஓடம் தள்ளி வாழ் நாளைக் கழிப்பதற்கும் இசைந்தேன்!'' என்றாள்.

''அப்படிச் சொல், பூங்குழலி! உன் தகுதியை நிலைநாட்ட இதுவே போதுமே! தகுதியும் தகுதியின்மையும் எப்படி ஏற்படுகின்றன? 'பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்' என்று தெய்வப் புலவரின் தமிழ் மறை கூறுகிறதே! ஆகையால் உன்னுடைய பழைய மனோரதத்தை நீ இப்போது கை விட்டு விட வேண்டாம். உன்னைக் கைப்பிடிக்கப் போகும் இந்தப் பேரரசன் மகனுக்கும் எங்களுடன் சேர்ந்து சொல்லு! சித்தப்பா! தாங்கள் தங்கள் பிறப்பின் உண்மையை அறிந்த பிறகும் இந்த ராஜ்யம் வேண்டாம் என்று வைராக்கியம் கொண்டிருந்தது நியாயந்தான். அது தங்கள் பிறவிக் குணத்தின் பெருந்தன்மையைக் காட்டுகிறது. இப்போது நாங்கள் எல்லாரும் சொல்லுகிறோம். சக்கரவர்த்தி சொல்லுகிறார்; முதன்மந்திரி சொல்லுகிறார்; நானும் என் சகோதரனும் சொல்லுகிறோம்; என் தோழி வானதி சொல்லுவதுடன் அவளுடைய பெரிய தகப்பனாருடைய மனத்தையும் மாற்றி விடுவதற்கு ஒப்புக் கொள்கிறாள். இப்போது ஏன் தாங்கள் மறுக்க வேண்டும்?'' என்றாள் இளையபிராட்டி குந்தவை தேவி.

''தேவி! நீங்கள் எல்லாரும் சொல்லுகிறீர்கள். ஆனால் இந்த ராஜ்யத்தின் குடிமக்கள் என்ன சொல்லுகிறார்கள்? அது உங்களுக்கு ஒருவேளை தெரிந்திராது. நாட்டு மக்களோடு பழகியுள்ள எனக்கு நன்றாகத் தெரியும். இந்தத் தஞ்சையிலும் பழையாறையிலும் குடந்தையிலும் கோடிக்கரையிலும் நாகைப் பட்டினத்திலும் ஜனங்களின் விருப்பம் என்ன என்று எனக்கு நன்றாய்த் தெரியும். பாண்டிய நாட்டிலும் பல்லவ நாட்டிலும் கொங்கு நாட்டிலும் ஈழ நாட்டிலும் உள்ள மக்களின் விருப்பத்தையும் நான் கேள்வியினால் அறிந்திருக்கிறேன். 'அருள்மொழி வர்மரே திருமுடி சூட வேண்டும்' என்பதுதான் ஏகோபித்த மக்களின் வாக்கு. இவ்வளவு பெரிய பிரளய வெள்ளத்தை எதிர்த்து என்னால் நீந்த முடியுமா? நான் ஆசைப்பட்டாலும் இந்தப் பெரிய சோழ சாம்ராஜ்யத்தை என்னால் ஆள முடியுமா? கடவுளே! நீங்கள் எல்லாரும் 'பழைய மதுராந்தகர்' என்று சொல்கிறவர் மீது ஜனங்கள் எவ்வளவு வெறுப்புக் கொண்டிருந்தார்கள் என்பதை நான் அறிவேன். அந்த வெறுப்புக்கெல்லாம் என்னை உரிமையாளனாக்கி விடப் பார்க்கிறீர்களா? வேண்டாம்! வேண்டாம்! அவ்வளவு பெரிய தீங்கை எனக்குச் செய்ய வேண்டாம். நான் உங்களில் யாருக்கும் எந்தவிதத் தீங்கும் செய்யவில்லையே?''

மற்றவர்களில் யாரும் இதற்கு மறுமொழி சொல்வதற்குள் பொன்னியின் செல்வர் கம்பீரமாகத் தலைநிமிர்ந்து நின்று, "இந்தப் பேச்சு இத்துடன் நிற்கட்டும்! நீங்கள் இந்த அறைக்குள் வரும் சமயத்தில் நான் 'சோழ ராஜ்யத்துக்கு நானே முடிசூட்டிக் கொள்ளப் போகிறேன்' என்று வந்தியத்தேவரிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். அதை நிறைவேற்றியே தீருவேன். முதிய எம்பிராட்டியின் திருவயிற்றில் உதித்த இந்த உத்தமத் தோழரின் கருத்தையும் அறிந்து கொண்டேன். இராஜ்ய உரிமை பற்றி இனிப் பேச்சு எதுவும் வேண்டாம்!" என்றார்.

(தொடரும்)

பிளஸ் டூ மாணவியைப் போல தோற்றமளிக்கும் கௌசல்யாவுக்கு இருபத்தியாறு வயது. இருபது வயதில் திருமணம், இருபத்தியொரு வயதில் விதவை. கணவர் மரணமடைந்தது எச்.ஐ.வி.யால்! விஷயம் தெரிந்தவுடன் இவருக்கு அதிர்ச்சி. கணவர் மூலம், தொற்றுக்குத் தானும் ஆளாகிவிட்டோம் என்று தெரிந்தவுடன் பேரதிர்ச்சி.

ஆனால் பெற்றோரும் உற்றாரும் ஊர்க்காரர்களும் கௌசல்யாவைப் புரிந்துகொண்டார்கள். கனிவோடு நடத்தினார்கள். இதில் தைரியமும் தன்னம்பிக்கையும் கிடைக்க, திருமணத்தால் தடைபட்ட படிப்பைத் தொடரவும், சிகிச்சை செய்து கொள்ளவும், சென்னையில் இருக்கும் மாமா வீட்டிற்கு வந்தபோது ஒரு திருப்பம்.

அகில இந்திய அளவில் எச்.ஐ.வி.யால் பாதிக்கப்பட்டவர்களை ஒன்றிணைக்கும் 'இந்தியன் நெட்ஒர்க் ஃபார் பீபிள் லிவிங் வித் எச்.ஐ.வி' (INP) என்ற அமைப்பில்



• "உபோட்டோ எடுக்கணும்னீங்களே, எடுங்க..."
- விக்ரமுடன் கௌசல்யா, ஜெயகதா



• "நம்பிக்கையோடு இருங்கள்..."

களப்பணியாளராகப் பணியாற்றும் வாய்ப்பு. நாடு முழுவதும் பயணப்பட்டு, பாதிக்கப்பட்டவர்களை நேரில் சந்தித்துக் கொண்டே வந்தவரை ஒரு விஷயம் உலுக்கி விட்டது. அது, தன்னையொத்த பாசிட்டிவ் பெண்களின் நிலை. தன் விஷயத்தில் கிடைத்த கனிவும் பாதுகாப்பும் கிட்டாமல் தாளுக்கு நாள் சீரழிந்து கொண்டிருந்த அவல நிலை!

எச்.ஐ.வி. கணவர் இறந்தவுடன் வீட்டாரின் தள்ளிவைப்பு. மருத்துவமனையில் புறக்கணிப்பு. வேலையின்மை. கேள்விக்குறியாகிப்போன குழந்தைகளின் எதிர்காலம். இந்தப் பிரச்னைகளின் விளிம்பில் மன நிலையும் உடல் நிலையும் ஒரு சேர பாதிக்கப்பட்டு உப நோய்களின் பிடியில் உயிர் துறந்துவிடும் பரிதாப நிலையைப் பார்த்தவுடன் இவருக்குள் ஒரு வேகம்.

கூட்டுமருந்து சிகிச்சை மூலம் வைரஸ்களின்

# 'பாசிட்டிவ்' கண்ணோட்டம்!

எண்ணிக்கையை ஜீரோ லெவலுக்குக் குறைத்துக் கொண்டு, ஆரோக்கியமாக ஐம்பது ஆண்டுகள் கூட வாழ முடியும் என்கிற நிலையில், சமூகப் பிரச்னைகள் இவர்களின் இறப்பிற்குக் காரணம் ஆவது எந்த விதத்தில் நியாயம்? இந்தப் பெண்களுக்கு உதவவும் வழிகாட்டவும் ஒரு தனி அமைப்பை உருவாக்கினால் என்ன என்ற பொறி தட்ட, 'PWN+' (பாஸிடிவ் வுமன் நெட்ஒர்க் ஆஃப் சௌத் இண்டியா) என்ற அமைப்பு 98-ல் பிறந்து விட்டது, கௌசல்யாவின் தலைமையில்.

"எச்.ஐ.வி. பாசிட்டிவ் என்றால் பாமர மக்கள் கூட பரிவோடு பார்க்கிறார்கள், ஆனால் படித்தவர்கள், பக்கத்தில் நின்று கூட பேச பயப்படுகிறார்கள்..." என்று கௌசல்யா சொல்லிக்கொண்ட வர, நமக்குள் ஒரு யோசனை.

எதற்கெல்லாமோ முன்னோட்டமும் வெள்ளோட்டமும் பார்க்கிற சமூகத்தில், பாசிட்டிவ் மனிதர்களை, பலருக்கு வழி காட்டுகிற பிரபலங்கள் எப்படிப் பார்க்கிறார்கள் என்று பரிசோதித்துப் பார்த்தால் என்ன?

நமது வேண்டுகோளுக்கு இணங்கி, கௌசல்யாவும், மற்றொரு பாஸிட்டிவ் பெண்ணான ஜெயசுதாவும் (கௌசல்யாவின் அலுவலக சகா) நம்முடன் பயணப்பட்டார்கள்.

சென்னையில் தி. நகரில் இருக்கும் பாரதீய ஜனதா கட்சியின் தலைமை அலுவலகமான கமலாலயம்.

பெண்கள் அமைப்பிலிருந்து வந்திருப்பதாக மட்டும் கூறி மாநில பொதுச் செயலாளர் இல. கணேசனைச் சந்திக்க விருப்பம் தெரிவித்தோம். அடுத்த ஐந்தாவது நிமிடம் அவரிடமிருந்து அழைப்பு.

கௌசல்யாவின் விசிட்டிங் கார்டைப் பார்த்துவிட்டு, "அமைப்பின் நோக்கம்?" என்று முதலில் கனிவோடு விசாரித்தார். PWN+ பற்றிய ஒரு பாம்ஃப்லெட் தரப்பட்டது. இரண்டே நிமிடங்களில் வாசித்து முடித்துவிட்டு நிமிர்ந்து பார்த்தார்.

" 'எயிட்ஸ் அரக்கன்' என்று விளம்பரங்கள் மூலம் ஒரு தவறான பிரசாரத்தைச் செய்து, விழிப்புணர்வுக்குப் பதிலாக பீதியை உருவாக்கி விட்டோம். இனி விளம்பரங்களும் பிரசாரமும் வெளிப்படையாக இருக்க வேண்டும்!" என்றவர், "சமுதாயத்தின் தேவையைப் புரிந்து கொண்டு இப்படியொரு அமைப்பைத் தொடங்கியதற்காக முதலில் உங்களைப் பாராட்டுகிறேன். எல்லோரும் அஞ்சுகிற ஒரு துறைக்காக எப்படி உங்களை அர்ப்பணித்துக் கொண்டீர்கள்?" என்ற முக்கியமான கேள்விக்கு வந்தார். "நாங்கள் இருவருமே எச்.ஐ.வி. பாசிட்டிவ்கள்!" என்று கௌசல்யாவும் ஜெயசுதாவும் ஒருசேரச்சொல்ல, இதைக்கேட்ட இல. கணேசன் கொஞ்சமாவது அதிர்ச்சி அடைவார் என்று எதிர்பார்த்த நமக்கு ஏமாற்றம்.

"விரைவில் மருந்து கண்டுபிடித்துவிடும் வாய்ப்பு இருக்கிறது, நம்பிக்கையோடு இருங்கள்!" என்று அன்போடு சொன்னவர், "ஒரு தந்தையின் ஸ்தானத்தில் ஆசிர்வதிக்கிறேன்!" என்று அவர்களின் தலைமீது கைவைத்து ஆசிர்வதித்து விடை கொடுத்தார்.

தரமணி திரைப்பட நகரம். சுற்றுலாப் பயணிகள் சூழ்ந்திருக்க, நடிகர் விக்ரம் 'தில்' படத்திற்காக லைலாவுடன் நடித்துக்கொண்டிருந்தார். ஷாட் முடிந்த இடைவெளியில் அவரை நெருங்கினோம்.

"இவங்க இரண்டு பேரும் உங்க ஃபேன்ஸ்!" என்றதும் "ஹாய் வெல்கம்..." என்று சொல்லிக்கொண்டே மர நிழலில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் நம்மை அமரச் சொல்லி அருகிலேயே அவரும் அமர்ந்துகொண்டார்.

"உங்களைப் பற்றிச் சொல்லுங்க" என்ற விக்ரமிடம்



• "தினசரி அரைமணி நேரமாவது தியானம் செய்யுங்கள்."



• "எங்களைப் போன்றவர்கள் என்றைக்கும் கை கொடுப்போம்..."

கௌசல்யா பாம்ஃப்லெட்டை நீட்ட, அதைப் புரட்டிய அடுத்த நிமிடம், "வெரிகுட்... தில் இஸ் எ பாசிடிவ் ஸ்டெப்!" என்று பாராட்டினார். "நாங்க இரண்டு பேரும் கூட பாஸிடிவ்ஸ்தான்" என்று கௌசல்யா உள்ளம் திறக்க, "ஐ ஆம் வெரி ஸாரி...!" என்றபடி இருவரது கைகளையும் ஆதரவாய்ப் பிடித்துக்கொண்டு சகஜமாய்ப் பேச ஆரம்பித்தார்.

"உங்க அமைப்பிலே எவ்வளவு பேர் இருக்கீங்க?"

"நூற்று எண்பது பேர். ஹவுஸ் வைஃப்ஸ், விடோஸ்தான் அதிகம்."

"ஏன் இவ்வளவு குறைந்த எண்ணிக்கை?"

"வெளியே சொல்ல பயப்படுறாங்க, எங்கே நம்பளைப் புறக்கணிச்சிடுவாங்களோ அப்படீங்கற பயம்."

"இந்த அமைப்பு எப்படி செயல்படுது?"

"ஒவ்வொரு மாதமும், எல்லா உறுப்பினர்களும் சேர்ந்து உடனடி பிரச்னைகளை எப்படி சமாளிக்கலாம்னு பேசி

முடிவு எடுக்கிறோம். பரஸ்பரம் உதவி செஞ்சுக்கிறது ஒரு பக்கம். இன்னொரு பக்கம் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு வேலை வாய்ப்பு, குழந்தைகளின் கல்விக்கு ஸ்பான்சர்... இதெல்லாம் வாங்கிக் கொடுக்கிறோம். எங்களுக்குப் பெரிய சவாலாக இருப்பது மருந்துகள்தான். ஒவ்வொரு பொண்ணுக்கும் மாதா மாதம் 4000 ரூபாய் மருந்து செலவு ஆகுது. முக்கியமா இதுக்குத்தான் உதவிக்கரம் நீட்டறோம்!''

"என்னால் ஆன உதவிகளைக் கண்டிப்பா செய்றேன்.!''

அதற்குள் அங்கே வேடிக்கை பார்க்க வந்திருந்த சுற்றுலா கூட்டம், "அய்யய்யோ, இவங்களுக்கு எய்ட்ஸாம்... எட்டி நில்லுப்பா...'' என்று காதுபட பேசவே, விக்ரமுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை, கௌசல்யா, ஜெயசுதா இருவரையும் தோழமையோடு அணைத்துக் கொண்டு "ஃபோட்டோ எடுக்கணும்னீங்களே, எடுங்க!'' என்றார்.

நடனக் கலைஞர் அனிதா ரத்னத்தின் வீடு. ஐந்தே நிமிடச் சந்திப்பு என்று அவரின் அலுவலக உதவியாளர் மூலம் நாம் குறிப்பு அனுப்பிய அடுத்த வினாடி நமக்கு அழைப்பு வந்தது.

கௌசல்யா, ஜெயசுதா இருவரும் பாசிட்டிவ் பெண்கள் என்பதையும் அவர்கள் பணி குறித்தும் இந்த முறை நாமே சொல்லி அறிமுகப்படுத்த, அவர்களின் கடந்தகாலம் கேட்டு அறிந்து, கண்கலங்கினார்.

"திருமணத்திற்கு முன்பே, ஆண், பெண் இருவரும் கட்டாய எச்.ஐ.வி.சோதனை செய்து கொள்ளவேண்டும் என்பதை தாய்லாந்து, நார்வே, பிலிபைன்ஸ் போன்ற நாடுகளில் திருமணச் சட்டமாக்கியிருக்கிறார்கள். அப்படி ஒரு சட்டம், 102 கோடிமக்கள் தொகை கொண்ட நமது நாட்டுக்கும் அவசியம். நட்சத்திரம், ராசி என்று இத்தனைப் பொருத்தம் பார்க்கும் நாம் ரத்தப்பொருத்தம் இருக்கிறதா என்று பார்ப்பதில்லை...'' என்று ஆதங்கப்பட்ட அனிதா ரத்னத்திடம் விடை பெற்றபோது, "நம்பிக்கையுடன் பணியாற்றுங்கள், எங்களைப் போன்றவர்கள் என்றைக்கும் கை கொடுப்போம்'' என்று இருவரின் கைகளைப் பற்றி உயர்த்தி உணர்ச்சி வசப்பட்டார்.

நீலாங்கரையில் இருக்கும் சிவசங்கர் பாபாவின் ஆசிரமத்துக்குச் சென்றபொழுது பக்தர்களைக் கட்டிப் பிடித்து ஆசீர்வதித்துக் கொண்டிருந்தார் பாபா.

பாசிடிவ் பெண்கள் நெட்வர்க் குறித்து தெரிந்து கொண்ட பிறகு பேசத் தொடங்கினார்.

"வாயால் சொல்லக்கூட திராணியற்று என்னிடம் மெடிக்கல் சர்ட்டிஃபிகேட்டைக் காட்டி உதவி கேட்டு நிறையபேர் வந்திருக்கிறார்கள். அவர்களைப் போல் ஒடுங்கி விடாமல் எதிர்த்துப் போராட வேண்டும் என்ற உயர்வான நோக்கத்தோடு நீங்கள் இருவரும் செயல்படுகிறீர்கள்... உங்களுக்கு என்னுடைய ஆசீர்வாதம்!'' என்றவாறு ரோஜா மலர்களை வழங்கி ஓர் அறிவுரையும், வழங்கினார்.

"தினசரி, அரைமணி நேரமாவது தியானம் செய்யுங்கள். அதுதான் மனத்தை சமநிலையில் வைத்திருக்க உதவும். எங்களுடைய ஆசிரமத்தின் தியான அறை உங்களுக்காகத் திறந்தே இருக்கும், எப்போது வேண்டுமானால் வாருங்கள்!'' என்று வழியனுப்பினார்.

எச்.ஐ.வி.க்கு ஆளானவர்களைப் பார்த்து, 'உனக்கு இது எப்படி வந்தது?' என்று கேள்வி கேட்பதை விட்டுவிட்டு, 'இப்போது எப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறாய்? என்னால் உனக்கு என்ன உதவி செய்ய முடியும்?' என்று கேட்பதே மனிதநேயம். அந்த மனிதநேயத்தை வளர்க்க இந்த வி.ஐ.பி. டூர் அடிக்கல்லாக இல்லாவிட்டாலும் அணில்கல்லாக இருந்தால் சந்தோஷப்படுவோம்!

— ஆர்.சி. ஜெயந்தன்

படங்கள்: ராஜன்

டீனேஜ் ஹீரோக்களிடம் 'கர்ல்—ஃப்ரெண்டு கிடைத்த பிறகு உங்கள் வாழ்க்கை எத்தனை மடங்கு ருசிக்கிறது...2?4?6?' என்று நாம் விரல்விட்டு எண்ண ஆரம்பித்ததுதான் தாமதம், விரல்களை ஒடிக்கவே வந்துவிட்டார்கள். 'ஏன் இவ்வளவு கடுப்பு?' என்று கேட்டு முடிப்பதற்குள், 'நான்', 'நீ' என்று போட்டியுடன் புலம்பல்ஸ் லிஸ்ட் ஆரம்பமாகி விட்டது...

1

**பா**க்கெட் மணி என்ற பெயரில் கிடைக்கும் 20 ரூபாயையும் 50 ரூபாயையும் வருடம் முழுவதும் சிறுகச் சிறுகச் சேர்த்து உலகத்திலேயே அதிமுக்கிய நாளான அந்த நாளுக்காக (வேறென்ன, அவள் பிறந்தநாள்தான்!) காத்திருந்து, அந்த நாள் வந்தவுடன், லைஃப்- ஸ்டைல், லாண்டுமார்க், ஸ்டாப்பர்ஸ்-ஷாப் எல்லாம் ஏறி இறங்கி (காஸ்ட்லியான கடையில் சாமான் வாங்கினால்தானே அது சாமானிலேயே சேர்த்தி?), இதை விட நல்ல கிஃப்டை யாரும், யாருக்காகவும், எதுக்காகவும், எந்த சந்தர்ப்பத்திலும் வாங்கியதே கிடையாது என்று தோன்ற வைக்கும் ஒன்றை வாங்கிக் கொண்டு போய் நின்னால், 'இதை விட்டால், அந்தக் கடையில் வேறு சாமானே கிடைக்கவில்லையா?' என்று கேட்டால் மனுஷனுக்கு மண்டை காயாது?

2

**க**னவு என்பது வரும், போகும், அதை ஒரு பெரிய விஷயமாகவே நினைத்திருக்க மாட்டீர்கள், கர்ல்-ஃப்ரெண்டு கிடைக்கும் வரை. கர்ல்-ஃப்ரெண்டு கிடைத்துவிட்டாலோ நீங்கள் கனவு கண்டே ஆக வேண்டும். காரணம், காலையில் 6.30 மணிக்கு ஒரு இனிமையான குரல் எழுப்பும். "நேத்து என்னைப் பத்தி கனவு கண்டியாடா?" (டா என்பது செல்லமாம்!) ஒன்று மட்டும் சொல்லிவிடுகிறேன். நீங்கள் கனவு கண்டாலும் சரி, காணவில்லை என்றாலும் சரி, 'இல்லை' என்று மட்டும் சொல்லி விடாதீர்கள், அப்புறம் கதை கந்தல்!

3

**நீ**ங்களும் கர்ல்- ஃப்ரெண்டும் ஒன்றாக வெளியே போகிறீர்கள். எதிரில் ஒரு பெண் வருகிறாள், அவளை நீங்கள் யதேச்சையாகப் பார்க்கிறீர்கள். நீங்கள் எத்தனை நொடி அவளைப் பார்க்கலாம் என்று ஒரு கணக்கு இருக்கிறது மேலிடத்தில். உங்களுக்கு அந்தக் கணக்கு சுட்டுப் போட்டாலும் புரியாது. அதிகப்படியாக ஒரு நொடி பார்த்து விட்டீர்களோ, ஆண்டவனாலும் உங்களைக் காப்பாற்றமுடியாது!

4

**மா**றுதலுக்கு ஒரு டிஷ்யூம்-டிஷ்யூம் படத்துக்குப் போனால் என்ன என்று உங்களுக்குத் தோன்றும்.

தோணினால் என்ன பிரச்னை, போக வேண்டியதுதானே என்று கேட்கிறீர்களா? பிரச்னையின் பெயர் கர்ல்-ஃப்ரெண்டு. காதலர்கள், காதல் படங்களை ஒன்றாகப் பார்த்தால் காதல் ஆறாய் ஓடும் என்று எந்த புண்ணியவானோ 'கர்ல்-ஃப்ரெண்டுகள்' என்ற உயிரினத்திடம் சொல்லிவிட்டுப் போய்விட்டான். காதல் படம் வேண்டாம் என்று சொன்னீர்களோ ஹஹ்ஹா.... சொல்லிப் பாருங்கள். சொல்லிப்பாருங்களேன் தெரியும்!

**5** ஒரு குறிப்பிட்ட ஜாயிண்ட்டில் நீங்களும் கர்ல்-ஃப்ரெண்டும் மாலை சந்திப்பதாக ஏற்பாடு என்று வைத்துக் கொள்ளுங்கள். லேட்டாகப் போய் யார் வாங்கிக் கட்டிக் கொள்வது என்று அனுபவம் கற்றுத் தந்த பாடம் அரை மணி நேரமோ ஒரு மணி நேரமோ முன்னதாகவே போய்த் தொலைப்பீர்கள். இந்த நேரத்தில், இந்த இடத்தில் அச்சுறத்த, தெரிந்தவர்கள் யார் கண்ணிலாவது பட்டு, வீட்டுக்கு நியூஸ் போய் டின் கட்டிவிடுவார்களோ என்ற பயத்தில் 'திருக்கு முறுக்கு' என்று முழித்துக் கொண்டிருக்கும் உங்களை, போகிறவர்களும் வருபவர்களும் (புதிதாய் முளைத்த தீவிரவாத இயக்கங்களின் பெயர்கள் எல்லாம் அவர்கள் மனத்தில் ஓட) விநோதமாய்ப் பார்த்துக் கொண்டு போவது கொடுமை!

**6** ஒரு நாள் முழுவதும் அவளுடன் மகாபலிபுரத்தில் சுற்றிவிட்டு வீடு திரும்பினால், நுழையும் போதே ஃபோன் அடிக்கும். வேறு யார், மேடம்தான்! 'ஹௌ வாஸ் தி டே?' என்று கொஞ்சல். 'இன்றுதான் என் பிறப்புக்கே அர்த்தம் புரிந்து கொண்டேன்.... இத்யாதி, இத்யாதி' என்று காதல் ரசம் சொட்டச் சொட்ட நீங்கள் ஒரு முழு நீள டயலாக் சொல்ல வேண்டும். அதான் நாள் முழுக்க, சலிக்கச் சலிக்க பேசி ஆகிவிட்டதே என்று சுருக்கமான, அவ்விடத்தில் சுகப்படாத ஒரு அரை வேக்காட்டுப் பதிலைச் சொன்னீர்கள், அடுத்த தடவை 'மகா'வாவது 'பலி'யாவது 'புரம்'ஆவது?

**7** ஃபோனில் பேசியதுபோக, நேரில் சந்திப்பது போக, லவ்-லெட்டர்கள் எழுதிக் கொண்டே இருக்க வேண்டும். அதுவும் ஒவ்வொரு லெட்டரும் ஆறு பக்கத்துக்குக் குறையாமல் இருத்தல் அவசியம் (என்னுடைய ஹிஸ்டரி டீச்சரால் கூட என்னை இரண்டு பக்கத்துக்கு மேல் எழுதவைக்க முடியவில்லை!). வேஸ்டாகிப் போவது அந்த 6 பக்கங்கள் மட்டும் அல்ல, ஒரு பக்கத்தைச் சரியாக எழுதி முடிப்பதற்குள் நாங்கள் எழுதிக் கிழிக்கும் சராசரியாக பத்து பக்கங்களையும் கணக்கில் எடுத்துக் கொள்ளுங்கள். இந்த லட்சணத்தில், மரங்களை வெட்டாதீர்கள், பேப்பரை வீணக்காதீர்கள் என்று காலேஜ் மேடைகளில் முழங்கி பேச்சுப் போட்டிகளில் பரிசு வாங்கிக் கொண்டிருக்கிறோம். இந்த இரட்டை வேடம் தேவையா?

**8** 'ஐ லவ் யூ' கார்டுகள்; 'ஐ லவ் யூ மோர் தான் வர்ட்ஸ் கான் ஸே' கார்டுகள்; 'யூ ஆர் மை லைஃப்' கார்டுகள்; 'யூ ஆர் தி ஆப்பிள் ஆஃப் மை ஐ' கார்டுகள் என்று கார்டுகள் வாங்கியே அந்து போய்விடும். அதிலும், உங்கள் கர்ல்-ஃப்ரெண்டின் ஸ்நேகிதிக்கு அவளுடைய பாய்-ஃப்ரெண்டு (கடங்காரன்!) எதையாவது புதுமையாக அனுப்பித் தொலைத்துவிட்டால் நீங்கள் காலி! யாரோ யாருக்கோ எதையோ அனுப்புவது உங்கள்

வாழ்க்கையில் ஏன் புயலைக் கிளப்ப வேண்டும்?

**உ**ங்கள் கர்ல்–ஃப் ரெண்டு அவுட்டிங் போகலாம் என்று கூப்பிடும்பொழுது, உங்களுக்கு ஏற்கெனவே வேறொரு ப்ரோக்ராம் ஃபிக்ஸ் ஆகிவிட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள். சொல்லி விடுவது தானே என்கிறீர்களா? இப்படித்தான் முதல்தடவை, நானும் உங்களைப் போல் அப்பாவித்தனமாக நினைத்துக் கொண்டு 'நாளைக்குப் போகலாமே!' என்று சொல்லிவிட்டேன். என்னுடைய இந்த இரண்டு வார்த்தைகள் அவளுடைய உணர்ச்சிகளை எப்படி நாறு நாறாய்க் கிழித்து விட்டன என்பதை 4500 வார்த்தைகளில் கேட்டபின் என்னுடைய இப்போதைய நிலைமை– 'வேண்டாம்' என்று சொல்வதற்கு எந்தப் பக்கத்திலிருந்து எந்தப் பக்கத்துக்குத் தலை ஆட்ட வேண்டும் என்பது கூட மறந்து விட்டது!

9

**நீ**ங்கள் அவளிடம் என்னவெல்லாம் சொல்லி இருக்கிறீர்கள் என்று ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். அதைவிட முக்கியம், என்னவெல்லாம் சொல்லாமல் விட்டீர்கள் என்று ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். போதாதற்கு, சொன்னதை ஏன் சொன்னீர்கள், சொல்லாததை ஏன் சொல்லாமல் விட்டீர்கள் என்று விளக்கம் தர எந்த நேரத்திலும் தயாராய் இருக்க வேண்டும். காரணம், பத்து அல்லது இருபது அல்லது முந்நூறு நாட்கள் கழித்து, இத்தனாம் தேதி இத்தனை மணிக்கு இப்படிச் சொன்னியே, ஏன் என்று புள்ளி விவரத்தோடு ஒரு கணை வரும். கேள்விக்கணை. நீங்கள் படித்த பால்ய பாடங்களில் வந்த 'ரெஃபரன்ஸ் டு கான்டெக்ஸ்ட்' கேள்விகளை எல்லாம் தூக்கிச் சாப்பிடுகிற மாதிரி. 'நானா சொன்னேனா...' என்று தடவினீர்களோ உண்மை பேசினால் மறக்காது...' என்ற ரீதியில், லெஃப்ட் அண்டு ரைட், ரைட் அண்டு லெஃப்ட்தான்! எனக்குக் கூடத்தான் 8×5=40 என்பது அடிக்கடி மறந்து போய்விடுகிறது. அதற்காக, அது உண்மை இல்லை என்று ஆகி விடுமா?

10

**நா**ம் என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும், எப்பொழுது செய்ய வேண்டும்... செய்த பிறகு, எங்கு தப்பாகிவிட்டது, ஏன் தப்பாகிவிட்டது, ஏன் ஒரு காரியத்தைத் துப் போடு செய்ய நம்மால் முடியவில்லை– இதை எல்லாம் சொல்வதற்குத்தான் ஏற்கெனவே நிறைய பேர் நம்மைச் சுற்றி இருக்கிறார்களே, அதையே இன்னும் அதிகாரத் தோடும் மிரட்டலோடும் செய்வதற்கு புதிதாக ஆள் வேண்டுமா யோசியுங்கள்!

11

**இத்தனையையும் வக்கணையாகச் சொல்லிவிட்டு, 'எங்களைப் பொது இடத்தில் ஜோடியாகப் பார்க்க நேர்ந்தால், கல்கி, பேட்டி என்று எதையாவது உளறி விடாதீர்கள்!' என்று சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்துவிட்டு பெயர்களின் முதலெழுத்தை மட்டும் தந்துவிட்டுப் போனது. பாய்–ஃப்ரெண்டு அணி (கே., ஷி., மு., விக், ஜெ., சுந்!)**

போட்டோவில் உள்ள சிரிக்கும் முகங்களுக்கும் பேட்டிக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை!

— கிருஷ்

படங்கள்: ஸ்ரீஹரி

# முடுபனி நிலவு 15

**ராஜேஷ் குமார்**

இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் தன் தோள்களை மெல்ல 'ஜெர்க்' செய்தபடி சொன்னார்.

"மிஸஸ் யமுனா! உங்க நிலைமையைப் பார்க்கும்போது எனக்கே ரொம்பவும் கஷ்டமாத்தான் இருக்கு. நீங்க ஒரு நல்ல குடும்பத்துக்கு மருமகளா வாழ்க்கைப்பட்டி ருக்கீங்க அப்படீங்கற ஒரே ஒரு காரணத் துக்காகத்தான் உங்களைப் போலீஸ் ஸ்டேஷ னுக்குக் கூட்டிட்டுப் போகாமே இப்படி ஒளிவுமறைவா விசாரணை பண்ணிட்டி ருக்கேன். மர்மமான முறையில் இறந்து போன லீலா கிருஷ்ணனை உங்களுக்குத் தெரியாதுன்னு சொல்றீங்க. ஆனா அவன் கிட்டே உங்க கையெழுத்தோடு கூடிய வாழ்த்து அட்டையும் லெட்டரும் இருந் திருக்கு. வேற ஒரு இன்ஸ்பெக்டரா இருந் திருந்தா இந் நேரம் காக்கி யூனிஃபார்மை லும் உதவாது மிஸஸ் யமுனா. நீங்க இந்த இக்கட்டிலிருந்து தப்பிக்க ஒரே ஒரு வழி தான் இருக்கு."

"என்ன வழி ஸார்...?"

"உங்ககிட்டே இருக்கிற எல்லா உண்மை களும் வெளியே வரணும். நீங்க எதையோ மறைக்கிற மாதிரி என் மனசுக்குப்படுது..."

"நா... நான் எதையும் மறைக்கலை ஸார்!"

"மர்மமான முறையில் இறந்து போயி ருக்கிற லீலா கிருஷ்ணனை உங்களுக்கு உண்மையிலேயே தெரியாதா?"

பால்பாண்டியன் இப்படிக் கேட்டதும் யமுனா மனசுக்குள் ஒரு மின்னல் வேக பட்டிமன்றம்.

'லீலா கிருஷ்ணனைத் தெரியும் என்று சொல்லி விடலாமா...?'

'வேண்டாமா...?'

மூளையின் பெரும்பாலான நியூரான்கள் உடனே தீர்ப் பும் சொல்லி விட்டன.

'வேண்டாம்...! இந்த கேஸ் முடிகிற வரைக்கும் லீலா கிருஷ்ணனை உனக்குத் தெரியாது என்றுதான் நீ சொல்ல வேண் டும்...!'

"என்ன யமுனா யோசனை பண்றீங்க! லீலாகிருஷ்ணனை உங்களுக்கு முன்னா டியே தெரியுமா தெரியாதா?"

"தெரியாது ஸார்."

"தெரியாதுன்னா உங்க ஃபோட்டோ எப்படி அவன் கைக்குப் போயிற்று...?"

"அதான் ஸார்... எனக்குப் புரியலை. இன்னிக்குக் காலையில் நீங்க என்கிட்ட பேசிட்டுப் போன பிறகு எனக்கு ஒருத்தன் ஃபோன் பண்ணினான். என்னை ரொம்பவும் தெரிஞ்சவன் மாதிரி

மாட்டிக்கிட்டு வந்து உங்க வீட்டு சோஃபாவில் கால் மேல் கால் போட்டு உட் கார்ந்து விசாரணையை ஸ்டார்ட் பண்ணி யிருப்பார்."

யமுனாவின் கண்களில் நீர் மினுமினுத் தது. "ஸார்...! கோயில்ல மனுஷாள் கால்லே விழுந்து கும்பிடக்கூடாதுன்னு பெரியவங்க சொல்லுவாங்க. இருந்தாலும் உங்களை என் அண்ணனா நினைச்சு கால்ல விழறேன். என்னை இந்த இக்கட்டான நிலைமை யிலிருந்து நீங்கதான் காப்பாத்தணும்."

காலில் விழ முயன்ற யமுனாவை நாசூக் காகத் தடுத்து சற்றே விலகி நின்றார் பால் பாண்டியன். அவர் உதட்டில் இப்போது சின்னப் புன்னகை.

"இப்படிப்பட்ட சென்டிமென்ட்டெல் லாம் போலீஸ் விசார ணைக்கு எந்த வகையி

பேசினான். யாருன்னு கேட்டேன். அதுக்கு அவன் 'என்ன யமுனா என்னைத் தெரியலையா... என்னோட குரலைக் கண்டுபிடிக்க முடியலையா... எத்தனை நாள் பீச்சில், ஹோட்டலில் பக்கம் பக்கமா உட்கார்ந்து மணிக்கணக்கா பேசியிருக்கோம்ன்னு படபடன்னு பேசிட்டே போனான். நான் 'ஸாரி ராங்க் நெம்பர்'ன்னு சொன்னேன். பதிலுக்கு அவன் சிரிச்சான். 'என்ன பக்கத்துல உன் புருஷன் இருக்கானா... சரி, விஷயத்தைச் சொல்லிடறேன். கேட்டுக்கோ. இன்னிக்கு சாயந்திரம் ஏழு மணிக்கு எலியட்ஸ் பீச்சுக்கு சிவப்பு பனித்துளியோடு வந்துடு'ன்னு சொல்லிட்டு உடனே ரிஸீவரை வெச்சுட்டான்."

பால்பாண்டியனின் நெற்றிப் பரப்பு பூராவும் வியப்பு வரிகள் ஜனித்தன.

"சிவப்புப் பனித்துளியா... என்னது...?"

"எனக்கே தெரியலை ஸார்..."

"இப்படியொரு ஃபோன் இன்னிக்குத்தான் வந்ததா?"

"ஆமா ஸார்..."

"இந்த ஃபோன்காலைப் பற்றி வீட்டில் சொன்னீங்களா?"

"இல்ல ஸார்..."

"ஏன்...?"

"எனக்குப் பயமாயிருந்தது ஸார். என்னோட மாமனாரைப் பத்தி ஏற்கெனவே உங்ககிட்டே சொல்லியிருக்கேன். அவருக்கு இது மாதிரியான விஷயங்கள் எதுவும் பிடிக்காது. வீட்ல ஒரு கல்யாண காரியம் வேற இருக்கு..."

''பொண்ணு கையையும் வாயையும் வச்சுக்கிட்டு சும்மாவே இருக்க மாட்டான்னு தரகர் சொன்னது வாஸ்தவந்தாண்டி!''

''எப்படிச் சொல்றீங்க?''

''அவ மோர்சிங் வாசிக்கறா!''

– புளியரை கணேசன்



"இந்த விஷயம் மட்டும் முக்கியம் இல்லையா? லீலா கிருஷ்ணனின் மரணம், சிவப்புப் பனித்துளி விஷயம் இந்த இரண்டுக்கும் ஏதாவது ஒரு வகையில் தொடர்பு இருக்கும்ன்னு நினைக்கிறேன். அவன் யார்ங்கிறதைக் கண்டுபிடிச்சுட்டா இந்த கேஸை ஒரு முடிவுக்கு கொண்டு வந்துடலாம். இன்னிக்கு சாயந்திரம் ஏழு மணிக்கு எலியட்ஸ் பீச்சுக்குப் போய்ப் பாருங்களேன்..."

"எனக்கு வீட்டை விட்டுத் தனியா எங்கேயும் போக அனுமதி கிடையாது... உங்களைப் பார்க்க இந்தக் கோயிலுக்கு வர்றதுக்குள்ளே படாதபாடுபட்டுட்டேன்.."

"சரி மிஸஸ் யமுனா...! அந்த சிவப்புப் பனித்துளி ஆசாமி மறுபடியும் உங்களுக்கு ஃபோன் பண்ணி பீச்சுக்கு வரச் சொன்னா என்ன பண்ணுவீங்க...?"

"நான் ஃபோனை எடுத்தாதானே அவன் பேசுவான்? நான் ஃபோனை எடுக்கப் போறதில்லை ஸார்.. வீட்ல யார் ரிஸீவரை எடுத்தாலும் அவன் பேசாமே ரிஸீவரை வெச்சுடுவான்."

"உங்க பிரச்னை ஒரு முடிவுக்கு வரணும்ன்னா ஒரு வழியிருக்கு. அதாவது நான் சொல்றபடி நடந்தா..."

"சொல்லுங்க ஸார்..."

"இந்த சிவப்புப் பனித்துளி ஆசாமி மறுபடியும் ஃபோன் பண்ணினா, எலியட்ஸ் பீச்சுல எந்த இடத்துக்கு எத்தனை மணிக்கு வரணும்ன்னு கேட்டுத் தெரிஞ்சுக்கிட்டு எனக்கு ஒரு ஃபோன் பண்ணி விஷயத்தைச் சொல்லிடுங்க. மத்ததை நான் பார்த்துக்கிறேன்."

"உங்களுக்கு எப்படித் தகவல்...?"

"என் செல்ஃபோன் நெம்பர் தர்றேன்."

"ஸார்... எனக்குப் பயமாயிருக்கு. இந்த விஷயம் வீட்டுக்குத் தெரிஞ்சா என் வாழ்க்கையே ஒரு பெரிய கேள்விக்குறியா மாறிடும் ஸார்."

"கூடியவரைக்கும் வீட்டுக்குத் தெரியாமே இந்த கேஸை ஹேண்டில் பண்ணிப் பார்க்கத்தான் எனக்கும் ஆசை. பட் எதுக்கும் ஒரு எல்லை இருக்கு... பிரச்னையின் சூடு எல்லையைத் தாண்டும்போது நீங்க பிக்சர்க்கு வந்துதான் ஆகணும்... லீலாகிருஷ்ணனுக்கு உங்க பெயரில் வந்திருக்கும் வாழ்த்து அட்டை கையெழுத்தும் இப்ப நீங்க கொடுத்திருக்கிற உங்க மாதிரி கையெழுத்தும் ஒத்துப்போனா நீங்க கண்டிப்பா போலீஸ் ஸ்டேஷனுக்கு வரவேண்டியிருக்கும்."

"ஸார்... அது நிச்சயமா என் கையெழுத்து கிடையாது."

"இதை நீங்க சொல்லி பிரயோஜனம் இல்லை. ஃபாரன்ஸிக்கில் இருக்கும் க்ராஃபாலஜிஸ்ட் கன்ஃபர்ம்டா சொல்லணும்."

"முடிவு எப்ப தெரியும் ஸார்?"

"அநேகமா இன்னிக்கு சாயந்தரம்! இல்லேன்னா நாளைக்கு மத்தியானத்துக்குள்ளே..."

"ஸார்... உங்க செல்ஃபோன் நெம்பர் தர்றதாச் சொன்னீங்க...?"

"இதோ...!" சொன்னவர் தன் சட்டைப் பைக்குள்ளிருந்து ஒரு துண்டு பேப்பரை எடுத்து செல்ஃபோன் எண்களை எழுதிக் கொடுத்தார். யமுனா அதை வாங்கி தன் வேனிடி பேக்குக்குள் பத்திரப் படுத்திக் கொண்டாள்.

"நான் வரட்டுமா...?" பால்பாண்டியன் கிளம்பி கோயில் வாசலை நோக்கிப் போக அவர் தலை மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்த யமுனா ஆஞ்சநேயரின் சன்னதியை நோக்கிப் போனாள். டூரிஸ்ட் கும்பல் வெளியேறிப் போயிருக்க, கோயில் வெறிச்சோடிப் போயிருந்தது.

சன்னதியில் காத்திருந்த பட்டரிடம் துளசி மாலையையும் வெண்ணெய் பொட்டலத்தையும் கொடுத்தாள். அவர் தட்டில் வாங்கிக் கொண்டு கேட்டார்.

"அர்ச்சனையா...?"

"ம்..."

"யார் பேர்க்கு...?"

"பகவான் பேருக்கு..."

பட்டர் கருவறையை நோக்கி அர்ச்சனை ஸ்லோகங்களோடு போக, யமுனா இரு கைகளையும் குவித்து கண் மூடினாள்.

"அட... யமுனாவா...?" பின்பக்கம் எழுந்த பெண் குரல் கேட்டு சட்டென்று திரும்பினாள் யமுனா.

தன்னுடைய வீட்டுக்கு இரண்டு வீடு தள்ளியிருக்கும் லாயர் மனோன்மணி, கையில் வடை மாலையோடு நின்றிருந்தாள். முப்பத்தி ஐந்து வயதான இந்த மனோன்மணி சமீப காலமாக அரசியலிலும் கொஞ்சம் பிரபலம்.

யமுனா சின்னதாய்ப் புன்னகை செய்தாள்.

"மனோ அக்கா! நீங்களா...! என்ன அதிசயமா கோயிலுக்கு வந்திருக்கீங்க... உங்களுக்குத்தான் சாமி, கோயில் எதுவும் பிடிக்காதே...!"

"அதெல்லாம் வெளியே! மனசுக்குள்ளே இந்த பஞ்ச முக ஆஞ்சநேயர்தான்...! ஒரு சிக்க

''சித்தப்பா! குடும்பத்தோடு நாலு நாளைக்கு முன்னாடியே வரக் கூடாதா! இப்படி கல்யாணத்தன்னைக்கு வந்திருக்கீங்களே?''

''கவலைப்படாதேப்பா... கல்யாணம் முடிஞ்சதும் பத்து நாள் குடும்பத்தோடு உன் வீட்ல தங்கிட்டுப் போறேன்!

– கு. அருணாசலம்



லான கேஸை நேத்திக்கு கோர்ட்ல ஜெயிச்சேன். தோத்துப் போக வேண்டிய கேஸை ஜெயிச்சுக் கொடுத்தார் இந்த ஆஞ்சநேயர். அதான் இந்த வடை மாலை...! ஆமா...! நீ மட்டும் தான் கோயிலுக்கு வந்தியா யமுனா...?''

"ம்..''

''சௌம்யாவுக்குக் கல்யாணம் போலிருக்கு?''

"ம்...''

"எப்போ...?''

''அடுத்த மாசம் இருபத்தி மூணாம் தேதி...! இன்னிக்குத்தான் மாமாவும் அத்தையும் முதல் முதலா கல்யாண அழைப்புக்காக வெளியே கிளம்பியிருக்காங்க.''

"சௌம்யாவுக்கு வரன் தட்டி தட்டிப் போயிட்டிருந்தது இல்லையா?''

"ம்.. அப்படி தட்டிப் போனதும் நல்லதுக்குத்தான். இல்லேன்னா இப்படிப்பட்ட மாப்பிள்ளை கிடைச்சிருக்க மாட்டாரே...?''

"ஹரிதா நல்லாப் படிக்கிறாளா?''

"ஆவரேஜ்...''

"அவளுக்கும் ஒரு மாப்பிள்ளை பார்த்துட வேண்டியதுதான்...''

"அத்தைக்கும் அதே எண்ணம்தான்.''

உள்ளே கருவறைக்குள் அர்ச்சனை நடந்து கொண்டிருக்க, சில விநாடிகள் இரண்டு பேருக்கும் இடையே நிலவிய மௌனத்தை மனோன்மணி கலைத்தாள்.

"யமுனா...''

"ம்...''

"நான் கோயிலுக்குள்ளே வரும் போது நீ ஒருத்தரோடு பேசிக்கிட்டு இருந்தியே... அவர் இந்த ஏரியாவில் முன்பு வேலை பார்த்த இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன்தானே...?''

நெருப்பு சூடுபட்ட சலஃபன் பேப்பராய்ச் சுருண்டாள் யமுனா.

**வ**ருணின் பார்வை இன்னமும் அந்த கம்ப்யூட்டர் தாள் மேல் படிந்திருக்க, தாளில் எழுதப்பட்டிருந்த வரிகள் மனசுக்குள் ஃப்ளாஷ் நியூஸ் போல் ஓடின. 'வருண்! உன் வாழ்க்கை பயணத்தில் இனி மேல்தான் அபாயகரமான வளைவுகள் ஆரம்பம். கவனம் தேவை. – அசரீரி.'

நகர முயன்ற பேரரை நிறுத்தினான் வருண்.

"பேரர்...''

"ஸார்.''

''இந்தக் கவரைக் கொடுத்த நபர் இன்னமும் ரிசப்ஷன்லதான் இருக்காரா...?''

"என் கூட வாங்க ஸார்... ஆளை அடையாளம் காட்டறேன்...''

"நட...! பர்வதா, நீ இங்கேயே இரு. நான் போய்ப் பார்த்துட்டு வந்துடறேன்...''

"இல்ல வருண்...! நானும் வர்றேன்...!''

பேரர், வருண், பர்வதா மூன்று பேரும் வேகவேகமாய் நடந்து லிஃப்ட்டுக்குள் நுழைந்தார்கள்.

பத்தே விநாடி –

க்ரவுண்ட் ஃப்ளோர் வந்தது. வெளிச்சமாய் அரைவட்ட மேஜையோடு கூடிய ரிசப்ஷன். கனமான வெல்வெட் சோஃபாக்களில் சிலர் உட்கார்ந்து கிரிக்கெட்டில் ஜெயித்துக் கொண்டிருந்த இந்தியாவைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ரிசப்ஷன் கௌண்ட்டர் அருகே ஒரு சின்ன கும்பல். சிம்ரன் சாயலில் ரிசப்ஷனிஸ்ட் ஒருத்தி அநாவசியத்துக்குச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

வருண் பேரரைப் பார்த்தான்.

"சொல்லு... இந்தக் கும்பலில் யாரு...?''

பேரரின் பார்வை பரபரவென்று சுழன்றது. அரை நிமிஷத் தேடலில் மலர்ந்தான்.

"ஆள் இருக்கார் ஸார்.''

"யாரு...?''

''அதோ.., அந்த க்ரே நிற சஃபாரி அணிந்த ஆள் ஸார்.''

(தொடரும்)

# கடைசித் தேர்தல்!



தமது கடைசித் தேர்தலையொட்டி கலைஞர் திருச்சியில் தலைமை வகித்த முதல் (கூட்டணி) கூட்டத்தின் சில முதலும் கடைசியுமான துளிகளைத் தருகிறோம் இங்கே...

## முதலில் குழப்பம்; கடைசியில் மாநாடு!

திருச்சியில் தேசிய ஜனநாயகக் கூட்டணியின் தேர்தல் பிரசாரத்தை முதலில் பொதுக்கூட்டமாக ஏற்பாடு செய்வதா அல்லது மாநாடாக நடத்திக் காட்டுவதா எனக் குழப்பம் தி.மு.கவில். தொண்டர்கள் மத்தியில் உற்சாகத்தை ஏற்படுத்த வேண்டியும், எதிர்க்கூட்டணிக்குப் பலத்தைக் காட்டவும் கடைசியில் மாநாடாக நடத்த வேண்டிய சூழ்நிலை.

நிரந்தர மாநாட்டுத் திடலாக மாறிப் போய் விடுமோ எனும் மயக்கத்தில் இருக்கும் கொட்டப்பட்டு மைதானம் முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. நகராகவும், அன்பில் பொய்யாமொழி அரங்கமாகவும் மலர்ந்து விழிகளைக் கூச வைக்கும் மின் அலங்கார விளக்குகளின் வெளிச்சப் பிரவாகத்தில் உருமாறியிருந்தது.

## முதலில் உறுதிமொழி; கடைசியில் வழிப்பறி!

"அலங்கார வளைவுகள் அமைக்க மாட்டோம். நடு ரோட்டில் குழிகள் தோண்டி போக்குவரத்துக்கு இடையூறு தர மாட்டோம்" என்று திமுக சார்பில் உள்ளூர் அமைச்சர் கே.என். நேரு தந்திருந்த உறுதிமொழி முழுமையாகக் காப்பாற்றப்பட்டிருந்தது. அதேசமயம் மாநகர் முழுவதும் சாலைகளின் இருபுறமும் ட்யூப் லைட்டுகள். மாநாட்டுத் திடலைச் சென்றடையும் இணைப்புச் சாலைகள் எங்கும் மின் விளக்குகள். காவிரிப் பாலத்தில் இருபுறமும் ட்யூப் லைட்டுகள் மற்றும் உயரமாய்த் தொங்கும் சீரியல் பல்புகள். இவற்றில் என்ன புதுமை என்கிறீர்களா? சாம்பிளுக்குக் கூட எந்தவொரு இடத்திலும் ஜெனரேட்டர் வைக்கப்படவில்லை!

ஆங்காங்கே அருகிலிருக்கும் மின்சார டிரான்ஸ்ஃபார்மர்களில் ஹூக் (கொக்கி) மாட்டிவிட்ட மகிமையில் அத்தனை மின் விளக்குகளும் - மின் அலங்கார கட்-அவுட்களும் ஒளி வீசிக் கொண்டிருந்தன! திருச்சி பதிப்பு தினசரி ஒன்றில் 'ஒரு மின் அலங்கார கட்அவுட்டுக்கு அருகிலிருக்கும் டிரான்ஸ்ஃபார்மரில் 'கொக்கி' மாட்டி இணைப்பு தந்திருந்ததை புகைப்படமெடுத்து பிரசுரித்திருந்தனர்.

## முதலில் முழக்கம்; கடைசியில் கமெண்ட்!

கொட்டப்பட்டு மைதானம் நிரம்பியிருந்தது. கலைஞர், பேராசிரியர், ஆற்காடு வீராசாமி ஆகியோருடன் கூட்டணிக் கட்சித் தலைவர்கள் அனைவரும் மேடையில் அமர்ந்திருந்தனர். மேடைக்குக் கீழே முக்கியப் பிரமுகர்கள் பகுதியில் தயாளு அம்மாள், செல்வி, மு.க. ஸ்டாலின், நடிகர் நெப்போலியன், அமைச்சர்கள்.

மாநாட்டில் முதலாவதாகப் பேச வாய்ப்புப் பெற்ற தமிழர் பூமி கட்சித் தலைவர் கு.ப. கிருஷ்ணன் தமது உரையில், "தமிழகத்தில் தி.மு.கவின் தலைமையில் அமைந்திருக்கும் கூட்டணிக்கு, தமிழர் பூமி கட்சித் தொண்டர்களின் ஒத்துழைப்பால் நூற்றிப்பத்து தொகுதிகளில் வெற்றி நிச்சயம்!" என முழங்கினார். அவர் பேசியமர்ந்ததும் பார்வையாளரிடையே கிளம்பிய கமெண்ட் இதுதான்: "போச்சுடா... முதல் பேட்ஸ்மேனே எடுத்ததும் 'டக்-அவுட்' ஆவுறார் பாரு... அப்ப... மீதி நூத்தியிருபத்தி நாலு தொகுதிகளும் அ.தி.மு.க கூட்டணிக்கா?"

## முதலில் தானை; கடைசியில் முந்தானை!

'பணப்புழக்கம் இல்லை ... பணப்புழக்கம் இல்லை... என்று சிலர் புலம்பித் திரிப்பதெல்லாம் அவர்களுடைய மனப்புழுக்கம்" என துவங்கிய குமரி அனந்தன், "தமிழகத்தில் முன்பு தானைத் தலைவர்களாக நடமாடியவர்கள் தற்போது எதிரணியில் சென்று முந்தானைத் தலைவர்களாக மாறிப் போய் விட்டார்கள்!" எனக் குறிப்பிட்டார்.




மேடையில் இருந்த கூட்டணித் தலைவர்கள் அனைவரும் எழுந்து நின்று கைகோத்த வண்ணம் புகைப்படத்துக்கு 'போஸ்' கொடுக்கலாமே என்று பத்திரிகையாளர் மத்தியிலிருந்து சென்ற துண்டுச் சீட்டை வாசித்துவிட்டு "அதெல்லாம் வேண்டாம்!" என மறுத்துவிட்டார் ஆற்காடு வீராசாமி. (ஒரு சமயத்தில் கை கோப்பவர்கள் இன்னொரு சமயத்தில் கை நழுவிப் போய் விடுகிறார்கள்' என்கிற சென்டிமென்ட்?)

## முதலில் உறுமல்; கடைசியில் பொருமல்!

மேடையில் பேச ஒவ்வொருவருக்கும் அனுமதிக்கப்பட்ட நேரம் பத்து நிமிடம். ஆனால் விடுதலைச் சிறுத்தைகள் திருமாவளவன் மட்டும் கூடுதல் நேரம் எடுத்துக்

கொண்டார். விட்டால் தொடர்ந்து மூன்று மணி நேரம்கூட பேசிக் கொண்டிருப்பார் போல் தோன்றியது. ராமதாஸை விளாசுவதாக நினைத்துக்கொண்டு "பா.ம.க என்பது இப்போது பாட்டாளி மக்கள் கட்சியாக இல்லை. அது பாசமுள்ள மகன் கட்சியாக மாறிப் போய்விட்டது!" என்று அவர் உறுமிய போது கலைஞரும், ஸ்டாலினும் என்ன நினைத்துக் கொண்டார்களோ! யாருக்குத் தெரியும்?

## முதலில் சிலாகிப்பு; கடைசியில் சிணுங்கல்!

ஆற்காடு வீராசாமி தமது பேச்சில், "த.மா.கா ஜனநாயகப் பேரவைக்கு மூன்று இடங்கள் பகிர்ந்தளித்தோம். சிதம்பரம் அவர்கள் அதில் இரண்டு போதுமெனக் கூறி ஒரு இடத்தைத் திருப்பி அளித்துள்ளார். என்ன செய்வது? மூன்று தந்தால் அதில் இரண்டு போதுமெனச் சொல்கிற சிதம்பரமும் நம்மிடம்தான் இருக்கிறார். மூன்று சீட் தந்தால் போதாது என்று உரிமையுடன் மேலும் கேட்கின்ற திருநாவுக்கரசும் நம்மிடம்தான் இருக்கிறார்...." என்று செல்லமாகச் சிணுங்கிக் கொண்டார்.

## முதலில் எச்சரிக்கை; கடைசியில் சூளுரை!

அன்பழகனுக்கு அடுத்து கலைஞர் பேசத் துவங்கியபோது மேடைக்குச் சற்றுத் தள்ளி உற்சாக உடன்பிறப்புகள் வாண வேடிக்கை விட்டுக் கொண்டிருந்தார்கள். "இந்த மாநாடு வேடிக்கை வினோதங்களோடு கலைந்தது என்கிற அளவிலே முடிந்து விடக் கூடாது என்பதை இங்கே வாணவேடிக்கை விட்டுக் கொண்டிருக்கிற நண்பர்களுக்கு நான் நினைவுபடுத்த விரும்புகிறேன்!" என கலைஞர் துவக்க உரையில் குறிப்பிட, கழகத்தவர்கள் வாணவேடிக்கையை நிறுத்திக்கொண்டார்கள்.

"இந்த மாநாடு வெறும் பிரசாரத் தொடக்க விழாவாக நடைபெற்றுக் கொண்டிருப்பதற்குக் காரணம், நீங்கள் அனைவரும் எத்தனை மகிழ்வோடு இங்கு வந்தீர்களோ, அதே மகிழ்வோடு நீங்கள் எல்லோரும் திரும்பிச் செல்ல வேண்டும் என்பதற்காகத்தான். வேட்பாளர் பட்டியல் என்பது மூன்று நாட்களுக்கு முன்னரே முடிவு செய்யப்பட்ட ஒன்று. ஏறத்தாழ ஐந்தாயிரம் பேர் விண்ணப்பித்ததில் நூத்தியெழுபத்து நான்கு பேர்களைத் தேர்வு செய்து பட்டியல் தயாராக உள்ளது. அந்த அறிவிப்பு இங்கே வெளியிடப்பட்டு பட்டியலில் இடம் பெற்றவர்கள் மகிழ்ச்சியோடும், இடம் பெற இயலாதவர்கள் தொங்கிய முகத்தோடும் செல்வதை நான் விரும்பவில்லை. அதனை இங்கே படித்துச் சிலரைத் துடிக்க வைத்துவிட வேண்டாம் என்றுதான் இப்போது வேட்பாளர் பட்டியல் வாசிக்கப்படவில்லை!"

ஜாதிக் கட்சிகளைக் கூட்டணியில் சேர்த்துக் கொண்டதற்கு 'புது விளக்கம்' தந்து பேசினார் கலைஞர். "ஜாதிக் கட்சிகள் உருவாகி விட்ட நிலையில் அவற்றை நாங்கள் அரவணைத்து ஆதரித்துச் செல்கிறோமே தவிர, அந்தக் கட்சிகளை ஆதரிப்பதால் ஜாதிகளை ஆதரிப்பதாக அர்த்தம் அல்ல. ஜாதிகளை ஊக்கப்படுத்தவில்லை நாங்கள். ஒவ்வொரு ஜாதிக்கும், ஒவ்வொரு சமுதாயத்திற்கும் ஒரு சில குறைகள் உண்டு. அந்தக் குறைகளை நீக்கிக் கொள்ள அவர்கள் ஓர் அரசியல் துணையை நாடும்பொழுது, அவர்களுக்குத் துணை இருக்க வேண்டியதுதான் எங்களைப் போன்ற அரசியல் கட்சிகளுடைய கடமை ஆகின்றது!"

"பதவிக்காக வாழ்பவனல்ல கருணாநிதி என்பதைச் சத்தியமாகச் சொல்கிறேன். அண்ணா மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். என்னைப் பெற்ற தாய்-தந்தையர் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். பதவிக்காக இந்தக் கருணாநிதி இல்லை!" என ஒரு கட்டத்தில் உணர்ச்சி வசப்பட்டவர், "இறுதியாக, என்னைப் பொறுத்தவரையில் நான் சொல்கிறேன். முன்பு சென்னையிலே சொன்னேன். இப்போது சொன்னால்கூட என் தோழர்களுக்குக் கோபம் வரும். என்னைப் பொறுத்தவரையில் - என் வயதைப் பொறுத்தவரையில் நான் ஈடுபடுகின்ற கடைசித் தேர்தல் களம் இதுவாகத்தான் இருக்கும். இந்தக் கடைசித் தேர்தல் களத்தில் நீங்கள் இடுகின்ற கட்டளையை ஏற்று உங்களுக்காகத் தொடர்ந்து பணி புரிய சித்தமாக இருக்கிறேன்!" உருகினார் தி.மு.க தலைவர். கூட்டணி கட்சித் தொண்டர்கள் உருகியதைப் போல் வாக்காளர்கள் உருக வேண்டுமே!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

அட்டை வண்ணப்படம், படங்கள்: யோகா

**திருச்சியிலிருந்து வரும் முதலும் கடைசியுமான தேர்தல் செய்தி அல்ல இது... மேலும் பல சுவையான செய்திகள் வாரந்தோறும்...**

'இதோ இந்த வீடுதாம்ப்பா'. சிவப்ரியா கூற, தயாரிப்பாளரின் யூனிட் கார் அவளை அங்கே இறக்கிவிட்டுச் சென்றது.

பிரமிப்பு இன்னமும் நீங்கவில்லை.

'இயல்பா நடிக்கறே. கீப் இட் அப்'. இயக்குனர் பாராட்டி விட்டார். ஒப்புக்கு அல்ல, உள்ளத்திலிருந்து வந்ததுதான் என்பது தெரிந்தது. என்றாலும் விசையுடன் அடிபட்டுக் கொண்டது போல் இருந்தது அவளுக்கு.

நடிப்பு என்பது பொய். தன்னை மறத்தல் அல்லது இழத்தல். 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்... பொய்மை பேசாதிருக்க வேண்டும்' என்றெல்லாம் தினமும் மனமுருகி தியானித்த தனக்கு இப்போது நன்றாக நடிப்பதாகப் பாராட்டு!

தவறான ஒப்பீடு என்று தன்னைச் சமாதானப் படுத்திக் கொண்டாள். தான் ஒரு தவளை. ஆற்றில் நீந்தித்தான் ஆக வேண்டும். தரையென்றால் தத்தித்தான் குதிக்க வேண்டும். இரண்டுமே அந்தந்த சூழலில் இயல்புதான்.

'டாக்டர் ராம்ஷேகர்' என்ற பெயர் பொறிக்கப் பட்டிருந்த அந்த வீட்டிற்குள் நுழைந்தாள். மருத்துவக் கருத்தரங்குக்காக டாக்டர், டெல்லி சென்றிருந்தது நினைவுக்கு வந்தது. மாமி இருப்பாள். மாமியுடன் நாலு வார்த்தை பேசாமலோ, அவர்களின் பன்னிரண்டு வயது மகள் அனுவுடன் சிறிது நேரமாவது விளையாடாமலோ சிவப்ரியா அந்த வீட்டின் பின்புறம் உள்ள தனது பகுதிக்குச் சென்றதில்லை. மாமியும் அவளுக்குச் சாப்பிட எதையாவது கொடுக்காமல் அனுப்பியதில்லை.

ஆனால் இன்று மாமியைச் சந்தித்துப் பேசுவதில் தயக்கம் ஏற்பட்டிருந்தது. எட்டரை மணிக்கே அனு தூங்கிவிட்டிருப்பாள். மாமியைத் தனியே சந்தித்துப் பேச வேண்டியிருக்கும்.

'அவதாண்டா மணிசங்கரோட படத்திலே நடிக்கிறா'. தெருவில் யாருடைய குரலோ கரகரப்பாகக் கேட்டது. 'அவங்க தான் டாக்டர் சிவப்ரியா'விலிருந்து 'அவ தான் நடிகை சிவப்ரியா'. ஒரு நடிகை



# 2

அருண் சரண்யா

கொடுக்கும் முதல் விலை தன் சமூக மரியாதையை இழப்பது தானோ?

வீட்டில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. மாமி கதவைத் திறந்து கொண்டு வெளிவந்தாள். வாசலில் வந்த கார் சத்தமோ, கதவைத் திறந்த 'க்ரீச்' ஒலியோ தனது வருகையை அவளுக்குத் தெரிவித்திருக்க வேண்டும்.

'என்ன மாமி இவ்வளவு நேரம் முழிச்சுக்கிட்டிருக்கீங்க? அனு தூங்கிட்டாளா? அவ ஜலதோஷம் இப்ப குறைஞ்சிருக்கா?'

'அதனாலென்ன?', 'ஆமாம்', 'தேவலை' என்று நடுநடுவே ஒற்றை வார்த்தைகள் பதிலாக வந்தன மாமியிடமிருந்து. அவன் தனது சினிமாவில் நடிக்கப் போவதாக அறிவித்ததிலிருந்து மாமியிடம் சொற்சிக்கனம் வந்து விட்டது.



# மறிய ஆவல்...

"சரி மாமி. மணி பத்தரையாயிடுச்சு. தூங்குங்க. காலையிலே வந்து பேசறேன்."

எதையாவது சாப்பிட்டுச் செல்லுமாறு மாமி வற்புறுத்தவில்லை. சாப்பிட்டாயா என்று கூடக் கேட்கவில்லை. மனம் வலித்தது.

பின்புறம் அமைந்த தனது இருப்பிடத்தை நோக்கி நகரத் தொடங்கினாள்.

"ஒரு நிமிஷம். ஆனந்த் வந்திருக்கான். உன் ரூமின் டூப்ளிகேட் சாவியைக் கொடுத்திருக்கேன். அங்கே வெயிட் பண்றான். பேசி அனுப்பு. அப்புறம் சாப்பிட வா. அவனுக்குக் காப்பி கொடுத்தாச்சு."

உடலை இறுக்கிக் கொண்டிருந்த ஒரு கவசம் உடைந்து நொறுங்கியது போன்ற நிம்மதி உண்டானது. மாமி மாறவில்லை. சொல்லப்போனால் அடிப்படையில் யாருமே மாறுவதில்லை. அந்த நியதியின்படி நானும் மாறிவிடவில்லை என்பதை இவர்கள் புரிந்து கொண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்! ஒரு வேளை மாமி அதைப் புரிந்து கொண்டிருக்கிறாளோ? அதனால்தான் ஒற்றை வார்த்தைகளையும் மீறிய, பசி நீக்கும் நோக்கமோ?

கவசம் உடைந்ததற்கு ஆனந்த் வந்திருக்கிறான் என்பதும் ஒரு முக்கியக் காரணம். 'ஆனந்த், நமக்கிடையே எழுந்தது சீனச் சுவர் அல்ல, சிலந்திவலைதான் என்பதை இப்போதாவது புரிந்து கொண்டுவிட்டாயா?'

உள்ளே நுழைந்தபோது ஆனந்த் அவளுக்குத் தபாலில் வந்திருந்த சர்வதேச மருத்துவ இதழைப் புரட்டிக் கொண்டிருந்தான். அவன் மனம் அந்தப் புத்தகத்தில் லயிக்கவில்லை என்பது பார்க்கும்போதே தெரிந்தது.

"வா ஆனந்த். புத்தகத்தைத் தலைகீழா வச்சுக்கிட்டுப் படிக்கும் கலை உனக்குத் தெரியும்னு நீ இதுவரை என்னிடம் சொன்னதேயில்லையே."

இலேசான திடுக்கிடலுடன் புத்தகத்தை நோட்டமிட்ட ஆனந்தைப் பார்த்துச் சிரித்தாள் சிவப்ரியா. "புத்தகத்தை நேரேதான் வச்சுக்கிட்டிருக்கே. ஆனால் அதைப் பற்றி உணர்வே இல்லாததினாலேதான் நான் சொன்னதிலே சந்தேகம் ஏற்பட்டு அதைப் பார்த்திருக்கே" என்றபடி தனது கைப் பையை பீரோவில் வைத்து மூடினாள். பானையின் மூடியைத் திறந்து அதில் வைக்கப்பட்டிருந்த நீரில் ஒரு தம்ளரை எடுத்து ஆனந்திடம் நீட்டினாள். "ரொம்ப நேரமாக் காத்துக்கிட்டிருக்கியா?" என்றாள் பரிவுடன்.

"ஆமாம். ஆனா ஓரளவுக்கு மேலே காத்துக்கிட்டிருப்பதிலே அர்த்தமில்லேன்னு தோணுது."

சிலேடையாகப் பேசுகிறான். அவனுக்கு நம்பிக்கை அளிக்க வேண்டிய கடமை தனக்கு உண்டு.

"ஆனந்த். என்னை நம்பு. இந்த ஒரே படம்தான். அதுக்கப்புறம் நான் டாக்டர் சிவப்ரியா மட்டும்தான். ரெண்டு வருஷங்கள் ப்ராக்டிஸ் செய்த பிறகு நாம கல்யாணம் செய்துப்போம். இந்த நேரத்திலேதான் எனக்கு உன் அன்பு அதிகம் தேவையாயிருக்கு ஆனந்த்." கடைசி வாக்கியத்தைப் பேசியபோது அவள் குரல் உடைந்ததை அவன் கண்டுகொண்டதாகத் தெரியவில்லை.

## தெரியுமா?... தெரியுமா?... தெரியுமா?... தெ



**திருச்சி லோக் சபா தொகுதிக்கு, பா.ஜ.க. நிறுத்தியிருக்கும் வேட்பாளர் சுகுமாரன் நம்பியார். இவர் முதன் முதலாக, பா.ஜ.க.வில் சேரும் எண்ணத்துடன் ஜனா. கிருஷ்ணமூர்த்தியைச் சந்தித்துப் பேசியபோது, கோவையில் தொழில் செய்யும் தொழிலதிபர் என்றுதான் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். விடை பெறும்போது, ''என் அப்பாவை நீங்கள் அறிந்திருப்பீர்கள்... எம்.என். நம்பியார்தான்'' என்றார். ''இதை ஏன் நீங்கள் முதலிலேயே சொல்லவில்லை?'' என்று ஜனா கேட்க, ''நான் தானே கட்சியில் சேர வந்திருக்கிறேன். என்னைப் பற்றிச் சொல்வதுதானே முக்கியம்?'' என்று சுகுமாரன் நம்பியார் பதில் சொன்னாராம்!**

**அமெரிக்காவில், பல்கலைக் கழகத்தில் மாணவராக இருந்த போதே, உலக அரசியலில் பெரும் ஆர்வம் காட்டியவர் சுகுமாரன். எம்.பி.ஏ. படித்தவர். உபரியாய் பொலிடிகல் சயின்ஸில் எம்.ஏ. கோவையில், மோட்டார் பம்புகள் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை நடத்தி வருகிறார்.**

"உனக்கு என்னைவிடவா அந்தச் சினிமா சான்ஸ் முக்கியம்?"

கடந்த ஒரு வாரத்தில் பலமுறை இதே கேள்வியைக்கேட்டு மௌனத்தையோ, திசை திருப்பும் பதிலையோ மட்டுமே எதிர் கொண்டும், மீண்டும் மீண்டும் சளைக்காமல் அதே கேள்வி.

"ஷிவ், இரண்டே நாள்தான் ஷூட்டிங் நடந்திருக்கு. இப்பக் கூட உன் முடிவை மாத்திக்கலாம்."

மௌனம். 'அதெல்லாம் நடக்கிற காரிய மில்லை' என்பதைத் தெளிவாகவே உணர்த்திய சலனமற்ற மௌனம்.

"இப்படி சினிமா நட்சத்திரமாவதற்காகவா மருத்துவக் கல்லூரியிலே சேர்ந்தே? தங்கப் பதக்கம் வாங்கற அளவுக்குப் படிச்சே?"

"குரலைத் தாழ்த்திப் பேசு... நான் என்ன இனி ஸ்டெத்தையே தொடமாட்டேன்னா சபதம் போட்டுட்டேன்?"

"ஏன் இந்த சினிமாவிலே ஏதாவது கனவுக் காட்சியிலே டாக்டராக வரப் போறியா?"

"குத்தல் பேச்செல்லாம் நமக்குள்ளே வேணாம் ஆனந்த். வெளிப்படையாகவே பேசுவோம். ஒரு நடிகரோடு நான் டூயட் காட்சியில் நடித்தால் அது உனக்கு அகௌரவம் அல்லது அவமானம்னு நினைக்கிறியா? நீ அப்படி நினைக்கிற வர்க்கம் இல்லேன்னு எனக்குத் தெரியும். டைரக்டர் மணி சங்கர் எனக்கு வாக்கு கொடுத்திருக்கார். ரொம்ப டீஸன்ட்டா என்னை நடத்துவேன்னு. இன்னும் நாலே மாசத்திலே படப் பிடிப்பெல்லாம் முடிஞ்சுடும் ஆனந்த்."

போதும் என்பது போல் கையை உயர்த்தினான் ஆனந்த். "நீ சினிமாவிலே நடிக்க முடிவெடுத்த காரணம் எனக்குத் தெரியணும் முதல்லே."

"ஒவ்வொரு இளம் பெண்ணுக்குமே ஒரு கனவு இருக்கும் ஆனந்த். பலரும் அவளை அங்கீகரிக்கணும்னு. அதற்கு சினிமா ஒரு சுலபமான வழி இல்லையா?"

"ஸ்டுடியோவிலே காட்ட வேண்டிய நடிப்புத் திறமையையெல்லாம் என்கிட்டே வேஸ்ட் செய்யாதே ஷிவ். உனக்கு சினிமா ஆசையெல்லாம் கொஞ்சமும் கிடையாதுன்னு எனக்குத் தெரியும். நம்ம மெடிகல் காலேஜ் ஆண்டு விழா நாடகத்திலே கூட நடிக்கமாட்டேன்னு ஒதுங்கிக்கிட்டவ நீ."

"ஆனால் ஒரு விளம்பரப் படத்திலே நான் நடிச்சதை மறந்துட்டியா ஆனந்த்?"

"நாம் ஹைட் அண்ட் ஸீக் கேம் ஆட வேணாம். நீ அந்த விளம்பரப் படத்திலே நடிச்சதுக்குக் காரணம் அது கிராம மக்களுக்கு மருத்துவ உண்மைகளை விளக்கி விழிப்புணர்ச்சியை உண்டாக்கும் படம் என்பதாலேதான். இதைப் பற்றி நாம் ஏற்கெனவே விவாதிச்சிருக்கோம்."

"ஓக்கே ஆனந்த், வேறே எதையாவது பேசலாமா?"

"சரி, ஹிப்பாக்ரடிஸ் பற்றிப் பேசுவோமா?"

நவீன மருத்துவ உலகின் பிதாமகர் ஹிப்பாக்ரடிஸ். அவர் பெயரில்தான் உலகெங்கும் மருத்துவர்கள் உறுதிமொழி எடுத்துக் கொள்வது வழக்கம். அவரைப் பற்றி என்ன பேச இருக்கிறது, அதுவும் இந்தச் சூழலில்?

கேள்விக் குறியுடன் பார்த்தவளை நோக்கி ஒரு கேள்வியை வீசினான் ஆனந்த். "என்னை எந்த அளவு நீ மதிக்கிறேன்றதிலே எனக்குச் சந்தேகம் வந்தாச்சு ஷிவ். ஆனால் டாக்டர் தொழிலிலே உனக்கிருக்கும் நாணயத்தைப் பற்றி இன்னமும் நான் சந்தேகிக்கலே. இந்த மருத்துவத் தொழிலின்மீது ஆணையிட்டு, ஹிப்பாக்ரடிஸ் மீது ஆணையிட்டு உன்னாலே சொல்ல முடியுமா– நீ முழு மனசோடுதான் சினிமாவிலே நடிக்க சம்மதிச்சேன்னு?"

ஷிவப்ரியா பார்வையைத் திருப்பிக் கொண்டாள். அவள் கண்களில் மெல்ல உருவாகத் தொடங்கியிருந்தன சில நீர்த் திவலைகள்.

(தொடரும்)

## தெரியுமா?... தெரியுமா?...

**கல்லூரி நாட்களிலிருந்தே சிறந்த விளையாட்டு வீரர். நீச்சல் சாம்பியன், டென்னிஸ் பிளேயர். ரிலே ரேஸில் பங்கேற்று ஜெயித்திருக்கிறார். ஈட்டி எறிதலில் சாம்பியன். துப்பாக்கிச் சுடுதலில் இந்தியாவின் டாப் டென் நிபுணர்களில் ஒருவர். இவையெல்லாம் போதாது என்று கராத்தேயில் ஜப்பானிலும், அமெரிக்காவிலும் பிரத்யேக பயிற்சி பெற்ற நிபுணர். இந்திய ராணுவத்தின் கமாண்டோ பிரிவுக்கும், சிறப்புப் பாதுகாப்பு பிரிவுக்கும் பிரத்யேக தற்காப்புக் கலைப் பயிற்சியாளர்.**

— மௌலி

# கைதியின் டைரி!

| சிறையில்... | ஆபீஸில்... |
| --- | --- |
|  ...நல்ல நடத்தைக்குப் பரிசாக சலுக்கைகள் உண்டு! |  ...நல்ல நடத்தைக்குப் பரிசு, கூடுதல் வேலை! |
|  ...உங்களை மிரட்டுவதற்காகவே ஒருவருக்குச் சம்பளம் கொடுத்து வைத்திருப்பார்கள், அவருடைய பெயர் வார்டன்! |  ... அவருடைய பெயர் மானேஜர்! |
|  ... மிஞ்சி மிஞ்சிப்போனால் 14 வருஷத்தில் விடுதலை! |  ...58 வயதாகும்வரை ஏக்கப் பெருமூச்சுதான்! |

டைரியிலிருந்து சுட்டவர்: பிரஹ்லாத்
படம்: சேகர்

...மனைவியும் குழந்தைகளும் உங்களை வந்து பார்க்க அனுமதி உண்டு.



... சொந்தபந்தங்களோடு சுதந்தரமாக ஃபோனில் கூட பேச முடியாது!



...உங்களுக்குக் கதவு திறந்துவிட காவலாளி இருப்பார்!



...அதிகாரிகளுக்குக் கதவு திறந்து விட்டே பாதி பொழுது கழிந்துவிடும்!



உங்களுக்குப் பிரத்யேக டாய்லெட் உண்டு!



...க்யூ!




சிறையில்... ஆபீஸில்...

# அலுவலகம் சிறையா? யார் சொன்னது!

# நீங்கள் கேட்டவை - தராசு

# வைகோ முதல்வராகும் தகுதி படைத்தவரா...?


• திரிப்புகுறிய...

● எஸ். இராமலிங்கம், ஆத்தூர்

*? தமிழ்க்குடிமகன் கட்சி மாறியது பற்றி அந்தத் தொகுதி மக்கள் என்ன நினைப்பார்கள்...?*

! தொகுதி கிடைக்கவில்லை என்று கட்சி மாறினீர்களே... கட்சி மாறியும் தொகுதி கிடைக்கவில்லையே என்று எள்ளி நகையாடுவார்கள்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை - 1

*? டெல்லியில் டீசல் வாகனங்களை நீதிமன்றம் தடைசெய்தது பற்றியும் அதன் விளைவாக பஸ் எரிப்பு போன்ற சம்பவங்கள் நடந்தது பற்றியும் என்ன கருதுகிறீர்கள்...?*

! டில்லி காற்றில் நச்சுப்புகை மிக அதிகமாகிவிட்டது உண்மைதான். அதைக் குறைக்க பல விதமான நடவடிக்கைகள் தேவை. அதிரடியான தீர்ப்புகளால் இதைச் சாதிக்க முடியாது. படிப்படியான பல ரக நடவடிக்கைகளுக்குத் தனித்தனியான காலக்கெடுக்கள் நிர்ணயிக்கப்பட வேண்டும். இப்போது உச்சநீதி மன்றத்தின் குண்டக்கா மண்டக்கா ஆணை அரசியலாக்கப்பட்டதால் வன்முறையாக வெடித்துச் சேதமுண்டாக்கியது. எல்லா அமர்க்களமும் ஆன பிற்பாடு கெடு தேதியை நீதிமன்றம் நீட்டித்திருப்பது நல்ல ஜோக்!


• நான்கு பாக நன்நூல்!

● இரா. சங்கரநாராயணன், இராமச்சந்திரபுரம்

*? அன்று ஔவை மூதாட்டி போல இன்று தி.மு.க. - ம.தி.மு.க. இடையே ஏற்பட்டுள்ள பகையைத் தீர்த்து வைக்க தமிழர் தலைவர் யாரும் இல்லையா...?*

! ஔவையார்கள் தோன்றாவிட்டாலும் நாரதர்களுக்கு இங்கு பஞ்சமில்லை.

● வயலூர் இராம பார்த்திபன், சேத்துப்பட்டு

*? பழம்பெரும் எழுத்தாளர் மகரம் என்ற கல்யாணராமன் மறைவு பற்றி...?*

! அமரர் கல்கி மீது மதிப்பும் மரியாதையும் கொண்ட மகரம், தமது எழுத்துப் பணியை கல்கி இதழில் ஆரம்பித்தவர். 'எழுதுவது எப்படி?' என்று எல்லா மொழிகளிலும் நூல் இருக்கும்போது, தமிழில் இல்லையே என்று நினைத்து இவர் தொகுத்த நூல் (நான்கு பாகங்கள்), எழுத்தாளர்களுக்கு உபயோகமாக என்றும் நிலைத்திருக்கக் கூடியது.


• மௌன பதில்!

● ஆர். ராஜா சாஹிப், சென்னை - 106

*? ஜார்ஜ் பற்றிய குற்றச்சாட்டுகளுக்கு சோனியாவால் பதிலளிக்க முடியவில்லையே...?*

! பதில் சொல்வானேன், தேன்கூட்டைக் கலைப்பானேன்? கொட்டினால் தாங்க முடியுமா..?

● முருகேசன், தேனி

*? பாரம்பரியம் மிக்க காங்கிரஸ் கட்சியைக் காப்பாற்றுவதில் அக்கறை காட்டுபவர் சோனியா காந்தியா? மூப்பனாரா? ஜெயலலிதாவா..?*

! தமிழ்நாட்டில் தலைவலி; புதுவையில் திருகுவலி; கேரளாவில் மண்டையிடி; கர்நாடகாவில் நெத்தியடி! கொல்கத்தாவில் வேறு மம்தா பிரான்ட் கவனிப்பு.. காங்கிரஸ் கழுதை கட்டெறும்பாகி ரொம்ப நாளாச்சு! அதைக் காப்பாற்ற நீங்கள் குறிப்பிடும் யாரும் அக்கறை காட்டவும் இல்லை; அவர்களால் காப்பாற்றவும் முடியாது.

● எஸ். அகிலா, தென்கட்டப்பந்தாங்கல்

*? இன்றைய அரசியல் சதுரங்கத்தில் காய்களைச் சாமர்த்தியமாக நகர்த்துபவர் யார்..?*

! மேடம் மேக்யவெல்லிதான்! அவரைக் காட்டிலும் சாமர்த்தியசாலிகள் வாக்காளர்கள் என்று மே 13 அன்று நிரூபணமாக வேண்டும்.


• கெடு தேதி...!

❑ ரூ.50 பரிசு பெறுபவர் :
எஸ்.ஈ. தாஸ்
19, புதுகுளக்கரை சாலை, ஓட்டேரி,
சென்னை - 600 012.

★ ரூ. 25 பரிசு பெறுபவர் :
கணபதி வெங்கட்ராமன்,
131/11, சீனிவாசபுரம், பட்டினப்பாக்கம்,
சென்னை - 600 028.



● பாலு, மதுரை - 1

? பேனசிர் போல நம் 'ஜெ'க்கும் 'க்ளீன் சிட்' கிடைக்குமா..?

! பேனசிருக்கு 'கிளீன் சிட்' கிடைத்ததாக யார் சொன்னது? வழக்கை மீண்டும் நடத்துமாறு உச்ச நீதிமன்றம் உத்தரவிட்டது. காரணம் கூறப்படவில்லை. (டெக்னிகல் தவறுகளாகவும் இருக்கலாம்). தவிர, பேனசிர் பேரில் வேறு பல வழக்குகளும் தொடுக்கப்படவுள்ளன. முஷாரஃப் அவரை எளிதில் தப்ப விடுவதாக இல்லை.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி

? 'தாத்தா மாதிரி தலைவரா வரணும்' என்று மூப்பனார் பேரனுக்கு ஜெயலலிதா கூறிய வாழ்த்து..?

! அடக்கடவுளே! பேரன் கூடவா அ.தி.மு.க.வுக்கு அடிமைப்பட்டுக் கிடக்க வேண்டும்!

● கணபதி வெங்கட்ராமன், சென்னை - 28 ★

? பொதுக்கூட்ட மேடையிலேயே தமது சொத்து விவரங்களை வெளியிட்ட வைகோவுக்கு முதல்வராக வருவதற்கான தகுதிகள் இல்லை என்று நினைக்கிறீர்களா..?

! மைனஸ் புலி ஆதரவு வைகோ தகுதியாளர்தான். ஆனால் வாய்ப்புகளைப் பெருக்கிக் கொள்வதற்குப் பதில் குறைத்துக் கொண்டிருக்கும் அவரைக் கண்டால் பரிதாபம்தான் ஏற்படுகிறது.

● ஆர். சுப்பராவ், சென்னை - 61

? எப்போதும் போலவே ஜெயலலிதாவின் வெற்றிக்குப் பின்னால் தான் இருப்பேன் என்று நடராஜன் (சசிகலா) சொல்கிறாரே...?

! ஜெயலலிதா எத்தனை அறிக்கை விட்டாலும் ஏமாறுவதற்கு யாராவது பாக்கி இருப்பார்கள் என்ற நம்பிக்கைதான்.

● எஸ். ஈ. தாஸ், சென்னை - 102 ❑

? சர்வே முடிவுகள், கருத்து கணிப்புகள், வேட்பாளருக்கு வேண்டுமானால் உற்சாகம் தரலாம். அவற்றை அப்படியே ஏற்று மக்கள் வாக்களிப்பார்களா..?

! கல்வி அறிவு (படிப்பறிவு அல்ல) மிக்க மேல்நாடுகளில் மக்களைக் கருத்துக் கணிப்புகள் திசை திருப்ப முடியாது. ஆனால் இந்தியாவில் கருத்துக் கணிப்புகள் ஆபத்தானவை. இங்கே ஆட்டு மந்தை சுபாவம் மிகுதி. ஜெயிக்கிற கட்சிக்கு வோட்டுப் போடும் மனோபாவம் நிறையவே உண்டு. எனவே போலியான கருத்துக் கணிப்புகள் உருவாகவும் வாய்ப்பு உண்டு. இங்கே கருத்துக் கணிப்புகள் தடை செய்யப்பட வேண்டியவைதான்!



● கு. கணேசன், பனங்கோட்டூர்

? "ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து மீண்டும் தி.மு.க. அணியில் ம.தி.மு.க. இடம்பெற வேண்டும். இதுவே சிறந்தது; நல்லது!" என்று ப. சிதம்பரம் விருப்பம் தெரிவித்துள்ளாரே..?

! ஒட்டுப்போட முடியாத அளவுக்குக் கிழிந்த பிறகு அவர் ஊசி நூலுடன் வருவது வழக்கம்தான்! த.மா.கா.விலேயே அவர் சரியான நேரத்தில் 'கண்டிஷ'னாக'ப் பேசியிருந்தால் இன்று நிலைமையே வேறாக இருந்திருக்கலாம்.

● வி. பரமசிவம், அரசரடி

? "தனிமைப்பட்டதன் மூலம் விரக்தியின் உச்சத்தை அடைந்துவிட்ட கருணாநிதி, இனி வன்முறை நடவடிக்கைகளுக்கு ஊக்கமளிப்பார்" என ஜெ. கூறியுள்ளது பற்றி..?

! 'யார் காரணமாக வன்முறை நடந்தாலும் அதற்குக் கருணாநிதிதான் பொறுப்பு' என்று பழி போட நிலைகளைத் தயார் செய்கிறார் அம்மா.. இது அவருடைய வழக்கமான டெக்னிக்தான்..!

# குறையொன்று

சீர்காழியிலே உலகளந்த பெருமாளாக பகவான் நிற்கிறான் என்றேன். அங்கே அவன் சன்னதிக்குப் போனால், ஒரு விரலைக் காண்பித்துக் கொண்டு நின்று கொண்டிருப்பான்!

அவனைப் பார்த்தவுடனே என்ன தோன்றும் நமக்கு...?

அன்றைய தினம் மகாபலி சக்ரவர்த்தியைப் பார்த்து இன்னொரு அடி நிலம் எங்கே என்று கேட்டான். பதிலுக்கு மகாபலி தலையை நீட்டி விட்டான். பகவானும் அவன் தலையில் கால் வைத்து அவனைக் கீழே பாதாள உலகத்துக்குத் தள்ளி விட்டான்.

அப்படியானால், நீட்டிய விரலை மடக்க வேண்டியதுதானே! எதற்காக அதை உயர்த்தியபடி இருக்க வேண்டும்? - இப்படியொரு சந்தேகம் நமக்கு வரும். இவனுடைய இஷ்ட பூர்த்தி சித்தித்து விட்டதே; இன்னமும் ஏன் விரலை மடக்காமல் இருக்கிறான் என்று தோன்றும்.

ஆனால் இப்போது அவன் விரலை உயர்த்திப் பிடித்து நிற்பது பலி சக்ரவர்த்திக்காக அல்ல; நம்மை நோக்கி!

ஆளவந்தார் சொல்கிறார் ஒரு சுலோகத்திலே -

'சாதக பக்ஷி மாதிரி ஒரே உணர்வு; ஒரே எண்ணம் நமக்கு இருக்க வேண்டும்' என்று.

அதையே பிரம்ம சூத்திரம் ஒரு சுலோகத்தில் சொல்கிறது :

நமக்குப் பரப்ரும்ம அறிவு ஏற்பட்ட பிற்பாடு, இந்த சரீரம் கீழே விழுகிற வரையில் அவனை நினைத்துக் கொண்டே இருக்க வேண்டும். பூரணமாக இந்த சரீரம் கீழே விழுகிற வரையில் அவனைத் தியானம் பண்ண வேண்டும்.

அந்த மாதிரி, ஒரே சிந்தனையாய் இருப்பவனுக்கு உவமை சொல்லக்கூடியதாய் ஒரு பறவை-சாதக பக்ஷி-ப்ரும்ம சூத்திரத்திலே இருக்கிறது. அந்த சூத்திரத்தின் அர்த்தத்தை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

அனுஷ்டானத்தினால் அப்படி அந்த சாதக பக்ஷி மாதிரி ஆக முடியுமோ என்றால் சொல்வதற்கில்லை. யாரோ ஒருசில மகான்களுக்கு முடியலாம். ஆனால், பக்ஷிக்கு - சாதகப் பறவைக்கு - இயற்கையாகவே அமைந்திருக்கிறது இந்தக் குணம். அது ஆகாசத்தைப் பார்த்து எப்போ மழை வரும் எப்போ மழை வரும் என்று ஏங்குகிறது. ஏனென்றால், கண்ட தீர்த்தத்தை அது குடிக்காது. மனிதனுக்கு இல்லாத நல்ல குணமெல்லாம் பிராணிகளுக்கு இருக்கிறது பாருங்கள். மழை நீருக்காக அது காத்துக் கிடக்கிறது. மனிதன்தான் துராசாரனாக எங்கு வேண்டுமானாலும் சாப்பிடுகிறான்.

அந்த சாதக பக்ஷி இருக்கிறதே, அது ஆகாசத்தில் இருக்கிற நீர்த்துளியைத்தான் பருகுமேயொழிய பூமியிலே இருக்கிற தீர்த்தத்தைத் தொடவே தொடாது!

அதற்காகவே வருண பகவான் மழையைப் பொழிவிப்பான். 'ஐயோ, இது எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறதே... தியானம் பண்ணுகிறதே' என்று பொழிவிப்பான்!

அப்படிப்பட்ட ரீதியில், சாதக பக்ஷி போல அவனையே நினைக்கக்கூடிய உணர்வு நமக்கு ஏற்பட வேண்டும். 'அந்த பகவான் எல்லா விதமான பந்துவாக எனக்கு எப்போது ஆவான். சதா சதா சதா அவன் திருவடித் தாமரைகளை எப்போது நான் என் சிரஸிலே வைத்துக் கொள்வேன்? அந்த பகவான், பரமாத்மா, அதி சீதளமாக எப்போது என்னைப் பார்த்து, கைதட்டி அருகே கூப்பிட்டு மடியிலே எப்போது உட்கார வைத்துக் கொண்டு, என்னை உச்சி முகர்ந்து குசல ப்ரச்னம் பண்ணுவான்? இதெல்லாம் எப்போது நடக்கப் போகிறது? எப்போது நடக்கப் போகிறது? எப்போது நடக்கப் போகிறது? எப்போது இது கிடைக்கும்?' என்று விசாரம் பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டும். அதை நினைத்துக் கொண்டேயிருக்கவேண்டும்.

பகவான் திருவடியிலே சங்க ரேகை, சக்கர ரேகை, கத ரேகை, அங்குச ரேகை - இப்படிப்பட்ட ரேகைகளெல்லாம் இருக்கிறதாம்.

அதை அனுபவிக்க வேண்டாமா!

அதற்காகவே அவனைப் பார்த்து பக்தனாகிறவன் கேட்கிறான் :

# எல்லை

'ஹே திரிவிக்கிரமா! மறுபடியும் ஒரு தடவை உன் திருவடியை என் சிரஸிலே வையேன்! எப்பொழுது நீ வைப்பாய்...?'

உடனே பகவான் அவனைப் பார்த்துக் கேட்கிறான் –

"ஆமாம்! நீ உலகளந்தபோது காடு – மேடு எல்லாவற்றையும் அளந்தாயே...!"

மேடு – பள்ளம் வித்தியாசமில்லாமல் கரடான முரடான பதார்த்தங்கள் எல்லாவற்றையும் பகவான் அளந்தான். அவன் பாதம் படாத இடம் என்று ஒன்று உண்டா!

அப்பேர்ப்பட்ட பகவான் பாதம் பட்ட போது,

"நான் கல்லாக இருந்தேனா? மண்ணாக இருந்தேனா? முள்ளாக இருந்தேனா...? எதுவாக இருந்தேனோ! அந்த பாதத்தினுடைய ருசி தெரியாத ஒரு அசித் பதார்த்தமாக நான் இருந்திருக்கக் கூடும். இப்போது அந்த பாதத்தினுடைய ருசி கண்டேன். ஆசார்யர்கள் அனுக்கிரஹத்தினாலே அது என்னது என்று தெரிந்து போயிற்று எனக்கு. அதனால்,



முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

அதை நான் உணர்ந்திருக்கிற நிலையிலே திரும்பவும் அனுபவிக்க வேண்டும் என்பதற்காக மறுபடியும் ஒரு தடவை சிரஸிலே வை" என்று பிரார்த்தித்தான்.

இப்படியாக, எல்லாவற்றையும் அளந்த பகவான் இது மொத்தமும் தன்னுடையது என்று காட்டினான். அதனால்தான் திரிவிக்கிரமனை வேதம் வெறுமே சொல்லி சொல்லிக் கொண்டாடுகிறது.

உபநிஷத்தில் முதல் சாந்தி பாடம் வருகிறது பாருங்கள்...

*ஷண்ணோ மித்ர சம்வருண:* என்று ஆரம்பித்துச் சொல்கிறதே. அதிலே ஆரம்பத்தில் 'அரியமா' என்றொரு தேவதையைச் சொல்கிறது. 'அவன் மங்களத்தைக் கொடுக்கட்டும்' என்று சொல்கிறது. சொல்லிக் கொண்டே வருகிறபோது, விஷ்ணுவைக் குறிப்பிடும்போது மட்டும் ஓர் அடைமொழி இட்டுக் குறிப்பிடுகிறது. விசேஷமாகக் குறிப்பிடுகிறது.

*ஷண்ணோ விஷ்ணு உருக்ரம:*

– உலகத்தை அளந்தவனிருக்கிறானே – அந்த விஷ்ணு என்று சொல்கிறது.

எல்லாமே அவனுடையது என்கிறது.

உலகத்திலே ஒரு கட்டுத் திட்டம் போட்டு, இதுவரைக்கும் ஓர் இடத்தை ஒருத்தர் வாங்கியிருக்கிறார் என்றால், அதை அளந்து பார்த்து 250 கஜம் என்று நிர்ணயம் செய்கிறார்கள். அப்புறம் அளந்த இடத்தைச் சுற்றிலும் சுவரைக் கட்டி வைக்கிறார் அவர்.

அப்படிக் கட்டினவுடனேயே அது அவர் இடம் என்று ஊர்ஜிதமாகிறது. அந்த இடத்திலே வந்து வேறு ஒருத்தர் வீடு கட்டி விட முடியுமா...? அது போலவே பரமாத்மா உலகமெல்லாம் அளந்து அது மொத்தமும் அவனுடையது என்று காட்டினான்.

நரசிம்ஹ அவதாரத்தில், எல்லாவற்றிலும் நிறைந்து, எல்லாம் நானே என்றான். வாமனாவதாரத்திலோ, எல்லாவற்றையும் அளந்து எடுத்துக் கொண்டான்.

அளந்த அவன் பெருமையை நம்மால் அளக்க முடியுமா...? யாராலும் அளக்க முடியாது என்கிறது வேதம்!

எல்லோரையும் கூப்பிட்டுக் கூப்பிட்டுச் சொல்கிறது வேதம் :

'இங்கே வாருங்களேன்! இங்கே வாருங்களேன்... எங்கேயோ வீணான விஷயங்களில் போய்க் கொண்டிருக்கிறீர்களே'' என்று

## அருள்வாக்கு

நடைமுறையில் நமக்குள்ள மன நிலையில், நாம் கெட்ட காரியங்களில் போகாமலிருப்பதற்கு வழி ஏதாவது நல்ல கார்யங்களில் ஈடுபட்டுக் கொண்டேயிருப்பதுதான். எந்த நல்ல கார்யத்திலும் கெட்டது வரலாமானாலும், சாஸ்த்ரப்படியும், பெரியவர்கள் வழி காட்டியுள்ளபடியும், நம்முடைய மனஸ்ஸாக்ஷிக்குக் கொஞ்சம் கூட உறுத்தாதபடியும், 'மொத்தத்தில் நல்லது' என்று தெரிகிற கார்யங்களில் – கார்யத்தில் கெடுதல் ஏதாவது சேர்ந்தாலும் கூட, நம்முடைய உத்தேசம் கெட்டதேயில்லாமல் நல்லதாக இருக்கிற கார்யங்களில்– ஈடுபட்டு ஈடுபட்டுத்தான் பழைய கெட்ட கர்மா பாக்கிகளைத் தீர்த்துக்

அழைத்து அழைத்துச் சொல்கிறது!

அதை வைத்துக்கொண்டுதான் ஆண்டாள் 'வையத்து வாழ்வீர்காள்!' என்று அழைத்து, நாமும் நம் பாவைக்குச் செய்யும் கிரிசைகள் கேளீரோ...?' என்றாள்.

'நீங்கள் எல்லோரும் உட்கார்ந்து கேட்டாகணும்' என்று ஆணையிடவில்லை ஆண்டாள்! விஷயத்தை அவர்களிடமே விட்டு விட்டாள்.

'கொஞ்சம் கேட்க மாட்டீர்களா நான் சொல்வதை...? கேட்டால் ரொம்ப சந்தோஷமாக இருக்கும். கொஞ்சம் கேளுங்களேன்...' என்று எவ்வளவு பவ்யமாகக் கேட்கிறாள் பாருங்கள்.

அதே மாதிரிதான் வேதமும் பவ்யமாகச் சொல்கிறது :

*விஷ்ணு: கர்மாணி பச்யதா!*

'எல்லோரும் பாருங்களேன்; அந்த விஷ்ணு பண்ணிய லீலைகளைப் பாருங்களேன்...' என்கிறது.

இங்கே 'கர்மா' என்றால் லீலை என்று அர்த்தம்.

வித்யாரண்ய சுவாமி, பட்டபாஸ்கராச்சார்யார் முதலிய மகான்கள் வேதத்துக்கு பாஷ்யம் எழுதினார்கள். அவர்கள் சொல்கிறார்கள் :

கர்மா என்றால், விஷ்ணுவுக்குப் பாப புண்ணியங்களெல்லாம் கிடையாது. அதற்கெல்லாம் அப்பாற்பட்டவன் அவன். இங்கே 'கர்ம' சப்தத்துக்கு என்ன அர்த்தம்

கொள்ள வேண்டியிருக்கிறது. இப்படிப் பணிகள் செய்வதில் வாஸ்தவமாகவே நாம் பிறத்தியாருக்கும், பிறத்தியார் நமக்கும் அநேக நல்லது பண்ணவும் முடியுந்தான். ஒத்துக் கொள்கிறேன். (சிரித்தபடி) ஒத்துக் கொள்வதோடு, இத்தனை நாழி சொன்ன மாதிரி, சும்மாயிருந்துவிட மாட்டேன்! உங்களையும் சும்மாயிருக்க விடமாட்டேன்! 'இதைப் பண்ணுங்கோ, அதைப் பண்ணுங்கோ!' என்று ஓயாமல் உங்களுக்கு ஏதாவது காரியத்தைக் கொடுத்து உபத்ரவம் பண்ணிக் கொண்டேதான் இருப்பேன்! 'ஒரு நல்லதும் பண்ண வேண்டியதில்லை; சும்மாயிருக்கிறதுதான் பெரிய உபகாரம்' என்று நான்



விஸ்தாரம் பண்ணிக் கொண்டு போனதைப் பார்த்துவிட்டு யாராவது, 'அப்பாடா! இனிமேலே இவர் வேத ரக்ஷணம், பிடி அரிசி, ஆத்திக்கீரை, கும்பாபிஷேகம், குளம் வெட்டுவது என்று ஏதையாவது சொல்லி ஹிம்ஸை பண்ண மாட்டார்' என்று நினைத்திருந்தால் நன்றாக ஏமாந்துதான் போவீர்கள்! இனிமேலேயும் இப்படிச் சொல்லி, இன்னும் புதிசு புதிசாக ஏதாவது சேர்த்துச் சொல்லி, உபத்ரவம் பண்ணிக் கொண்டு தானிருப்பேன்!

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

என்றால் பகவான் லீலா என்று பொருள். அந்த லீலையைப் பாருங்களேன்; கொஞ்சம் பாருங்களேன் என்று கூப்பிட்டுக் கூப்பிட்டுக் காண்பிக்கிறது வேதம்.

அந்த கர்மாக்களைப் பார்த்தாவது அவனிடத்திலே ஈடுபட வேண்டாமா...? அதைப் பார்த்த பிறகும் அவனிடத்தில் ஈடுபடவில்லையென்றால் வாழ்வு உண்டோ?

உடனே வேதமே இன்னொரு கேள்வி கேட்டுக் கொள்கிறது –

'அவன் சாமானியன் என்று நினைத்து விட்டீர்களா...? அவன் உயர்ந்தவன், உலகத்தையெல்லாம் அளந்தவன், அவனை நினையுங்கள், பாருங்கள் என்று சொல்லி விடலாம்... ஆனால் அவ்வளவுக்கும் பிறகு அவன் கிட்டே கிடைப்பானா...?' என்றொரு கேள்வியை எழுப்புகிறது.

'இதோ பார்! அவன் தோழன் நமக்கு!... ரொம்ப தூரத்திலே இருக்கிறான் என்று நினைக்க வேண்டாம். இந்திரனுக்குத் தோழன் அவன்; இந்திர சகா! அதனால் தான் 'உபேந்திர, இந்த்ர வனஜ:-' என்று பதிலும் சொல்கிறது வேதம். நமக்கும் தோழனாய் இருப்பான்!

அமர கோசம் என்றொரு நூல் உண்டு. மூன்று காண்டங்கள் கொண்டது. அமரத்தை முதலில் நன்றாக மனப்பாடம் பண்ணினால்தான் சமஸ்கிருதத்தில் தெளிவான ஞானம் ஏற்படும். ஏனென்றால், ஒவ்வொரு தேவதைக்கும், ஒவ்வொரு பதார்த்தத்துக்கும் எத்தனை பெயர்கள் உண்டோ, அது மொத்தத்தையும் இந்த அமரத்திலே சொல்லியிருக்கிறது.

அப்படிப்பட்ட அமரத்திலே ரொம்ப அழகாக விஷ்ணுவினுடைய பெயரும் சொல்லப்பட்டிருக்கிறது:

உபேந்திர இந்திரா வரஜ:
சக்ரபாணி: சதுர்புஜ:

அதே மாதிரி, மஹாலக்ஷ்மியின் பெயரைச் சொல்கிறபோது, அவள் யார்? எப்படிப்பட்டவள் என்பதை உள்ளடக்கிச் சொல்லியிருக்கிறது.

லக்ஷ்மி: பத்மாலய பத்மா
கமலா ஸ்ரீ: ஹரிப்ரியா
இந்திரா லோகமாதாமா
நமா மங்கள தேவதா!
பார்கவி லோக ஜனனி
க்ஷீர சாகர கன்யா...

– இப்படி அழகாக, எவ்வளவு அழகாகச் சொல்லியிருக்கிறது பாருங்கள்! வீட்டிலே குழந்தைக்குப் பெயர் வைக்க வேண்டுமானால், இதைப் பார்த்து வைக்கலாம்.

உபேந்திரம் என்று விஷ்ணுவைச் சொல்கிறது. இந்திரனுக்குப் பிற்பாடு பிறந்தவன் என்று அர்த்தம்.

இந்திரனுக்குத் தம்பியா பகவான்? என்று கேட்டால் ஆமாம் தம்பிதான்!

(வளரும்)



# விண்ணுக்கும் மண்ணுக்கும் காதல்

**புத்தம் புது மஞ்சள் கயிறு தங்கச் சங்கிலியோடு பின்னிப் பிணைந்து டாலடிக்க, கும்பகோணம் அருகேயுள்ள திருமணஞ்சேரி திருத்தலத்திற்குக் கிளம்பிக் கொண்டிருந்த தேவயானியை மடக்கினோம். அருகிலேயே வெட்கத்தோடு மாப்பிள்ளை.**

“எந்த சினிமா யூனிட்டாக இருந்தாலும், லைட்பாய் உட்பட எல்லோரும், நடிகைகளை, ஏதோ ஒரு பொம்மையைப் பார்க்கிற மாதிரி வேடிக்கை பார்ப்பது வழக்கம். என்னை வேடிக்கை பார்க்காத, வழியாத முதல் ஆளாக என் கண்களுக்குத் தெரிந்தார் ராஜகுமாரன், ‘சூர்ய வம்சம்’ படப்பிடிப்பின்போது. அந்த நொடியிலேயே நட்பை முந்திக் கொண்டு மரியாதை பிறந்துவிட்டது.

“‘நீ வருவாய் என’ கதையை என்னிடம் அவர் சொன்னபோது, அந்தக் கதையின் ஹீரோவாகத் தன்னை வரித்துக்கொண்டு உணர்ச்சிபூர்வமாக அவர் கதை சொன்னவிதம் என்னை ரொம்பவே ஈர்த்தது. அந்தப் படம் முடிவதற்குள் மரியாதையும் ஈர்ப்பும் காதலாக மாறிவிட்டது. அவரும் என்னைக் காதலிக்கிறார் என்று உள்ளுணர்வு சொன்னாலும் வெளிப்படையாக அவரிடம் அதைப் பற்றிப் பேசத் தயக்கம். இப்படி ஒரு இக்கட்டான நிலையில்தான் ‘விண்ணுக்கும் மண்ணுக்கும்’ – அவரது இரண்டாவது படத்தின் வேலை தொடங்கியது. கதை சொல்ல வந்த அவரிடம், “என்னை ஒரு ரசிகன் காதலிப்பது மாதிரி கதையை எழுதியிருக்கிறீர்களே... நீங்கள்தானே அந்த ரசிகன்?” என்று தடாலடியாகக் கேட்டுவிட்டேன். எங்கிருந்து அவ்வளவு தைரியம் வந்ததோ தெரியவில்லை. அப்போது அவர் முகத்தில் வந்த ரியாக்‌ஷனைப் பார்க்க வேண்டுமே... இப்போது நினைத்தாலும் பயங்கர த்ரில்...”

*திருமணஞ்சேரியில் என்ன...?*

‘ஆனந்தம்’ படப்பிடிப்பில் கலந்து கொள்ள கும்பகோணம் சென்றிருந்தபோது, திருமணஞ்சேரி திருத்தலம் பற்றிக் கேள்விப்பட்டு, எங்கள் திருமணம் நல்லபடியாக நடக்க வேண்டும் என்று அங்கே போய் வேண்டிக்கொண்டேன். நினைத்தது நடந்துவிட்டது... வேண்டுதலை நிறைவேற்ற வேண்டாமா?

*அங்கிருந்து?*

நேரே ஈரோட்டில் இருக்கும் மாமனார் வீட்டிற்குப் போகிறோம். மாமனார், மாமியார், கொழுந்தனார், அந்தியூர் கிராம மக்கள் எல்லோரும் ஆரத்தியோடு காத்துக் கொண்டிருக்கிறார்கள்!

*சினிமா?*

அவரைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். ஹோம்லி கேரக்டர் என்றால் நிச்சயம் நடிக்க அனுமதி தருவார்.

*ஆல் தி பெஸ்ட்!*

— ஸ்ரீ சக்கரம்

மினி தொடர்

# நான்கு முதல்வர்களும் நானும்

ஆச்சி மனோரமா

# எம்.ஜி.ஆரின் காதல்!

2

"இந்த இடம், என் வாழ்க்கையில் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு இடம்" என்று சொன்னார் எம்.ஜி.ஆர். மைசூர் அருகே காவிரி ஆற்றுப் படித்துறை! "அப்படிங்களா?" என்று ஆச்சர்யமாக நான் கேட்டேன். அவர் பேசினார். "நானும், ஜானகியும் முதன் முதலாகச் சந்தித்துப் பேசியது இந்த இடத்தில்தான். இங்கேதான் நாங்கள் எங்கள் காதலை பரஸ்பரம் வெளிப்படுத்திக் கொண்டோம்." என்றார். தொடர்ந்து, தனக்கும் ஜானகிக்கும் இடையே மலர்ந்த காதல், வளர்ந்து, திருமணத்தில் முடிந்தது வரை நடைபெற்ற பலவிதமான அனுபவங்களை என்னுடன் பகிர்ந்து கொண்டார். அவர் ஒவ்வொரு விஷயத்தையும் என்னிடம் சொல்லுகிறபோது, லட்சக் கணக்கான ரசிகர்களைத் தமது கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் எம்.ஜி.ஆரையும் இந்தக் காதல், இவ்வளவு பாடு படுத்தியிருக்கிறதா? என்று ஆச்சர்யமாக இருந்தது. உள்ளூர, எம்.ஜி.ஆர்., எதற்காக இத்தனை விஷயங்களையும் என்னிடத்தில் சொல்லுகிறார்? என்ற கேள்வியும் எழாமல் இல்லை.

அதற்காக, இதையெல்லாம் ஏன் இப்போது என்னிடம் சொல்லுகிறீர்கள்? என்று எம்.ஜி.ஆரிடமா கேட்க முடியும்? அவர் சொன்னதையெல்லாம், கண்களை அகல விரித்துக் கொண்டு, வியப்புடன் கேட்டுக்கொண்டே இருந்தேன்.

அன்று இரவு முழுவதும், எனக்கு இதுபற்றிய சிந்தனை. எம்.ஜி.ஆர். என்னை இப்படி அழைத்து உட்கார வைத்து, தன் அந்தரங்க விஷயங்களைப் பகிர்ந்து கொள்ளுகிறார் என்றால், அவர் என் மீது எத்தனை பாசமும், நம்பிக்கையும் வைத்திருக்கிறார் என்பதும் எனக்குப் புரிந்தது. ஏதோ மிக அதிசயமான ஒரு விஷயம் எனது வாழ்க்கையில்

நடந்துவிட்டது போல நான் உணர்ந்தேன்.

காரணம், எம்.ஜி.ஆர். என்கிற மாபெரும் மனிதர் தமது இமேஜ் பற்றி ரொம்பவும் கவனம் செலுத்துபவர். பொது மக்கள் மத்தியில், தமது ரசிகர்கள் மத்தியில், தமது இமேஜ் என்றைக்குமே இப்படித்தான் இருக்க வேண்டும் என்பதை ஆரம்ப காலம் முதலே திட்டமிட்டு, எக்காரணம் கொண்டும், எந்த ஒரு தருணத்திலும் அதிலிருந்து சிறிதளவும் பிசகாமல் காப்பாற்றியவர். அப்படிப்பட்ட ஒருவர், தம் காதல் விஷயங்களை என்னுடன் பகிர்ந்து கொண்டார் என்பதை, இன்று நினைத்துப் பார்த்தாலும், ஒரு வித இனம் புரியாத உணர்வு என்னைத் தொற்றிக் கொள்ளும்.

எம்.ஜி.ஆருடன் பல படங்களில் பணியாற்ற எனக்கு வாய்ப்பு கிடைத்தது. கடைசியாக 'ராமன் தேடிய சீதை' படத்தில் நடித்ததாக நினைவு. அதன்பிறகு, எனக்கு அவர் படங்களில் நடிக்க வாய்ப்பு கிட்டவில்லை.

எம்.ஜி.ஆர். முதலமைச்சராகப் பொறுப் பேற்றுக் கொண்டதற்குப் பின், ஒருமுறை, தமிழக அரசின் திரைப்பட விருது வழங்கும் விழா அவரது தலைமையில் நடைபெற்றது. அதில் எனக்கும் விருது வழங்கப்பட்டது. விருதைப் பெற்றுக் கொண்ட பிறகு, விழா மேடையில் பேசும்படி அழைக்கப்பட்டேன். "பல வருடங்களுக்கு முன், 'தில்லானா மோகனாம்பாள்' படத்தில் நடித்ததற்காக, நாட்டியப் பேரொளி பத்மினிக்கு சிறந்த நடிகை விருதும், பாலையாவுக்குச் சிறந்த நகைச்சுவை நடிகர் விருதும், ஜில் ஜில் ரமாமணியாக நடித்த எனக்கு, சிறந்த நகைச்சுவை நடிகை விருதும் கிடைத்தன. அந்த வருடம் சிறந்த நடிகர் விருதுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் எம்.ஜி.ஆர். (காவல்காரன் படத்துக்கு என்று நினைக்கிறேன்) நாங்கள் நான்கு பேரும், அன்றைய தமிழக முதல்வர் கலைஞர் கருணாநிதியின் கையால், விருதுகள் வழங்கப்பட்டு கௌரவிக் கப்பட்டோம். அன்று எம்.ஜி.ஆர். அவர்களுடன் சேர்ந்து விருது வாங்கிய நான், இன்று தமிழக முதலமைச்சர் பொறுப்பில் இருக்கிற எம்.ஜி.ஆர். அவர்கள் கைகளால் விருது வழங்கப்படுவதை வாழ்க்கையின் பெரும்பாக்கியமாகக் கருதுகிறேன்!" என்று குறிப்பிட்டேன். அத்துடன் இல்லாமல், "இப்போதுகூட, எம்.ஜி.ஆர். நடிப்பதற்கு வரலாம். இன்றுள்ள இளம் கதாநாயகிகளுடனும் ஜோடியாக இணைந்து நடிக்கும் அளவுக்கு அவர் இளமையாக இருக்கிறார். இதற்கு முக்கிய காரணம், உடல் நலத்திலும், உடல் பயிற்சியிலும் எம்.ஜி.ஆர். காட்டி வரும் ஆர்வமும் அக்கறையும் தான்" என்றும் சொன்னேன்.

விழாவில் பேசிய எம்.ஜி.ஆர். என்னைப் பாராட்டிக் கூறிய வார்த்தைகள் இன்னமும் பசுமையாய் எனது நினைவில் இருக்கின்றன. அப்போது 'கரையெல்லாம் செண்பகப் பூ' படம் வெளியாகியிருந்தது. அதில், எனக்கு கிராமியப் பாடல்கள் சொல்கிற மூதாட்டி வேடம். "பேபியா, குமரியா, திருமதியா, கிழவியா, எந்த கதாபாத்திரம் என்றாலும், மனோரமா அப்படியே அச்சாக அதில் பொருந்திவிடுகிறார். அந்த கேரக்டர், இவருக்காகவே உருவாக்கப்பட்டதோ என்று நினைக்கும்படி கதாபாத்திரத்துடன் ஒன்றி விடுகிறார்" என்று பாராட்டினார்.

அவர் முதலமைச்சர் ஆனபிறகு, அவரை அடிக்கடி சந்திக்கிற வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. அவர் உடல் நலம் குன்றி, அமெரிக்காவுக்கு சிகிச்சைக்காக சென்ற போது, அவர் நன்கு குணமடைந்து திரும்பி வர வேண்டும் என்று மனமுருகி வேண்டிக் கொண்ட லட்சக்கணக்கானவர்களில் நானும் ஒருத்தி.

சிகிச்சை முடிந்து, சென்னை திரும்பிய தினம், விமான நிலையத்திலிருந்து, நேரே, ஆயிரக்கணக்கில் மக்கள் அவரைக் காணக் கூடியிருந்த மைதானத்தில், கிடுகிடுவென பழைய சுறுசுறுப்புடன் மேடையேறி, மக்கள் வெள்ளத்துக்கிடையே கையசைத்த காட்சி, அவரது அசாத்தியமான 'வில்' பலருக்கு

## கிட்டுவுக்கு என்ன ஆச்சு?

"செயலில் சிட்டு; சைதை கிட்டு" என்று கலைஞரால் பாராட்டப்பட்ட சைதை கிட்டு இரண்டு மாதகால்மாக உடல் நலமில்லாமல் இருக்கிறார். தேர்தல் சமயத்தில் செயல் மறவரான கிட்டு இப்படியிருப்பது கட்சித் தலைமையினருக்கு ஒரு துரதிர்ஷ்டம்தான். கிட்டுவுக்கு என்ன ஆச்சு? சைதை சின்ன மலையில் இருக்கும் அவர் வீட்டில் சந்தித்தோம். சால்வை போடும் தொண்டர்களிடம் "நல்லா பண்ணுங்க. போனமுறை வாங்கியதைவிட இந்த முறை

அத்தாட்சி.

அவரது மறைவுக்குப் பின், திரை உலகத்தின் சார்பில் ஓர் இரங்கல் கூட்டம் நடத்தப்பட்டது. அதில் ஏராளமானவர்கள் தங்கள் அனுதாபத்தைத் தெரிவிக்கும் விதமாகப் பேசினார்கள். நானும், என் மனத்தில் பட்டதைச் சொன்னேன்.

"திரை உலகத்தைச் சேர்ந்த நாம் எல்லாம், நமது காவல்காரரை இழந்துவிட்டோம். நமக்கு ஒரு சிறு இக்கட்டு என்றாலும், அவர் காதில் விஷயத்தைப் போட்டு விட்டால், அதைப்பற்றி அப்புறம் நாம் கவலைப்படவே வேண்டாம். அவர் பார்த்துக் கொண்டு விடுவார். நமக்குப் பாதுகாப்பு அரண்போல இருந்த காவல்காரரை, அரசியல் நம்மிடமிருந்து பிரித்துச் சென்று விட்டது நம்முடைய துரதிருஷ்டம். அவர் அரசியலுக்குள் நுழையாமல், திரையுலகிலேயே தொடர்ந்து இருந்திருப்பாரேயானால், இன்னும் இருபதாண்டு காலம் உயிர் வாழ்ந்திருப்பார். அரசியல் மற்றும் அரசாங்கப் பணியினால் ஏற்பட்ட வேலை பளு அவரை நம்மிடமிருந்து சீக்கிரமாகப் பிரித்துவிட்டது" என்று நான் அந்த அனுதாபக் கூட்டத்தில் பேசியது ஏதோ உபசாரத்துக்காகச் சொல்லப்பட்ட வார்த்தைகள் அல்ல. என் இதயத்தின் அடிமட்டத்திலிருந்து எழுந்த அனுதாபத்தின் வெளிப்பாடு!

பலரும் என் கருத்தை அன்று ஆமோதித்தார்கள். அன்றைய அனுதாபக் கூட்டத்தில், நான் எம்.ஜி.ஆரைக் காவல்காரர் என்று குறிப்பிட்டதற்கு காரணம் உண்டு.

ஒரு முறை, இரவு படப்பிடிப்பு முடித்து விட்டு, காரில் ஊருக்கு வந்து கொண்டிருந்தேன். பகல் முழுவதும் படப்பிடிப்பு என்பதால் மிகவும் சோர்வாக இருந்தது. காரின் பின் சீட்டில் அமர்ந்தபடியே இலேசாகக் கண்ணயர்ந்து விட்டேன். இடையில், ஒரு செக் போஸ்டில், போலீஸார், பரிசோதிப்பதற்காக காரை நிறுத்தியிருக்கிறார்கள். கார் எங்கே இருந்து வருகிறது, எங்கே போகிறது போன்ற வழக்கமான கேள்விகளைக் கேட்டுவிட்டு, காரின் டிக்கியைத் திறக்கச் சொல்லியிருக்கிறார்கள். இதற்கிடையே, காரில் இருப்பது யார் என்று கேட்டு, கதவைத் திறந்து, உள்ளே டார்ச்லைட் அடித்திருக்கிறார்கள். திடீரென்று வெளிச்சம் பட்டதால் நான் கண் விழித்தேன். என்னை அடையாளம் கண்டு கொண்ட போலீசார், 'அட! மனோரமா ஆச்சி... நம்ம தலைவருக்கு வேண்டியவங்க' என்று சொன்னபடி, காரின் கதவை மூடி 'நீங்கள் போகலாம்' என்று சொல்லி அனுப்பி வைத்தார்கள். அதனால் தான் நான் எம்.ஜி.ஆரைத் திரையுலகினருக்கெல்லாம் காவல்காரர் என்று குறிப்பிட்டேன்.

தமிழகத்தின் முதலமைச்சர்கள் எம்.ஜி.ஆர்., ஜெயலலிதா இரண்டு பேருமே சினிமாவில் நடித்தவர்கள் என்பதால், இருவரது படங்களிலும் நான் நடிப்பதற்கு நிறைய வாய்ப்புகள் கிடைத்தன. எம்.ஜி.ஆரும், ஜெயலலிதாவும் இணைந்து நடித்த படங்களில் மட்டுமில்லாமல், எம்.ஜி.ஆர்., வேறு நடிகைகளுடன் நடித்த படங்களிலும் சரி, ஜெயலலிதா, மற்ற கதாநாயகர்களுடன் நடித்த படங்களிலும் சரி, நான் நிறைய நடித்திருக்கிறேன்.

ஆனால், அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி இருவரும் திரைப்பட வசன கர்த்தாக்கள். எனவே, அவர்களுடன் இணைந்து சினிமாவில் நடிக்கிற வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை. ஆனாலும்கூட, இந்த இரு தமிழக முதல்வர்களுடனும் இணைந்து நான் நாடகங்களில் நடித்திருக்கிறேன். அந்த அரிய அனுபவம், வேறு எவருக்கும் கிட்டியது இல்லை. அதிலும், அறிஞர் அண்ணாவின் கைவண்ணத்தில் உருவான நாடகங்களில் நடித்துக் கொண்டிருந்த நான், ஒரு நாள் அவருடன் இணைந்து மேடையில் நடிப்பேன் என்று கனவிலும் நினைக்கவில்லை.

(அடுத்த இதழில்)

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**

படம் : **யோகா**



கூடுதலா வாங்கிட்டணும்'' என்ற ஊக்கம் கொடுத்து அனுப்பிக் கொண்டிருந்தவர் முகத்தில் லேசான வாட்டம் தெரிந்தாலும், "எனக்கு இப்போ பெரும்பாலும் சரியாகிவிட்டது. ரத்த அழுத்தமும், சர்க்கரையும்தான் பிரச்னை. பல நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளத் துவங்கிவிட்டேன். தேர்தலின் போது பழைய கிட்டுவை நீங்கள் பார்க்கலாம்'' என்றார் உற்சாகமாக.

**- கௌசி**

படம் : **ராஜன்**

உதாதிபன்

**வா**னம் இருட்டி நின்றது. வயிற்று இரைச்சல் போல கடமுடா மிரட்டல். நான் ஜன்னலோரம் நின்று பார்த்தேன். மழை வாசனையைச் சுமந்த காற்று, கம்பிகளின் வழியே முகத்தில் மோதி, நாசியை வருடியது ஆனந்தமாய் இருந்தது. ஆழ்ந்து சுவாசித்தேன். நான்கு வயது ஜானவி ஓடி வந்து எனது கால்களைக் கட்டிக்கொண்டது. தூக்கிக் கொண்

டேன்.

பலமான இடி.. மழை ஆரம்பித்தது. முதல் துளியிலேயே ஆக்ரோஷம், சோவென்ற இரைச்சல்.

எதிர்த்த வீட்டு மொட்டை மாடியில் காய்ந்த துணிகளை அந்த வீட்டுப் பெண் அவசரமாகப் பொறுக்கிச் சேகரிப்பதற்குள் முழுக்க நனைந்துவிட்டாள்.

"அப்பா... நான் ரைம்ஸ் சொல்லட்டுமா?"

"ம்"

"ரெயின் ரெயின் கோ அவே
கம் அகெய்ன் சம் அதர் டே"

'யாரது... பெய்யும் மழையைப் போவென்று விரட்டி அடிக்கும் கவிஞன்?'

"ஏங்க... மழை பலமா பெய்யுது. ஜன்னலோரம் நின்னுக்கிட்டு என்ன வேடிக்கை? உள்ளே வாங்க!" என்றாள் இந்து.

"கொஞ்ச நேரம் வேடிக்கை பார்த்துட்டு வர்றேன்."

"கூட ஜானவி எதுக்கு? ஜில்லுன்னு காத்து பட்டா அவளுக்கு ஒத்துக்காது. இங்கே அனுப்புங்க."

"உள்ளே போடா செல்லம்... அம்மா கூப்பிடறாங்க."

ஜானு சென்று விட்டான். மழை இப்பொழுது வேகம் பிடித்து வெள்ளிக்



கம்பிகளால் ஜாலம் காட்டியது. திடீரென்று அம்மாவின் ஞாபகம் வந்தது.

அம்மா இறந்த அன்றும் இப்படித்தான். மழை ஆக்ரோஷமாய்ப் பெய்து கொண்டிருந்தது.

ஜன்னலருகில் நின்றிருந்த எனக்கு 'திவா...' என்று உள்ளிருந்து வந்த அம்மாவின் குரல் தீனமாய்க் கேட்டது. குரலில் தொனித்த அவஸ்தையை, மழையின் இரைச்சலையும் மீறி என்னால் உணர முடிந்தது.

அம்மா படுத்துக் கொண்டிருந்த அறைக்கு ஓடினேன்.

நெஞ்சை இரு கைகளால் பிடித்தவாறே துடித்துக் கொண்டிருந்தாள். அவசரமாய் ஷெல்ஃபைத் திறந்து, மாத்திரையை எடுத்து நாக்குக்கடியில் வைத்தேன்.

இந்து பரபரப்பாய் ஓடி வந்தாள்.

"அம்மாவைப் பார்த்துக்க. நான் போய் டாக்ஸி கொண்டு வரேன். ஹாஸ்பிடலுக்குப் போயிடலாம்..."

திரும்பி வந்த என்னைக் கண்டதும் இந்துவின் அலறல் வீடெங்கும் எதிரொலித்தது.

**உள்ளேயிருந்து அம்மாவின் குரல் மானசீகமாய்க் கேட்டது...**

வீடு நிரம்பியிருந்தது.

அம்மா ஹாலின் நடுவே கிடத்தப்பட்டிருந்தாள். தலைமாட்டில் எரிந்து கொண்டிருந்த விளக்கின் ஒளி பட்டு முகம் ஜ்வலித்தது. தூங்குவது போலத்தான் தெரிந்தாள். சுற்றிலும் கேட்கும் அழுகை அவளின் தூக்கத்தைக் கலைத்து விடுமோ என்ற பயம் ஏற்பட்டது. அதனால் தானோ என்னவோ, என் கண்களிலிருந்து சொட்டுக்கண்ணீர்கூட துளிக்கவில்லை.

மூத்த அக்கா என்னருகே வந்தாள்.

"என்ன திவா... தொல்லை விட்டுச்சன்னு நினைக்கிறியா?"

அடிபட்ட பார்வையுடன் அவளை ஏறிட்டேன்.

"அக்கம்பக்கம் இருக்கிறவங்ககூட கண்ணைக் கசக்கிக்கிட்டு நிக்கறப்போ, பெத்த பிள்ளை நீ கல்லு மாதிரி உட்கார்ந்திருக்கியே..."

"நானா அக்கா அம்மாவைத் தொல்லையா நினைக்கிறவன்? நீங்க மூணு பேரும் வந்து அம்மாவைக் கூட்டிட்டுப் போய் வைச்சுக்கிறதா சொன்னப்போக்கூட அம்மாவை அனுப்ப மாட்டேன்னு சொன்னவன் நான். என் மனசுக்குள்ளே இருக்கிற சோகம் எனக்குத்தான் தெரியும்..."

"உள்ளுக்குள்ளே அடக்கி வைக்காம அழுது தீர்த்திடுங்க. அப்பத்தான் மனசு லேசாகும்" - இந்து.

"எனக்கு அழுகை வர்ல இந்து!"

துக்க வீடு முழுக்க என்னைப் பற்றித்தான் பேச்சு பரவியது. ஆளுக்காள் ஏதேதோ பேசினார்கள். அவர்களின் வார்த்தைகள் ஏற்படுத்திய காயம்கூட என் கண்களை ஈரப்படுத்தவில்லை.

மறுநாள் அம்மாவின் இறுதி ஊர்வலம் புறப்பட்டது. நான் தீச்சட்டி ஏந்தி நடந்தேன்.

முந்தின நாள் மழையில், மயானம் நனைந்து கிடந்தது. வெட்டியான் தயாராக இருந்தான். அம்மா சிதையில் கிடத்தப்பட்டாள்.

நான் அவளின் முகத்தைப் பார்த்தேன். இன்னமும் அதில் உயிர்த்தன்மை பிரதிபலித்தது.

எனக்கு விவரம் தெரிந்த நாள் முதல் நான் கண்டதெல்லாம் அம்மாவின் முகம்தான். அது கோபத்தில் கனன்றோ நான் கண்டதில்லை. எந்த நிலையிலும் புன்னகைதான் பிரதிபலிக்கும்.

வெண்கலப் பானையை எங்களுக்குக் கவிழ்த்துவிட்டு இரவு பட்டினியில் படுக்கும் பொழுதும் புன்னகைதான்.

ஒவ்வொரு பெண்ணாக தாரை வார்த்து புகுந்த வீட்டிற்கு அனுப்புகையில்... நான் வேலைக்குச் சேர்ந்த முதல் மாதச் சம்பளத்தில் பட்டுப்புடவை வாங்கி வந்து காலடியில் விழுந்து நமஸ்கரிக்கையில்... வேற்று ஜாதி இந்துவைக் காதலிப்பதாகக் கூறுகையில்... தொடர்ந்து இரண்டு அட்டாக் வந்து படுத்திருக்கையில்... அதே புன்னகைதான்.

அம்மாவின் முகத்தை கடைசி விறாட்டி மறைத்தது. சிதைக்குத் தீ மூட்டினேன். உடன் இருந்தவர்கள் கதறி அழ, நான் மட்டும் கண்ணீர் வறண்டு நின்றேன்.

நான் அழுகையின்றி வலம் வந்ததில் இந்துவுக்கும் மனசு வருத்தம். ஒரு வாரம் என்னிடம் பேசவில்லை.

"நாளைக்கு நான் செத்துப் போயிட்டா கூட இப்படித்தான் இருப்பீங்களா?" என்றாள் திடீரென்று ஒருநாள்.

இதற்கு நான் என்ன பதில் சொல்ல?

காற்று ஒருமுறை வேகமாக சுழன்று அடித்ததில் ஜன்னல் கதவு படீரென சப்தமெழுப்பியது. பழைய நினைவிலிருந்து மீண்டேன். அம்மா இறந்த அன்று கொட்டிய மழை இன்றுதான் மீண்டும் தலைகாட்டியிருக்கிறது.

"திவா...!"

உள்ளேயிருந்து அம்மாவின் குரல் மானசீகமாய்க் கேட்டது. அவ்வளவுதான். அடுத்த வினாடி என்னுள் அழுகை வெடித்து, கண்ணீர் வெள்ளமாய்ப் பிரவாகிக்க; நிற்க முடியாமல் சரிந்தேன். ○



☒ மைசூர் மை கட்டுரை, அதன் அருமை, பெருமைகளை வெளிப்படுத்தியது. முதன் முதலாக கல்கி மூலம்தான் நான் இந்தத் தகவல்களைத் தெரிந்து கொண்டேன் என்பது உண்மை! அந்த மையின் தனித் தன்மையால் நாட்டிற்கே பெருமை.

லால்குடி, எம். இராஜேந்திரன்.

☒ அரசியல்வாதிகள் தேர்தல் நிதி என்ற பெயரில் தொழிலதிபர்களிடம் பணம் (லஞ்சம்) பெறுவதைத் தடுக்க ஒரே வழி தேர்தல் சீர்திருத்தம்தான் என்ற தலையங்கம் அருமை.

மேலப்பாதி, எஸ். நாகராஜன்.

☒ வாசகர்கள் மேல் உங்களுக்கு ஏற்பட்டுள்ள 'திமிர்'க் கரிசனத்தில் புல்லரித்துப் போய் விட்டோம்!

திருவானைக்காவல்,
எஸ். கௌரிலக்ஷ்மி.




☒ கங்குலியின் பேட்டி படித்தேன். இரண்டாவது கேள்விக்கான பதிலில் 'உள்ளதைச் சொன்னால் எப்பவும் எரிச்சல்தான்' என்று கூறியவர், நக்மா பற்றிய கடைசிக் கேள்வியில் தமக்கும் அப்படித்தான் இருக்கும் என்பதை நிரூபித்து விட்டாரே!

மங்கைநல்லூர், துர்காதேவி.

☒ 'நூறு கோடியில் ஒருவன்' என்ற கதையை மிகவும் ரசித்துப் படித்தேன். 'வாக்காளர்களுக்கு அடையாள அட்டை" என்று நடக்கும் கூத்தைப் பல கட்டுரைகளில் விமர்சிக்கலாம். ஆனால் அவை எல்லாம் செய்வதற்கு மேல் அச்சிறுகதை அதை

# ஓடக்காரர் ராமதாஸ்!

நன்றாகவே நையாண்டி செய்திருக்கிறது.

சென்னை - 87, கேசி.

☒ வரப்போகின்ற தேர்தலில் எல்லா வாக்காளர்களுக்கும் அடையாள அட்டைகள் வழங்கப்படாத நிலையில், ஏதாவது நிருபணச் சான்றுடன் வோட்டுப் போட அனுமதிக்கப் படலாம் என்று தேர்தல் அதிகாரிகள் தரப்பில் இருந்து தகவல் வந்துள்ளது. அது சரி... இதற்கும் ஒரு முக்கியமான அடிப்படைத் தேவை இருக்கிறதே... அதுதான் வாக்காளர் பட்டியல். இந்தப் பட்டியலே ஒழுங்காக இல்லாதபோது, வாக்காளர்கள் மேலும் ஏமாற்றம்தானே அடைய நேரிடும்? வாக்காளர் பட்டியல் கவனத்துடன் தயாரிக்கப்பட்டு- சரி பார்க்கப்பட்டு - ஒழுங்கான நிலையில் பராமரிக்கப்பட்டால் வாக்குப்பதிவுக்கும் நல்லதுதானே? வாக்காளர்களின் இந்த எதிர்பார்ப்பைத் தேர்தல் துறையினர் புரிந்து கொண்டு செயலாற்றுவார்களா?

மடிப்பாக்கம், வே. க. ஸ்ரீதரன்.

☒ கால வெள்ளத்தில் கரை சேருவதெப்படியென்று கற்ற, தந்திரமான ஓடக்காரர் ராமதாஸ். தேர்தல் தோறும் புதிய கூட்டணியில் சேர்ந்து பதவியில் உட்காருவதையே இலட்சியமாகக் கொண்டவரிடம் தனித்தன்மையிருக்க வாய்ப்பில்லை. என்னதான் பொய்யான தகவல்களை மூடிமறைக்க முயன்றாலும் ராமதாஸின் பா.ம.க.வும் ஒரு ஜாதிக்கட்சிதான் என்பதை அவருடைய சொற்களேக் காட்டிக் கொடுத்து விட்டன.

வெள்ளங்குளி, நெல்லை கிருஷ்ணன்.

☒ எந்த ஜாதியும் மதமும் தனித்து வாழ்ந்திட முடியாது! உலகத்துடனும் ஊருடனும் ஒத்துப் போக வேண்டும். இதுதான் நெறிமுறை. இது அரசியல்வாதிகளுக்குத் தெரியாததும் இல்லை. சுயநலம் கொண்டு ஜாதியுணர்வு வளர்கின்றனர்.

கோவை - 6, பி. தங்கவேல்.

# இந்தி-ஆங்கிலம் மொழி பெயர்ப்பாளர் முதுநிலைப் பட்டயப் பயிற்சி

# Post Graduate Diploma in Translation (Hindi-English)

## (அஞ்சல் வழிக் கல்வி)

உலகமே ஒரு சிறு கிராமம் போல் ஆகி விட்டது. போன நூற்றாண்டு ஆரம்பத்தில் கூட, இந்தியாவின் ஒரு முனையிலிருந்து மறுமுனைக்குத் தகவல் அனுப்ப பல வாரங்கள் ஆகுமாம். இன்று பல கோடி பெருமானமுள்ள வியாபாரங்கள் கண் இமைக்கும் நேரத்தில் நிச்சயிக்கப்பட்டு விடுகின்றன.

இரயில் பெட்டிகளில் ஆயிரக் கணக்கில் மக்கள் போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருக்கின்றனர். சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் வண்டியில் ஏறி அமர்ந்தால் சரியாக 36 மணி நேரத்தில் காஷ்மீர் சென்று அடைந்து விடுவோம். இதற்குள் எண்ணிலடங்கா பல பெரிய- சிறிய இரயில் நிலையங்களைக் கடக்கிறோம். பல மொழிகள், பலவித உணவுகள், பலதரப்பட்ட மக்கள். சில இடங்களில் பேசும் மொழிகள் நமக்குத் தெரிந்த மொழிகளாக உள்ளன. பல இடங்களில் பேசும் மொழிகள் நமக்குத் தெரியாமல் உள்ளன. அப்போது, 'அட, இவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று நமக்கு யாராவது மொழி பெயர்த்துக் கூற மாட்டார்களா' என்று நினைக்கிறோம்.

'மொழி பெயர்ப்பு' என்பது ஒரு சிறப்பான கலை. 'என்ன, இரண்டு மொழிகளை ஓரளவு அறிந்திருந்தால், இதிலிருந்து அது, அதிலிருந்து இது என்று தோசை திருப்புவதுபோல் திருப்புவதுதானே மொழி பெயர்ச்சி' என்று சிலர் கருதலாம். ஆம்! மொழி பெயர்ச்சிக்கு இரு மொழிகளின் அறிவு வேண்டுமே! ஆனால் அது மட்டும் போதாது. ஒவ்வொரு மொழிக்கும் ஒரு கலாச்சாரம் உண்டு, பக்குவம் உண்டு, பதம் உண்டு. அதைப் புரிந்து கொண்டு மொழி பெயர்க்க வேண்டும்.

பல திரைப்படங்கள் ஒரு மொழியில் மிகப் பிரபலமாகி பெரும் பொருளை ஈட்டித் தருகின்றன. அவையே மற்ற மொழிகளில் செல்லும்போது, சில நேரங்களில் எதிர்பார்த்த அளவு வெற்றிகளைத் தருவதில்லை. இதற்குக் காரணம் என்னவென்று ஆராய்ந்தால், ஒரு கருத்து தெரியவரும் - அதாவது மொழிபெயர்ப்பாளர் எந்த மொழியில் மொழிபெயர்க்கிறாரோ, அம்மொழியில் சிறப்பான ஆற்றலைப் பெற்றிருப்பதோடு, அம்மொழி பேசும் இடத்தின் கலாச்சாரம், இலக்கியப்போக்கு, இதிஹாசம் ஆகியவற்றையும் அறிந்திருக்க வேண்டும். அப்போதுதான் மொழிபெயர்ப்பு வெற்றிகரமானதாக அமையும்.

**சில இடங்களில் பேசும் மொழிகள் நமக்குத் தெரிந்த மொழிகளாக உள்ளன. பல இடங்களில் பேசும் மொழிகள் நமக்குத் தெரியாமல் உள்ளன. அப்போது, 'அட, இவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று நமக்கு யாராவது மொழி பெயர்த்துக் கூற மாட்டார்களா' என்று நினைக்கிறோம்.**

"Warm Welcome" என்பதைச் 'சூடான வரவேற்பு' என்றும் "Please take your seat" என்பதை 'உங்கள் இருக்கையை எடுத்துக் கொள்ளுங்கள்' என்றும் மொழி பெயர்த்தால் எப்படி இருக்கும்? சில சொற்கள் ஆங்கிலத்தில் சொல்லப்படும் போது பெருமையாக இருக்கும். அதை அப்படியே மொழிபெயர்த்து உபயோகித்தால், மற்றவர்



"Warm Welcome" என்பதைச் 'சூடான வரவேற்பு' என்றும் "Please take your seat" என்பதை 'உங்கள் இருக்கையை எடுத்துக் கொள்ளுங்கள்' என்றும் மொழி பெயர்த்தால் எப்படி இருக்கும்?

களின் கோபத்துக்கு ஆளாக வேண்டிய சூழல் சில நேரங்களில் ஏற்பட்டு விடுகிறது.

மொழி பெயர்ப்பு என்பது மிகவும் சுவாரசியமான கலை. மொழி பெயர்ப்பாளர்களுக்கு வேலை வாய்ப்புகளும் அதிகம். பல மத்திய அரசு நிறுவனங்களுக்கு மொழி பெயர்ப்பாளர்கள் தேவைப்படுகின்றனர். முக்கியமாக இந்தி- ஆங்கிலம், மற்றும் ஆங்கிலம்-இந்தி மொழி பெயர்ப்பாளர்களுக்கு வேலை வாய்ப்புகள் அதிகமாக உள்ளன. அரசு நிறுவனங்களைத் தவிர, விளம்பர நிறுவனங்கள், தூர்தர்ஷன், ஆகாஷ்வாணி மற்றும் பல பத்திரிகை அலுவலகங்களில் இந்தி - ஆங்கிலம் மற்றும் ஆங்கிலம்- இந்தி மொழி பெயர்ப்பாளர்கள் தேவைப்படுகிறார்கள்.

இதை மனதில் கொண்டு பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கப் பயிற்சி மையம், சென்னை (State Bank of India Officers' Association Institute, Chennai) முதுநிலை மொழிபெயர்ப்பாளர் பட்டயப் பயிற்சி (இந்தி-ஆங்கிலம்) (Post Graduate Diploma in Translation) (Hindi-English) நடத்தி வருகிறது.

**தகுதி:-**

ஏதாவது ஒரு இளங்கலைப் பட்டத்துடன் இந்தியை இரண்டாவது மொழியாக எடுத்துப் படித்திருக்க வேண்டும்.

அல்லது

ஏதாவது ஒரு இளங்கலைப் பட்டத்துடன் தட்சிண பாரத் இந்தி பிரசார் சபையின் விஷாரத் சான்றிதழ் பெற்றிருக்க வேண்டும்.

அல்லது

ஏதாவது ஒரு இளங்கலைப் பட்டத்துடன் இரண்டாவது மொழி இந்திக்குச் சமமான வேறு ஏதாவது இந்தி பயிற்சியில் சான்றிதழ் பெற்றிருக்க வேண்டும்.

**பயிற்சி காலம்:**

ஓராண்டுக் காலம். ஜூன் முதல் மே வரை

**பயிற்சிக் கட்டணம்:**

இப்பயிற்சிக்கு ஓராண்டுக்கான கட்டணம் ரூ. 1000, தேர்வுக் கட்டணம் ரூ. 300/-

**இதழியல் முதுகலைப் பட்டயப்படிப்பு:**

**(Post Graduate Diploma in Journalism)**

இதே நிறுவனம் அஞ்சல் வழியில், இந்தி மொழி வழியாக இதழியல் படிப்பிலும் ஓராண்டு முதுகலைப் பட்டயப் பயிற்சியை நடத்தி வருகிறது. இதற்கான கட்டணம் ரூ. 1000, தேர்வுக் கட்டணம் ரூ. 400/-

**பயிற்சி முறை:**

மாதந்தோறும் பாடங்கள் தபால் மூலம் அனுப்பப்படும். நேர்முக வகுப்புகள் நடத்தப்படும். தேர்வில் வெற்றி பெற்றவருக்கு முதுகலைப் பட்டய சான்றிதழ் வழங்கப்படும்.

**தேர்வு மையங்கள்:-**

இப்பயிற்சிகளுக்கான தேர்வுகள் இந்தியாவின் 15 மையங்களில் நடத்தப் படுகின்றன. தமிழ்நாட்டில் மூன்று இடங்களில் (சென்னை, கோவை, திருச்சி) நடத்தப்படுகின்றன.

**விண்ணப்பிக்க வேண்டிய முகவரி:**

விண்ணப்பப்படிவம் பெறுவதற்கு **'SBIOA Institute, Chennai'** என்ற பெயருக்கு ரூ.75/-க்கான டிமாண்ட் டிராப்ட் அல்லது உள்ளூர் காசோலை கீழ்கண்ட முகவரிக்கு சுய விலாசமிட்ட, தபால்தலையுடன் (ரூ.9) கூடிய உறையை சேர்த்து அனுப்ப வேண்டும் அல்லது நேரிலும் வந்து பெறலாம்.

The Executive Director,
State Bank of India Officers' Association Institute,
Department of Hindi Correspondence Education,
229, N.S.C. Bose Road,
P.B. No. 1279, II Floor,
Chennai - 600 001.
(Phone : 5340226)

**கடைசி தேதி: விண்ணப்பங்கள் மே 30க்குள் அனுப்ப வேண்டும்.**



வேலைக்குப் போகும் நடுத்தரப் பெண்களுக்கே உரிய பிரச்னைகள் மாலதிக்கும் இருந்தன. வேலையில்லாத கணவன், சின்னக் குழந்தை, வாடகை வீடு, பிளஃப் லோன், இத்யாதி... இத்யாதி....

ஆனால் இன்றைய பிரச்னை அது அல்ல, மேனேஜரிடமிருந்து வந்த ஃபோன். தலைமை அலுவலகத்திலிருந்து பேசினார்.

" 'சுப்ரீத் மோட்டார்ஸ்' ஃபைலைப் பார்த்து ரிப்போர்ட் தயார் பண்ணணும். வெரி அர்ஜெண்ட். ஏழு மணி ஆனாலும் வெயிட் பண்ணுங்க... வந்துடறேன்." விக்கித்துப் போனது மாலதிக்கு.

'போன வாரமே அது பற்றிச் சொல்லியிருந்தார். ஆனால் வேலைகளுக்கு இடையே மறந்து விட்டது. இனி, ஃபைலைப் படித்து, ரிப்போர்ட் எழுதி, டைப் செய்து... குறைந்தது இரண்டு மணி நேரமாவது ஆகுமே!'

கவலை பிடித்துக் கொண்டது. வீட்டிலும் நிலைமை சரியில்லை. குழந்தை திவ்யாவுக்கு ஜுரம். இன்றைக்காவது டாக்டரிடம் கூட்டிப் போகலாம் என்று இருந்தாள்.

'பேசாமல் மேனேஜருக்கு ஃபோன் செய்து, நிலைமையைச் சொல்லி விடலாமா?' என்று நினைத்தாள்.

'இது இன்கிரிமெண்ட் நேரம்... மேனேஜர் சரியான சைக்கோ. கோபம் வந்தால் சம்பளத்தில்தான் கையை வைக்கும்...' என்று தோன்றியதால் அந்த எண்ணமும் கழன்று கொண்டது.

'அம்மா... தாயே... கருமாரி... என்னை எப்படியாவது இந்த சிக்கல்லே இருந்து மீட்டுடும்மா...' உருகி வேண்டினாள். மனசுக்குள் 'கருமாரி காப்பு' சுலோகம் ஓடிக் கொண்டே இருக்க, மானசீகமாக விழுந்து விழுந்து கும்பிட ஆரம்பித்தாள் மாலதி.

மாலை ஆறு மணி.




வெளியே வீசிய பெருங்காற்றில் ஜன்னல் கதவு தடாலென்று அடித்துக் கொள்ள... ஜில்லென்று வீசியது குளிர்காற்று.

'தட்' என்று முதுகில் விழுந்தது மழைத்துளி. தேங்காய்த் துருவல் போல பூந்தூறல்... யாரோ சல்லடை பிடித்தது போல ஒரே அளவாய் சரிகை இழைகள். தன் மனநிலைக்குச் சம்பந்தமேயில்லாத காட்சி என்றாலும் மாலதிக்கு மழையைப் பார்க்கப் பிடித்தது.

"கிணு... கிணு..." கீழ் ஸ்தாயியில் அழைத்தது டெலிஃபோன். எதிர்முனையில் மேனேஜர்.

"இங்க மழை பெய்யுது. இப்ப கிளம்ப முடியாது போல இருக்கு... நீங்க வீட்டுக்குப் போங்க. நாளைக்குப் பார்த்துக்கலாம்..."

'கருமாரியம்மா... காப்பாத்திட்டேடி....!'

"ஆத்தாளை.... அக்னி நிறத்தாளை..." முணுமுணுத்தவாறே பஸ் பிடிக்க ஓடினாள் மாலதி.

**வருண ஜபத்தால் மழை**

சென்னை, ஏப்ரல் 15. மயிலை, ஸ்ரீ கணபதி பிரவசன மண்டபத்தில் வருண ஜபம் செய்து வந்தார்கள். நேற்று மாலை ஆறு மணி அளவில் மழை பெய்து, கோடை வெம்மையைத் தணித்தது..." .... செய்தி மறுநாள் காலை பத்திரிகையில் எட்டாவது பக்கத்தில் மிகச் சிறிய கட்டத்தில் இடம் பெற்றிருந்தது.

மாலதி மட்டும் அந்தச் செய்தியைப் படிக்கவேயில்லை!

தேன் கூடு!

# ஹலோ, கவனியுங்கள்!

## வீர அனுமார், சித்தி கணபதி!





கோலாலம்பூரில் 'பிரிக்பீல்ட்ஸ்' என்னுமிடத்தில் குடி கொண்டிருக்கும் 'ஸ்ரீ வீர அனுமான்' திருக்கோயிலில் மூலஸ்தானத்தை நடுநாயகமாக ஸ்ரீ அனுமனும் இருபுறமும் ஸ்ரீ கணபதியும், ஸ்ரீ வீரமாகாளியம்மனும் அலங்கரிக்கின்றனர். சிறிய இடமெனினும் கீர்த்தி மிக்கது.

மார்கழி மூலம்–பிறந்த ஜெயந்தியைக் கொண்டாடுவோம். இங்கே இக் கோயிலின் கும்பாபிஷேக தினத்தன்று வருடா வருடம் திருவிழாவெடுத்து பெருமகிழ்வைத் தரும் சிறப்பு அலாதியானது. வடைமாலை, வெற்றிலை மாலை, துளசி மாலையோடு 'விழா நாயகனு'க்கு அன்று யாகம் வளர்த்து அன்னதானமளிப்பதும் தேர் பவனியும் கண்கொள்ளாது. அன்று 'பால்குடம்' எடுப்பதும் விசேஷம்.

ஒரு நள்ளிரவு உறங்கிக் கொண்டிருந்த மாயாண்டி குருக்களின் அறைக் கதவை யாரோ தட்டியது போல, எழுந்து பார்க்க, கோயிலின் பின்புறம் ஓடும் ஆற்றில் ஓர் இடத்தில்– திருக்கோயிலை ஒட்டினாற்போல ஸ்ரீ கணபதி காட்சிதர, மற்றவர்களையும் எழுப்பிச் சென்று பார்க்கையில்– அவ்விடத்தில் இறங்கிப் பார்த்ததில் அற்புத ஸ்ரீ கணபதியைக் கண்டெடுத்தனர். இப்படத்தில் உள்ள அவ்விசேஷ கணபதி–

பஞ்சமுகத்தோன்–
முக்கண்ணன்–நெற்றிக் கண்ணொன்று
தலை இரு கொம்புடையான்...!

இருகரங்கள் சிரம்மேற்கரங்களாய்– உலோகமுமின்றி, மண்ணுமின்றி, சலவைக்கல் போலவும் அல்லாது ஒரு விசேட விக்ரகம்.

– வல்லிமகள்,
மலேசியா.

## கவலையை விடுங்க!

ஒருவாரம் செய்யும் வேலையைவிட ஒரு நாள் எதைப் பற்றியாவது கவலைப்படுவதே அதிகமான அளவுக்குத் தளர்ச்சியைத் தந்துவிடும். கவலைப்படுவது நம்முடைய உடம்பு முழுவதையும் தலைகீழாக ஆக்கிவிடும்.

– ஜேம்ஸ் ஆப்ரி
தகவல் : அ. ராஜா ரஹ்மான்

## வண்ணப் பறவைகளைக் கண்டு...

சில பறவைகள் கடுமையாக உழைத்துச் சாப்பிட வேண்டும் என்ற கொள்கை உடையவை.

தென் மாவட்டங்களில் இத்தகைய குணம் கொண்ட பறவை இனம் உண்டு. அதற்கு 'ஆலா' எனப் பெயர்.

அது சதா துறுதுறுவென அங்கும் இங்கும் பறந்தபடி இருக்கும்.

அதனால்தான் சதா அங்கும் இங்கும் ஓடிக் கொண்டிருப்பவர்களை 'ஆலாப் பறக்கிறான் அவன்' என்கிறோம்.

ஓய்வு இல்லாமல் உழைக்க ஓடித்திரிபவர்களே ஆலாய்ப் பறக்கும் மனிதர்கள்.

- வலம்புரி ஜான் கூறக் கேட்டது:
பத்மாதேசிகன்

தேன் கூடு!

தன் கூடு!

தேன் கூடு!

இப்பொழுது தொலைபேசி துறை 'பாரத் சஞ்சார் நிகாம்' என்ற பெயரில் இயங்கி வருகிறது. இப்படி மாற்றியமைக்கப்பட்டவுடன் புதிய டெலிபோன் டைரக்டரி வழங்கப்பட்டுள்ளது. இதை வழங்கிய இருமாதத்துக்குள் அநேக தொலைபேசி எண்கள் மாற்றியமைக்கப்பட்டுள்ளன. இப்படி தொலைபேசி எண்கள் மாற்றப்படும்போது எதற்காக அவசரப்பட்டுப் புதியன வழங்கப்படவேண்டும்? இதனால் நம்முடைய வரிப் பணமும் தொலைபேசி சந்தாதாரர்களின் பணமும்தான் வீணடிக்கப்பட்டிருக்கிறது.

— நளினி ராமநாதன்,
சென்னை — 17.





## 'ஸ்பெஷல் கவனிப்பு!'

தேன்கூடு பகுதியில் இடம்பெறும் துணுக்குகளுக்கு 'ஸ்பெஷல் கவனிப்பு' கிடைக்கும். பேனாவைத் தீட்டிக் கொண்டு புதுசு புதுசா எழுதுங்க...!

## 'இசைபட' வாழ்வோம்!

சங்கீதத்தைப் போல் உடலின் எல்லா உறுப்புகளுக்கும் பயன் தருவது எதுவும் இல்லை.

– டாக்டர் லீக்

இசைப் பயிற்சியால் நோய் அண்டாமல் தப்பிக்கலாம். ஒழுக்க நெறியையும், பண்பாட்டையும் வளர்த்துக் கொள்ள இசை பயன்படுகிறது. இசை ஆன்மாவை உயர்த்தும்.

– பித்தகோரஸ்

மருந்தைவிட இசை மேலானது. எனவே வலி நிவாரணிகளுக்குப் பதில் இசையையே எழுதிக் கொடுக்கிறேன்.

– டாக்டர் கிளைட்நாஷ்

இசை, நோயின் போது கடுமையான சிக்கல்களைத் தவிர்க்க உதவுகிறது. நோயாளிகள் விரைவில் நலம் பெறுகின்றனர்.

– டாக்டர் மாத்யூ லீ.

– 'தாவர உணவும் இயற்கை நல்வாழ்வும்' நூலிலிருந்து தகவல்: ந.க. பரமசிவம்





# பிரசாந்த் நடத்திவைத்த டும்டும்!

காட்சி : 1

நிஜப்பாத்திரங்கள் : சரவணன், அமுதா.

இடம் : திருச்சி.

ஒரே தெருவில் எதிரெதிர் வீட்டில் வசித்து வரும் சரவணன், அமுதா இருவரும், வண்ணத்துப் பூச்சிகளைத் துரத்தி விளையாடிய வயதிலிருந்தே நண்பர்கள். ஒன்றாம் வகுப்பில் தொடங்கி, ஒரே கல்லூரியில் ஒரே கோர்ஸில் படித்துக் கொண்டிருப்பது வரை இருவருக்கிடையிலும் இடைவெளி இல்லாத நட்பு.

"நல்ல ஃப்ரண்ட்ஷிப்பா!" என்று நான்கு பேர் பாராட்டிய இவர்களது கண்ணியமான நட்பின்மீது கல்லூரி இறுதியாண்டில் விழுந்தது இடி. இருவருக்குமே பெற்றோர் வரன் பார்க்கத் தொடங்கியதை நினைத்துப் பரஸ்பரம் பயந்து போனார்கள். ஷிப்ட் முறையில் அழுது தீர்த்த இருவரும் ஆறுதல் தேடி, கல்லூரிக்கு அருகிலிருந்த தியேட்டரில் அடைக்கலம் புகுந்தார்கள். அங்கே பிரசாந்த் நடித்த 'பிரியாத வரம் வேண்டும்' படம் ஓடிக் கொண்டிருந்தது.

இணை பிரியாத நண்பர்களாகப் பழகி வரும் ஆண், பெண் இருவருக்குள்ளும் இருக்கும் நட்பு, காதலாகக் கனியலாம். கனிந்த காதலை யார் முதலில் சொல்வது? அப்படி முந்திக் கொண்டால் தூய நட்பை துஷ்பிரயோகம் செய்துவிட்டதாக மற்றவர் நினைத்தால்.., இருதலைக் கொள்ளி எறும்பாகத் தவித்தார்கள் இருவரும். இதுதான் அந்தப் படத்தின் கதை. படத்தைப் பார்த்த அமுதா, சரவணன் இருவருக்குள்ளும் புதைந்து கிடந்த காதல் தியேட்டரிலேயே பூத்தது. படம் முடிந்து வீட்டிற்குப் போகாமல் பிரசாந்தைத் தேடி சென்னைக்கு வந்தனர்.

காட்சி : 2

இடம் : பிரசாத் ஸ்டுடியோ, சென்னை.

முக்கிய பாத்திரம் : பிரசாந்த்

'ஸ்டார்' படப்பிடிப்பில் ஜோதிகாவுடன் ஜோடி சேர்ந்து ஆடிவிட்டு பிரேக்கில் வந்த பிரசாந்த் முன்பு சரவணன், அமுதா இருவரும் ஆஜரானார்கள். "எங்களுக்குள் இருந்த காதலைக் கண்டுபிடித்துக் கொடுத்தது உங்கள் படம்தான். கல்யாணத்தையும் நீங்கள்தான் செய்து வைக்க வேண்டும்." ஐந்நூறு கிலோ மீட்டர் அப்பாலிருந்து வந்தவர்கள் அழுதபடி சொன்னார்கள். பிரசாந்திற்கு அதிர்ச்சியும் மகிழ்ச்சியும். களத்தில் இறங்கினார். காதல் ஜோடியின் பெற்றோருடன் ஃபோனில் தொடர்பு கொள்ள, எதிர்முனையில் இன்ப அதிர்ச்சி... பிள்ளைகள் பாதுகாப்பாக இருப்பது + பிரசாந்தே நேரடியாக பேசுவது. திருச்சியிலிருந்தே பெற்றோர் பச்சைக்கொடி காட்ட, பிரசாத் ஸ்டுடியோவின் வரலாற்றில் ஒரு நிஜத் திருமணம்! காதல் தம்பதிகளை திருச்சி அனுப்பிவிட்டு நின்ற பிரசாந்த்தை மடக்கினோம்.

"போலீஸ் ஸ்டேஷனில் நடக்க வேண்டிய கல்யாணத்தை நடிகர் நடத்தி வைக்கலாமா?" "இருவரும் மேஜர். பெற்றோர்களின் சம்மதம். அப்புறம் நீங்கள் என்ன நான் என்ன... என்னை நம்பி வந்தவர்களை எப்படி ஏமாற்றுவது?" என்கிறார் இந்த பேச்சிலர். நிஜமாகவே ஒரு சூப்பர் க்ளைமாக்ஸ்தான்!

- விஷுவல்தாசன்

# ஊட்டியில் சட்டமன்றம்!

“கும்பி எரியுது; குடல் கருகுது; கோலோச்சிகளே... உங்களுக்குக் குளு, குளு ஊட்டி ஒரு கேடா?” என்று 1957 சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.வினர் ஊரெல்லாம் போஸ்டர் அடித்து ஒட்டினார்கள். எதற்காக அந்தப் போஸ்டர்?

“வெள்ளைக்காரர்கள் நம்மை ஆண்ட போது கோடைக் காலத்தில் உஷ்ணம் தாங்க முடியாமல் கவர்னர் தனது பரிவாரங்களுடன் மலைவாச ஸ்தலங்களுக்குப் போய் விடுவார். பெரும்பாலான அதிகாரிகளும் வெள்ளைக் காரர்களாக இருந்ததால், அவர்களும் கவர்னரைத் தொடர்ந்து அங்கே போய் விடுவார்கள். தமிழகத்தைப் பொறுத்தவரை வெள்ளைக்காரர்கள் ஊட்டியை மிகவும் விரும்பினார்கள். கோடையில் அரசாங்கமே ஊட்டியில் தான் நடந்தது.

“தில்லியில் இருக்கும் வைஸ்ராய் சிம்லாவுக்குப் போவார். சுதந்தரம் பெற்ற பிறகு, 1952ல் முதல் பொதுத் தேர்தல் நடந்தது. ராஜாஜி முதல்வரானார். 1953ல் ஊட்டியில் கோடைக்கால சட்டமன்றத் தொடர் நடந்தது. வெள்ளைக்காரர்கள் ஏற்படுத்தி வைத்த பாரம்பரியத்தின் தொடர்ச்சி இது என்று சொல்லலாம். இப்போது ஊட்டியில் உள்ள ‘தமிழகம்’ மாளிகை ‘அரன்மோர் ஹால்’ என்று அழைக்கப்பட்டது. ஜெய்ப்பூர் அரச குடும்பத்துக்குச் சொந்தமானது. அதை ஐந்து லட்ச ரூபாய்க்குத் தமிழக அரசு விலைக்கு வாங்கியது. அந்த அரன்மோர் மாளிகையில்தான் சட்டமன்றம் நடந்தது.



“பெரிய, பெரிய ஜாம்பவான்கள் உறுப்பினர்களாக இருந்தனர். குளிர்ச்சியான சூழலில் தென்னட்டி விஸ்வநாதனுக்கும், பி.ராமமூர்த்திக்கும் இடையே சூடான மோதல் நடக்கும். ராஜாஜி குறுக்கிட மாட்டார். ‘ஒருவரின் கேள்விக்கு மற்றொருவரே தக்க பதில் சொல்லும் போது நான் ஏன் குறுக்கிட வேண்டும்’ என்று கேட்பார். அந்த கால கட்டத்தில் உணவுப் பொருள்களுக்கு ரேஷன் இருந்தது. அரிசிக்குக் கடுமையான தட்டுப்பாடு. இதனால்தான் 1957ல் அப்படிப் போஸ்டர் போட்டது தி.மு.க.” என்கிறார் அப்போது ஆத்தூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினராக இருந்த காங்கிரஸ் தலைவர் எம்.பி. சுப்பிரமணியம்.

• பொன்னம்மாள்



• எம்.பி.சுப்பிரமணியம்



“ஊட்டியைப் பிரபலப்படுத்தி நிறைய சுற்றுலாப் பயணிகளைக் கவர வேண்டும் என்பது அரசின் நோக்கம். வருடத்துக்கு ஒரு முறை அங்கு, கவர்னர், முதல்வர் கேம்ப் அடித்து சட்டமன்றம் நடந்தால் மக்களின் பார்வை ஊட்டி பக்கம் திரும்பும். வி.ஐ.பி.க்களின் வருகையால் நிறைய ஹோட்டல்கள் மற்றும் வசதிகள் உருவாகும். அந்த நோக்கமும் இருந்தது” என்கிறார் 1957-62ல் எம்.எல்.ஏ.வாக இருந்த நிலக்கோட்டை பொன்னம்மாள்.

ஊட்டியில் சட்டமன்றம் நடந்தபோது பைகாரா, குந்தா நீர்மின் திட்டவேலைகள் நடந்து கொண்டிருந்ததாம். ஓய்வு நேரங்களில் முதல்வர் காமராஜ் அந்தப் பகுதிகளுக்கு விசிட் செய்து வேலைகளை முடுக்கி விடுவாராம். “மிகவும் ஆபத்தான பள்ளத்தாக்குப் பகுதிகளுக்குக் காமராஜருடன் சென்றது பனிச் சென்று நினைவில் இருக்கிறது” என்கிறார் பொன்னம்மாள்.

தி.மு.க.வின் கும்பி எரியுது போஸ்டருக்கு காமராஜ் பதில்தான் என்ன?

“எதிர்க்கட்சி ஆச்சே! எதாவது சொல்லணுமே!”

- கௌசல்யா

# உஷார்!

ஒலிம்பிக் உட்பட எல்லா போட்டிகளிலும் வெற்றிகளையும், பதக்கங்களைக் குவிப்பதில் ஜப்பானுக்கு நிகர் ஜப்பான்தான். ஆனால் டென்னிஸில்...?

ம்ஹூம்... ஒரு ஹிங்கிஸ் மாதிரியோ, அகாசி, சாம்ப்ராஸ் மாதிரியோ அல்லது நம்மூர் பயஸ் மாதிரியோ ஒரு சூப்பர் விளையாட்டு வீரர் ஜப்பானிலிருந்து ஏன் உருவாகவில்லை?

டேவிஸ் கோப்பை முன்னாள் கேப்டனும், தற்போதைய டேவிஸ் கோப்பை கேப்டன் ரமேஷ் கிருஷ்ணனின் தந்தையுமான ராமநாதன் கிருஷ்ணனிடம் இந்தக் கேள்வியைக் கேட்டோம்.

"ஜப்பான் ஒரு அட்வான்ஸ்டு கன்ட்ரி. உலகப் போருக்கு முன்னால், டென்னிஸில், ஜப்பான் கலக்கிக்கொண்டிருந்தது உண்மை. இரண்டு முறை இந்தியாவைத் தோற்கடித்திருக்கிறார்கள். அணுகுண்டு வீசப்பட்ட பின் ஜப்பான் முழுவதுமாக நசுங்கிவிட்டது. அதற்குப் பிறகு, ஒவ்வொரு துறையிலும் கடுமையான உழைப்பின் மூலம் முன்னேறி வருகிறது. டென்னிஸிலும் அப்படித்தான்.

"உலக டென்னிஸ் ரேங்கில் அவர்கள் நல்ல இடத்தில்தான் இருக்கிறார்கள். மற்ற விளையாட்டுகளில் அவர்கள் வெற்றிகளைக் குவிப்பது மாதிரி டென்னிஸிலும் விரைவில் குவிப்பார்கள். அமெரிக்கா, ஜெர்மனி, இந்தியா உட்பட பல நாடுகளை அவர்கள் வெல்வார்கள் என்று இப்போது கணிக்கப்படுகிறது. இந்தப் பயம் மற்ற நாடுகளுக்கும் இருக்கிறது என்பது மறுக்க முடியாத ஒன்று.

"டென்னிஸுக்கான டெக்னிக்கை அவர்கள் இப்போதுதான் கற்றுக் கொண்டு வருகிறார்கள். 1985-ம் ஆண்டிலிருந்து தொடர்ந்து இந்தியாவிடம் பதினாறு முறை ஜப்பான் தோற்றிருக்கிறது. என்றாலும் இப்போது நடந்த டேவிஸ் கோப்பைப் போட்டியில் பயஸ் போராடித்தான் வென்றிருக்கிறார். இதுவே அவர்களின் வருங்கால வெற்றியைத்தான் தெரிவிக்கிறது. நமது வீரர்கள் உஷாராக இருப்பது நல்லது!"-

— ஏக்ஜி

படம்: ஜரிஸ்



• ராமநாதன் கிருஷ்ணன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

